# தமிழில் தல புராணங்கள்



இரண்டாம் பகுதி

டாக்டர் வே.இரா.மாதவன்

# தமிழில் தலபுராணங்கள்

## (இரண்டாம் பகுதி)


டாக்டர் வே. இரா. மாதவன்

தமிழ்ப் பல்கலைக்கழகம்,

தஞ்சாவூர் – 5





சி-1, தமிழ்ப் பல்கலைக்கழகக் குடியிருப்பு வளாகம்

திருச்சி நெடுஞ்சாலை,

**தஞ்சாவூர் - 613 005.**

# BIBLIOGRAPHICAL DATA


| | |
|---|---|
| *Title of the book* | : Thamizhil Thalapuranangal (Sthalapuranas in Tamil - Part II) |
| *Author* | : Dr. V.R. MADHAVAN, M.A., B.Ed., Ph. Senior Lecturer, Dept. of Palmleaf Manuscripts, Tamil University Thanjavur - 613 005. |
| *Publisher and Copy right* | : Mrs. M. Uma Maheswari. Paavai Publications, C-1, Tamil University Staff Quarters Trichy High Road, Thanjavur - 613 005. |
| *Publication No.* | : 11 |
| *Language* | : Tamil |
| *Date of Publication* | : November 1995 |
| *Edition* | : First |
| *Paper used* | : 14.2 Kg White Printing |
| *Size of the book* | : 21 × 14 cms |
| *Printing types used* | : 10 Point |
| *No. of Copies* | : 1000 |
| *No. of Pages* | : 280 |
| *Price* | : Rs. 70-00 |
| *Printers* | : K.P.T. Offset Press Annamalai Nagar - 608 002 CHIDAMBARAM. |
| *Artist* | : Anandan |
| *Subject* | : A Detailed Study of Sthalapuranas in Tamil (Part - II) |

# முன்னுரை

சார்ந்த விருவல் வினைகளும் சாரித்து மாயப் பற்றறுத்து
தீர்ந்து தன்பால் மனம்வைக்கத் திருத்தி வீடு திருத்துவான்
ஆர்ந்த ஞானச் சுடராகி அகலம் கீழ்மே லளவிறந்து
நேர்ந்த வுருவா யருவாகு மிவற்றி னுயிராம் நெடுமாலே.

(திருவாய். 1.5 : 10)

தமிழில் தலபுராணங்கள் நூலின் இரண்டாம் பகுதி இப்பொழுது வெளிவரத் துணைநின்ற திருவருளை நினைந்து போற்றுகின்றேன்.

இதற்குமுன் வெளிவந்துள்ள முதற்பகுதியில், தமிழிலுள்ள சைவ, வைணவ தலங்களுக்குரிய புராணங்கள் அனைத்தும் தொகுக்கப்பெற்று, சோழநாடு, பாண்டி நாடு, தொண்டை நாடு. நடு நாடு, கொங்கு நாடு, மலைநாடு, துளுவநாடு வரையில் ஒவ்வொரு நாட்டிலுமுள்ள தலங்களுக்குரிய நூல்கள் தனித் தனியே ஆராய்ந்து கூறப்பெற்றுள்ளன.

இரண்டாம் பகுதியாக வெளிவரும் இந்நூலில், முதலில் வடநாட்டுத் தலபுராணங்களும், ஈழ நாட்டுத் தலபுராணங்களும் விரிவாக ஆராயப் பெறுகின்றன. அடுத்து, தெலுங்கில் காணும் சில தலபுராணங்களும் குறிப்பிடப் பெறுகின்றன. தமிழ்த் தலபுராணங்களின் பொதுவான போக்கும், புராணங்களில் சிறப்பிடம் பெறும் நிலையும் ஆராய்ந்த பின்னர், சைவ, வைணவ புராணங்களின் நிலைகள் அளவிட்டுரைக்கப் பெறுகின்றன. தலபுராண நூலாசிரியர் மற்றும் உரையாசிரியர் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளும் தனியே தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன.

ஓலைச்சுவடிகளில் காணலாகும் தலபுராணங்கள், பழைய தலபுராணப் பதிப்புகள் பற்றியும், இந்நூல்கள் பற்றிய ஆய்வுகள் குறித்தும் விளக்கிய பின்னர், தலபுராண நூல்களின் அருமைப்பாடும் தேவையும் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. தலபுராணங்களின் நோக்கும் பயனும் நிறைவாக அமையும் பகுதியாகும்.

தமிழில் அறியலாகும் தலபுராண நூல்களின் விரிவான பட்டியல் - செய்யுள் மற்றும் உரைநடையிலான அனைத்து நூல்களும் தொகுத்து இணைக்கப் பெற்றுள்ளன. இவை ஆய்வாளர் அனைவருக்கும் மிகவும் பயனுடையதாகும்.

இந்நூலினை மிக நல்ல முறையில் அச்சிட்டளித்த சிதம்பரம் கே. பி. டி. அச்சக உரிமையாளர் திருமிகு கே. ஆர். சேரன், எம். ஏ., அவர்கட்கும், அச்சகப் பணியாளர் அனைவருக்கும் நன்றிகள் பல உரித்தாகும்.

தமிழகத் திருக்கோயில்களின் பாதுகாப்பிற்காகவும் மேம்பாட்டிற்காகவும் நிறைந்த நிதியுதவிகளை நல்கிச் சிறப்பித்து வரும் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கட்கும், தமிழக அரசுக்கும், இந்து அறநிலையத்துறையினருக்கும் இவ்வேளையில் நாம் மிகுந்த நன்றிப் பாராட்டக் கடமைப் பட்டுள்ளோம்.

திருக்கோயில் வழிபாட்டிற்குத் துணையாக 'விளக்கும் வகையில் உருவாக்கப் பெற்றிருக்கும் 'தமிழில் தல புராணங்கள்' என்னும் இத்தகைய நூல்களை எல்லாத் திருத்தலங்களிலும் போற்றிப் பாதுகாக்க வேண்டுமென விழைகிறேன். தமிழ்ப் பெருமக்களும், ஆன்மீகச் சான்றோரும், திருமடங்களும், ஆய்வாளர்களும் இதனை மிகவும் வரவேற்று மகிழ்வார்கள் என நம்புகிறேன்.

இவையன்றே நல்ல இவையன்றே தீய
இவையென் றிவையறிவ னேலும் - இவையெல்லாம்
என்னா லடைப்புநீக் கொண்ணா திறைவனே
என்னால் செயற்பால தென்.

(பெரிய திருவந்தாதி. 3)

அன்பன்

வே. இரா. மாதவன்

# உள்ளுறை

பக்கம்

முன்னுரை

1. வடநாட்டுத் தலபுராணங்கள் 1–16
2. ஈழ நாட்டுத் தலபுராணங்கள் 17–33
3. தெலுங்கில் தலபுராணங்கள் 34–36
4. பிற சமயங்களில் தலபுராணங்கள் 37–40
5. தமிழ்த் தலபுராணங்களின் பொதுவமைப்பும் சிறப்புக் கூறுகளும் 41–85
6. சைவ புராணங்களும் வைணவ புராணங்களும் 86–90
7. தமிழ்த் தலபுராணங்களும் வடமொழிப் புராணங்களும் 91–99
8. தலபுராண நூலாசிரியர்கள் 100–136
9. தலபுராண உரையாசிரியர்கள் 137–137
10. தலபுராணச் சுவடிகள் 138–140
11. தலபுராணப் பதிப்புகள் 141–157
12. தமிழில் தலபுராண ஆய்வுகளும் நூல்களும் 158–159
13. தலபுராணங்களின் புறத்துப் பிறந்த நூல்கள் 160–164
14. தலபுராணங்களின் நோக்கமும் பயனும் 165–184

*பின்னிணைப்புகள்:*

1. தமிழில் தலபுராணங்கள்–செய்யுள் நூல் வரிசை 185–209
2. தமிழில் தலபுராணங்கள்–உரைநடை நூல் வரிசை 210–239
3. தமிழிலுள்ள சில தலபுராணங்களும் அவற்றின் வடமொழி மூலங்களும் 240–246
4. பயன்பட்ட நூல்கள்–தலபுராணங்கள் 247–258
5. துணை நூல்கள் 259–264
6. சிறப்புப்பெயரகராதி 265–274

# வடநாட்டுத் தலபுராணங்கள்

தமிழ்நாட்டு எல்லைக்கு வடக்கே திருவேங்கடம் முதல் இமய மலை வரையிலான பரந்த நிலப்பகுதிகள் அனைத்தும் வடநாட்டுப் பகுதி களாக எண்ணப்படுகின்றன. இவ் வடநாட்டுப் பகுதிகளெங்கும் சைவம், வைணவம் ஆகிய சமயக் கோயில்கள் நிறைந்த ஊர்கள் பல உள்ளன. இவற்றுள் பல மிகவும் புகழ் வாய்ந்தவை, புராதனச் சிறப்பும் வரலாறு களும் கொண்டவை. வேதம், புராணம், இதிகாசம் ஆகியவற்றில் குறிக் கப்பெற்ற பல தலங்கள் இவ்வடநாட்டுப் பகுதியிலேயே இருப்பதும் சுட்டத்தக்கதாகும்.

வடநாட்டிலுள்ள சிவத்தலங்கள ஐந்து. அவை ஸ்ரீபர்ப்பதம் (ஸ்ரீசைலம், மல்லிகார்ச்சுனபுரம்), இந்திரநீல பருப்பதம், அநேகதங்காபதம், திருக்கேதாரம், நொடித்தான் மலை (ஸ்ரீகைலாசம்) என்பன. அங்குள்ள வைணவத் தலங்கள் பதினொன்று. அவை, திருக்கண்டமென்னும் கடிநகர் (தேவப்ராயாகை) திருச்சாளக்ராமம், திருச்சிங்கவேள்குன்றம், திருத்வாரகை (துவாரபதி), திருநைமிசாரண்யம், திருப்பருதி (ஜோஷிமட்), திருவடமதுரை (மதுரா) திருவதிரியாச்சிரமம் (பத்ரிநாத்), திருவயோத்தி (அயோத்யா), திருவாய்ப்பாடி (கோகுலம்), திருவேங்கடம் (திருமலை) என்பன.

இவையன்றி வடநாட்டிலுள்ள புராணத்தலங்களும், அபிமான தலங்களும் ஆக பத்தொன்பது உள்ளன. அவை பண்டரீபுரம், பஞ்சவடி, அவந்தி, சித்பூர் (மாத்ருகயா), புற்கரம் (ஆஜ்மீர்), மாயா க்ஷேத்ரம் (ஹரித்வார்), பாண்டு கேச்வர், விஷ்ணுப்ரயாகை, ஜோஷிமடம் (பத்ரீமார்க்கம்), பிரயாகை (அலகாபாத்), கயாக்ஷேத்ரம், ஸ்ரீகூர்மம், புவனேசரி, பூரி ஜகந்நாதம், ஸிம்ஹாசலம், பத்ராசலம், அன்னவரம், மகாநந்தி, மங்களகிரி என்பன.

வடநாட்டிலுள்ள சிறந்த தலங்களுக்குத் தமிழ்நாட்டில் தோன்றிய ஆழ்வார்களும் நாயன்மார்களும் திருப்பாசுரங்களையும், திருப்பதிகங் களையும் அருளியுள்ளனர். அவர்கள் வழியே அவ்வவ் தலங்களுக்கும் தமிழ்த் தலப்புராணங்கள் பல தோன்றியிருத்தல் வேண்டும். ஆயின் சில தலபுராணங்களே கிடைக்கின்றன.

## திருப்பருப்பதம் (ஸ்ரீசைலம்)

வடநாட்டுச் சைவத்தலங்களுள் ஒன்றாகிய இது ஸ்ரீசைலம் என்றழைக்கப்படுவதாகும். ஆந்திர மாநிலத்தில் கர்நூல் மாவட்டத்தில் நந்தியாலுக்குப் பக்கத்திலுள்ள தலம். சக்தி பீடத்தில் இத்தலம் பிரமராம்பாள் பீடமாகப் போற்றப்படுகிறது. மல்லிகார்ஜுனம் என்பதும் இத்தலத்திற்குப் பெயராகும். அர்ஜுனம் என்பது மருதமரம். மருதமரத்தைத் தலமரமாகக் கொண்டதனால் இப்பெயர் பெற்றது. அர்ஜுனத் தலங்கள் மூன்றில் ஒன்றாக இது விளங்குகிறது. மற்ற

இரண்டு. திருவிடைமருதூர் (மத்தியார்ச்சுனம்) மற்றும் நெல்லை மாவட்டத்தில் அம்பாசமுத்திரத்திற்கு அருகில் உள்ள திருப்புடைமருதூர் (புடார்ச்சனம்) என்பன. சந்திரவதி என்னும் பெண் மல்லிகை மலர்களால் அருச்சித்து வழிபட்டதால் இத்தல இறைவர் மல்லிகார்ச்சுனர் என அழைக்கப்பெற்றார்.

பன்னிரண்டு ஜோதிர்லிங்கத் தலங்களுள் இதுவும் ஒன்று. சிலாதமுனிவர் தவஞ்செய்த தலமாதலின் (ஸ்ரீ) சைலம் எனப்படுகிறது. நந்திதேவர் இங்குத் தவம் செய்து இறைவனைச் சுமக்கும் ஆற்றலைப் பெற்றார் என்றும்; அவரே இங்கு மலையாக இருந்து இறைவனைத் தாங்குகிறார் என்றும் தலபுராணம் கூறுகிறது. இத்தலத்தில் அருகில் நந்திமலை, நந்தியால் உள்ளன. வீரசைவர்கள் இம்மலைப் பகுதியை 'பூகயிலாயம்' என்றழைப்பர்.

தேவார திருமுறைப் பதிகங்களைப் பெற்ற மூன்று ஜோதிர்லிங்கத் தலங்களுள் இது ஒன்றாகும். மற்றவை இராமேச்வரம், திருக்கேதாரம் என்பனவாம்.

தொலைவிலிருந்து வழிபடுவார்க்கும் வீடு அருளும் திருவூர், இறந்தவர்க்கு எண்ணிய நன்மைகளை மறுபிறப்பில் அளிக்கும் திருவூர் எனப்பல சிறப்புப் பொருந்திய இத்தலத்தை மூவரும் பாடியுள்ளர். சம்பந்தரும் சுந்தரரும் காளத்தியைத் தொழுத பின்னர் அங்கிருந்தே வடக்கு நோக்கித் தொழுது பாடினர். திருநாவுக்கரசர் மட்டும், தம்முடைய கயிலை யாத்திரையில் இத்தலத்திற்கு எழுந்தருளி வழிபட்டுப் பாடினார். சம்பந்தர், அப்பர் பதிகங்களில் இத்தலம் 'திருப்பருப்பதம்' என்றும் சுந்தரர் பதிகத்தில் 'சீபர்ப்பதம்' என்றும் குறிக்கப்படுகிறது.

இத்தலத்தினைப் போற்றி பல பாடல்கள் எழுந்துள்ளன. அருணகிரிநாதர், வள்ளலார் போன்றோரும் பாடியுள்ளனர். இத்தலம் பற்றிய ஒரு தலபுராணம் தமிழில் இருந்ததாகத் தெரிகிறது. ஸ்ரீசைல வைபவம், ஸ்ரீசைல வரலாறு போன்ற நூல்கள் இத்தலவரலாற்றைத் தெரிவிக்கின்றன.

## இந்திரநீலப் பருப்பதம்

வடநாட்டில் திருக்கேதாரம் செல்லும் வழியில் உள்ள தலம். இது இந்திரனால் பூசிக்கப்பட்ட தலம் என்றும், அருச்சுனன் தவம் புரிந்து பாசுபதப்படை பெற்ற திருவூர் என்றும், மூகாசுரனை இறைவன் அட்ட திருவூர் என்றும் கூறுவர். இங்குள்ளோர் இம்மலையை 'நீலகண்ட பர்வதம்' என்று கூறுவர்.

சம்பந்தர் தென்கயிலாயமான திருக்காளத்தியைத் தொழுத பின்பு அங்கிருந்தே இத்தலத்தைத் தொழுது பாடிப் போற்றினார்.

"பூவி னானொடு மாலும் போற்றுறுந்
தேவ னிந்திர நீல பர்ப்பதம்
பாவி யாஎழு வாரைத் தம்வினை
கோவி யாவருங் கொல்லுங் கூற்றமே".

என இத்தலச் சிறப்பை எடுத்துரைப்பர் சம்பந்தர்.

இத்தலம் பற்றிய பல புராணக் கதைகள் இருப்பினும் தலபுராண நூல் எதுவும் கிடைக்கவில்லை.

## அநேகதங்காபதம்

அரித்துவாரிலிருந்து திருக்கேதாரம் செல்லும் வழியில் உள்ளது இத்தலம். இது அம்பிகை தவம் செய்த இடம் என்றும், சூரியனும் சந்திரனும் வழிபட்ட தலம் என்றும் கூறுவர். சம்பந்தர் திருக்காளத்தியை வணங்கிய பின்பு அங்கிருந்தே தொழுது இத்தலத்தைப் பாடியுள்ளார்.

'தந்தத் திந்தத் தடமென்றருவித் திரள்பாய்ந்து போய்ச்
சிந்த வெந்த கதிரோ னோடு மாசறு திங்களார்
அந்தமில்ல அளவில்ல அநேகதங் காபதம்
எந்தை வெந்த பொடிநீ றணிவார்க்கு இடமாவதே.'

என இத்தலச் சிறப்பைக் குறிப்பிடுவர் இவர்.

இத்தலம் பற்றிய பல புராணக் கதைகள் இருப்பினும் தலபுராண நூல் எதுவும் கிடைக்கவில்லை.

## திருக்கேதாரம்

இமயமலைச் சாரலில் உள்ளது இத்தலம். ஜோதிர்லிங்கத் தலம். பிருங்கி முனிவரின் பொருட்டு உமையம்மை இறைவனை வழிபட்டு இடப்பாகம் பெற்ற தலம் என்று கூறுவர். இக்கோயிலில் பனிக்காலங்களில் பூசை இல்லை. மே மாதம் முதல் அக்டோபர் வரை ஆறு மாதம் மட்டுமே பூசைகள் நடைபெற்று வருகின்றன. மனிதவர் பூசை ஆறு திங்களும் விண்ணவர் பூசை ஆறு திங்களும் நடைபெறுவதாக உரைக்கின்றனர்.

சம்பந்தரும் சுந்தரரும் தென்கயிலாயமான திருக்காளத்தியிலிருந்தே இமயமலைச் சாரலிலுள்ள இத்தலத்தைப் பாடித் தொழுதுள்ளனர்.

திருக்கேதாரீச்சுர மகிமை போன்ற தல வரலாறுகள் கிடைப்பினும் இத்தலம் பற்றிய தமிழ்த் தலபுராணங்கள் ஏதும் கிடைக்கவில்லை.

## திருக்கயிலாயம் (நொடித்தான்மலை)

சிவபெருமான் அம்பிகையோடு எழுந்தருளியுள்ள மலை திருக்கயிலாயம். இம்மலை இமய மலையின் வடக்கில் திபெத் நாட்டின் மேற்பால் அமைந்துள்ளது. இன்று இம்மலைப்பகுதி சீன அரசின் கட்டுப்பாட்டுள் இருந்து வருகிறது. இங்கு இயற்கையான கோயிலமைப்பில் பனி மூடியே சிவலிங்கமாகக் காட்சியளிக்கின்றது.

'ஏதமில பூதமொடு கோதைதுணை யாதிமுதல் வேத விகிர்தன்
கீதமொடு நீதிபல வோதிமற வாதுபயி னாதன நகர்தான்
தாதுபொதி போதுவிட வூதுசிறை மீதுதுளி கூதல் நலியக்
காதன்மிகு சோதிகிளர் மாதுபயில் கோதுகயி லாயமலையே'.

என இதன் சிறப்பைப் பாடுவார் ஞானசம்பந்தர்.

இத்தலத்தைப் போற்றி மூவருடைய பதிகங்கள் இன்று கிடைக்கின்றன. "கயிலை மலையாரே" எனச் சம்பந்தரும், "கயிலை மலையானே" என அப்பரும், "நொடித்தான்மலை உத்தமனே" எனச் சுந்தரரும் இத்தல இறைவனான சிவபெருமானைப் போற்றுவர்.

இத்தலத்திற்கென்று தனியே தலபுராணம் எதுவும் தமிழில் கிடைக்கவில்லை.

வடநாட்டிலுள்ள மேற்காணும் ஐந்து சிவத்தலங்களும் பாடல் பெற்ற திருமுறைத் தலங்களாகவே இருப்பினும் இவை எதற்கும் தலபுராணம் தமிழில் கிடைக்காதது குறிக்கத்தக்கதாகும். ஸ்ரீசைலம் தவிர பிற நான்கு தலங்களைத் தேவாரம் பாடிய சம்பந்தர் திருக்காளத்தியிலிருந்தே பாடியதாகவும்; அப்பர் பெருமான் கயிலாயத்தை நோக்கி நெடிய பயணம் தொடங்கியபோது அதன் பயனாய்த் திருவையாற்றில் கயிலைத் தரிசனம் பெற்றார் என்பதுவும்; சுந்தரர் இறைவனருளால் அஞ்சைக்களத்திலிருந்து வெள்ளை யானை யேறி கயிலைக்குச் சென்ற போது பாடிய "தானெனை முன்படைத்தான்" என்று தொடங்கும் பதிகம் வருணனால் இவ்வுலகில் திருவஞ்சைக்களத்தில் சேர்ப்பிக்கப் பெற்றது என்று கூறும் வழக்கும் ஆகிய இவையாவும் இத்தலங்களுக்குச் செல்லும் அருமையை விளக்குவனவாகவே உள்ளன.

அக்காலத்தில் இருந்த சமயச்சூழல், பயணச்சிக்கல், மொழிச் சிக்கல், இயற்கைச்சூழல் ஆகிய இவற்றின் காரணமாக இத்தலப் பயணங்களைப் பலரும் மேற்கொள்ளவில்லை எனலாம். மேலும், நம்முடைய தமிழ்நாட்டிலுள்ள கோயில்களையே கயிலாயமாகவும் கேதாரமாகவும் உருவாக்கி மகிழும் உணர்வினையும் இங்குள்ளவர்கள் பெற்றிருந்தமையால் தமிழில் தனியே இவற்றிற்குப் புராணங்கள் எழவில்லை எனலாம்.

## பிற தல வரலாறுகள்

சென்ற சில நூற்றாண்டில் ஏற்பட்ட மாற்றங்கள் காரணமாக வடநாட்டுப் பயணங்களைப் பலரும் மேற்கொண்டதால் வடநாட்டுத் தல வரலாறுகளை அறியவேண்டும் என்ற ஆர்வம் மக்களிடையே எழுந்தது. இதனால் சில தல வரலாற்று நூல்கள் தமிழில் எழுந்துள்ளன. இமாசல புராணம், காசி கண்டம், ஸ்ரீகாசிரகசியம், காசி மகாத்மியம், காசி மான்மியம், கயா மகாத்மியம், அயோத்திமாநகர மான்மியம், கங்கா யாத்திரை மான்மியம், பதரிகேதார மான்மியம், திருவேங்கடத் தல புராணம் போன்ற நூல்களுள் பல உரைநடையில் அமைந்தவையாகும்.

அதிவீரராம பாண்டியர் இயற்றிய காசிகண்டம், மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய ஸ்ரீகாசி ரகசியம், தேவாரம் வீரராகவ ஐயங்கார் இயற்றிய திருவேங்கடத் தலபுராணம் ஆகியவை செய்யுள் நடையிலான தலபுராணங்களாகும். இவ் வீரராகவ ஐயங்காரின் தமையன் மகனாகிய செல்லமையங்கார் என்பவரே காசி மகாத்மியம் என்ற நூலை இயற்றியுள்ளார்.

## காசி

வடநாட்டுப் புண்ணியத்தலங்களில் காசி குறிப்பிடத் தக்கது. இது சத்த மோட்சதானங்களில் ஒன்று. இது கங்கா தீரத்திலிருந்து தன்னிற்

பிரகாசிக்குந் தன்மையுள்ளது. இதில் சிவமூர்த்தி அடியவர் வேண்டிய வாறு காட்சி தந்து சித்தியளிப்பார் என்பர். இத்தலம் சர்வ சங்கார காலத் தில் சிவமூர்த்தியின் சூலத் தலையிலிருந்து அழிவடை யாதது. இத்தலத்தில் உயிர்நீங்கும் ஆன்மாக்களுக்குப் பார்வதி பிராட்டியார் சிரமபரிகாரஞ் செய்யச் சிவமூர்த்தி தாரக மந்திரம் உபதேசித்து முத்தி ஈவர் என்பர்.

இத்தலத்தில் சயிகடவியன், இயக்கர், சம்வர்த்தனன் முதலியவர் பூசித்த சிவலிங்கங்களும், கோ பூசித்த கோப்பிய ரேகம், கபிலாகாரமும், இன்னும் இருஷ பத்துவசலிங்கம், பத்திரதோய தீர்த்தம், இரணிய கற்பேசம், சுவலினேச்சரம், பரலிங்கம், கந்துகேச்சரம், சயிலேச்சுரம், சங்கமேச்சுரம், சுத்திமேசம், சுக்கிரேசம், சம்புகேசுரம், மல்லிகார்ச்சுனம், ஈசானம், கணேச்சுரம், அகிலேச்சுரம், இராமேச்சுரம், கதம்பேசம் முதலிய தலங்களுமுண்டு.

இந்த மகாதலத்தில் ஐந்து குரோசம் சிவலிங்கங்கள் இருத்தலால் 'ஆநந்த கானம்' எனவும், இறந்த உயிரை யளித்தலாலும் வேதியன் எடுத்த பிடிமணலில் தோன்றிய சிவலிங்கமிருத்தலாலும் 'அவிமுத்தம்' எனவும், ஆன்மாக்கட்குச் சிவானந்த மளித்தலால் 'ஆனந்த கானம்' எனவும், சர்வசங்கார காலத்தில் பூதங்கள் ஒடுங்கு மிடம் ஆகையால் 'மாமயானம்' எனவும், சிவமூர்த்தி சோதியுருவாய் எழுந்தருளியிருத்தலாலும் முத்தி மாதுக்கு இருப்பதாலும் 'காசி' எனவும், உயிர்க்குத் தருமம் அளித்தலால் 'தருமவனம்' எனவும் பெயர் பெறும். இக்காசி பெண்ணுருவம் பெற்றுச் சிவமூர்த்தியை வணங்கித் தன்னை வணங்கினவர் முத்தியடைய வரம் பெற்றனள் என்பர்.[1]

## காசிகண்டம்

கி. பி. 15ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சிறந்த சிவபக்தனாகவும், தமிழைப் பெரிதும் ஆதரித்தவனாகவும் வாழ்ந்திருந்தவன் அரிகேசரி பராக்கிரம பாண்டியன் (கி. பி. 1411-1463). இப் பராக்கிரமனுக்குப் பின் தமிழ் இலக்கியத்துறையில் புகழ்பெற்று வாழ்ந்து நூல் இயற்றிய பாண்டியர் மூவர். சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் (1543-1588), திருநெல்வேலிப் பெருமாள் என்னும் நெல்வேலி மாறன் (1553-1564) மற்றும் சீவலமாறன் என்னும் அதிவீரராமன் (1564-1610) ஆகிய இம் மூன்று பேரும் தென்காசிப் பாண்டியர் எனப் பெற்றனர். இவருள் அதிவீரராமன் பாடியதே காசி கண்டம் என்ற நூலாகும்.

வடமொழிச் சிவபுராணம் பத்தினுள் ஒன்றான காந்தம், சனத் குமாரம், சூதம், பிரமம், விஷ்ணு, சங்கரம், சூரம் என ஆறு சங்கிதை கொண்டது. இவற்றுள் சங்கர சங்கிதை பன்னிரு கண்டங்களை யுடையது. (கண்டம்-பிரிவு) இப்பன்னிரண்டில் நான்காவது காசிகண்டம். இதன் மொழிபெயர்ப்பே இத் தமிழ்ப் புராணம் ஆகும்.

## நூல் தோன்றிய வரலாறு

அதிவீரராம பாண்டியரின் தமையன் வரதுங்கராம பாண்டியர். இவரைப்பற்றிய வரலாற்றை 1919 இல் 'திருக்கருவைத் தலபுராணம்'

1 அபிதான சிந்தாமணி, ப. 344

அச்சு நூலில் காணலாம். அப்புராணம் பாடிய திருமலைவேற் கவிராயர் 'வரதுங்கன் தரிசனம் பெறு சருக்கம்' என்று 24 பாடல் பாடி நூலின் இறுதியில் சேர்த்துள்ளார். வரதுங்கராம பாண்டியர் கருவையில் தங்கியிருந்த போது, அதிவீரராம பாண்டியர் தாம் பாடிய நைடதத்தைப் பார்வை யிடுமாறு தமையனாகிய வரதுங்கராமரிடம் அனுப்பினார். அதைப் பார்த்த தமையன் 'நம்மைப் போல் ஓர் அரசனுடைய சரித்திரத்தை எம்தம்பி பாடுவதா?' என்று மிகவும் வருத்தப்பட்டு, தாம் பாடிய கலித்துறை அந்தாதியில் உள்ள பின்வரும் பாடலை எழுதி அனுப்பினார்.

"சங்கக் குழையனைத் தென்கரு வாபுரித் தாணுவைவார்
கங்கைச் சடையனைப் பாடல்செய் யாதகவிப் புலவீர்
அங்கச் சுமைகொண் டெழுநான்கு கோடி அருநரகப்
பங்கத்தில் வீழவன் றோபொன்று வார்தமைப் பாடுவதே"

என்னும் இப்பாடலை அறிந்த அதிவீரராம பாண்டியர் இவரிடம் நேரில் வந்தார். வரதுங்கர் நளன் கதையாகிய நரர்துதியால் வரும் பாவத்தை எடுத்துச்சொல்லி, அதைப் போக்கக் காசி யாத்திரை செய்து, காசி மான்மியத்தைத் தமிழில் பாடும்படி பணித்தார் என்றும், அவ்வாறே அதிவீரராம பாண்டியரும் இதைச் செய்தார் என்றும் கூறுவர்.

## இரு பிரிவுகள்

காசிகண்டம் பூர்வம், உத்திரம் என இருபெரும் பிரிவுகளையும், நூறு அத்தியாயங்களைக் கொண்டு 2526 பாடல்களால் ஆக்கப் பெற்றுள்ளது. பாயிரப் பகுதியில் விரிவான பாடல்கள் உள்ளன. அறுபத்து மூவருக்குத் தனித் துதியும், சிவனடியார் வணக்கமும், வாழ்த்தும் உள்ளன. அகத்திய முனிவன் கேட்க, குமரன் கூறுவதாக இந்நூல் அமைந்துள்ளது.

## பூர்வ காண்டம்

பூர்வ காண்டத்திலுள்ள 41 அத்தியாயங்களில் 1209 பாடல்கள் உள்ளன. இதில் அகத்தியர் விந்தவரையை அடக்கியது. துருவன், கலாவதி, சிவசன்மா, வயிரவன், தண்டபாணி வரலாறுகள் சொல்லப் படுகின்றன. சிவசன்மாவுக்கு யமதூதர் ஏழு கிரகங்களின் உலகங்கள், திக்குப்பாலகரின் எட்டு உலகங்கள், மக-சன-தவ-சத்திய லோகங்கள், சத்த இருடிகளின் உலகங்கள் ஆகியவற்றைக் கூறுகின்றனர். தீர்த்த மகிமை, முத்திதரும் சத்தபுரிகள், மணிகர்ணிகை, கங்கை, வாரணாசி ஆகியவற்றின் சிறப்புக்கள் சொல்லப்படுகின்றன. சிறப்பாக பிரமசரியம், இல்லொழுக்கம், மகளிரிலக்கணம் (எண்வகை மணங்கள்), யோகநிலை, காலம் அறிதல் ஆகிய பொருள்களும் உரைக்கப்படுகின்றன.

## உத்தர காண்டம்

உத்தர காண்டத்தில் 59 அத்தியாயங்களில் 1317 பாடல்கள் உள்ளன. இதில், தபோதானன் வரலாறும் ஆதித்தர் வரலாறும்,

இரத்தினேசன், கிருத்திவாசேசன், துர்க்கன், திரிநிகை, தூர்த்தமன், கங்காளகேது ஆகியோர் வரலாறுகளும் சொல்லப் பட்டுள்ளன. காசிக்குக் கணபதி, திருமால், சிவகணங்கள், விசுவநாதர் முதலியோர் வந்த வரலாறும், துருவாசன், தக்கன் ஆகியோர் வரலாறுகளும் சொல்லப்படுகின்றன. வீரேசர், பார்வதீசர், கங்கேசுரர், நர்மதேசர், கேதீச்சுரர், அமுதேசர், சயிலேச்சுரர் ஆகிய மூர்த்தி வரலாறுகளும், பராசரலிங்கம், ஓங்காரம், திரிலோசனம், தருமேச்சுரம், விசுவகன் மேசம் ஆகிய லிங்கங்களின் வரலாறுகளும் சொல்லப்படுகின்றன. காசியின் மகிமை, பஞ்சநதி சிறப்பு, விசுவநாதர் மகிமை, க்ஷேத்திர வளம், தீர்த்த மகிமை, முத்தி மண்டலச் சிறப்பு ஆகியவை சொல்லி, இறுதியாக காசியில் உள்ள எல்லா மூர்த்திகளையும் எவ்வாறு பணிந்து வழிபட வேண்டும் என்று கூறப்படுகிறது. நூற்பயன் பல பாடல்களால் சொல்லப்படுகிறது.

## காசியின் சிறப்பு

காசி கண்டத்தில் சுவையுள்ள பாடல்களும் நீதிப் பாடல்களும் மிகுதியாக உள்ளன. காசியின் சிறப்பைக் கூறுமிடத்து,

"காசியைக் குறித்துச் செல்லும் கால்களே கால்களாகும்
காசியை வழுத்தும் நாவே நாவெனக் கழற லாமால்
காசியின் கதைகள் கேட்கும் செவிகளே செவிக ளாகும்
காசியை இனிது காணும் கண்களே கண்க ளாமால்"

என்று பாடுவர். இப்பாடல், வரதுங்கராம பாண்டியர் பாடிய பிரமோத்திர காண்டம் (வடமொழி கந்தபுராணத்தின் மூன்றாம் பிரிவாகிய பிரமாண்ட புராணத்தின் மூன்றாம் பகுதியாகிய பிரமோத்திர காண்டத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு) கூறும் பின்வரும் பாடலைத் தழுவியதாகும்.

"கண்ணுதலா லயநோக்குங் கண்களே கண்கள்
கறைக்கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள்
பெண்ணொருபா கனைப்பணியுந் தலைகளே தலைகள்
பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள்
பண்ணவன்தன் சீர்பாடும் நன்னாவே நல்நா
பரன்சரிதை யேகேட்கப் படுஞ்செவியே செவிகள்
அண்ணல்பொ லங்கழல் நினைக்கும் நெஞ்சமே நெஞ்சம்
அவனடிக்கீழ் அடிமைபுகும் அடிமையே அடிமை".

என வரதுங்கராம பாண்டியர் பாடியதை அப்படியே கொண்டு காசியின் சிறப்பை மேற்கூறிய பாடலில் பாடியுள்ளார் அதிவீரராம பாண்டியர்.

## ஆசாரங்களும் பிறவும்

காசி கண்டத்தில், கற்பிலக்கணம் கூறிய அத்தியாயம் 48 பாடல்களும் சிறந்த மகளிர் நீதி புகட்டுவன. ஆசாரம் கூறியது என்ற 38 ஆம் அத்தியாயம் சிறந்த சைவ ஆசாரம் மட்டுமல்லாமல் உலகுக்கே பொதுவான நல்லாசாரம் கூறுவது, இல்லொழுக்கங் கூறுவது, ஆடவர்

சாமுத்திரிகா லட்சணமும், மகளிர் உருவ இலக்கணமும் தனியே கூறப்பெறுகின்றன. இல்லறங் கூறிய இடத்து (அத். 35) அட்டாங்க யோகத்தின் முதல் இரண்டு படிகளும், வானப்பிரத்தம் கூறுமிடத்து ஏனைய படிகளும் கூறப்பெறும். பிரமசரியம் கூறிவிட்டு, குழந்தை பிறக்குமுன் சீமந்தம் தொடங்கிச் செய்யும் சோடசக் கிரியைகளிற் பல கூறப்பெறுகின்றன. இந்நூலில், தமிழ் முனிவன் திருமகளைத் துதிப்பதாகவுள்ள ஆறு பாடல்களும் (1:5:26-31) இலக்குமி தோத்திரம் ஆகும். சிவசன்மா தெய்வ லோகங்கள் கண்டது கூறும் அத்தியாயத்திலுள்ள எட்டுப் பாடல்களும் (1:10:45-52) சிவாட்டகம் ஆகும். மகப்பேறில்லாதவர்கள் இவ்வெட்டுப் பாடல்களையும் பாராயணம் செய்து வர மகப்பேறு உண்டாகும் என்ற நம்பிக்கை உண்டு. நூலின் 72 ஆம் அத்தியாயம் 'வச்சிரபஞ்சரகவசம்' என்னும் பெயருடையது. துர்க்கையை வணங்கிய முகுந்தன் ஆதிய அமரர் இந்தக் கவசத்தைக் கூறினர் என்பர். (1:72:1-12) இக் கவசம் நூல் தோன்றிய நாளாகச் சைவ மக்கள் மனப்பாடம் பண்ணி வழிபடுவதற் குரிய ஒரு பாடல் தொகுதியாக இருந்து வருகிறது.

## சமயப்பொதுமை கூறுதல்

காசிகண்டத்தில், சமயப் பொதுமையோடு கூடிய பாடல்கள் பல உள்ளன. துருவன் திருமாலைத் துதிப்பதாகக் கூறும் பாடல்கள் (1:21:1-4) சமயப் பொதுமை யுணர்வோடு பாடியவையாகும்.

"அரியநான் மறையின் காலநீ, எழுத்தின் அகரம்நீ, அருமறைப் பொருளிற்
புரைதப நின்ற உபநிட தமும்நீ வேள்வியிற் புரவிநன் மகம்நீ
விரைவினில் வளிநீ, வருணமோர் நான்கின் வேந்தன்நீ மருவிய கரணத்து
உரைபெறு மனம்நீ, பூதமோ ரைந்தின் ஓங்கிரு விசும்பு நீயாமால்"

என்னும் ஒரு பாடல் இதனை வலியுறுத்தும்.

பாகவதரைப் பழிப்பதும் சைவநெறியைப் பழிப்பதும் பதிதர் செய்கை என்று பின்வரும் பாடல் விரிந்த சமயவுணர்வைக் காட்டும்.

"பாக வதரோ டியைந்துசைவ நெறியைப் பழித்தும், சைவநெறி
போகு மவர்பால் இயைந்துதினம் பாக வதரைப் புறமொழிந்தும்,
யாக முனிவார்க் கிடர்விளைத்தும, யாவர் பொருள்நல் கினர்அவர்கட்கு
ஆக நெறியில் கரிநாளும் பகர்ந்து பதித னாயினனால்". (98:19)

சிவபெருமான் திருநாமங்களை நான்கு பாடல்களில் அடை யின்றி அமைத்துள்ளார். இவற்றுள், முதல் பாடல் முழுமையும் சிவநாமங்களாக இருப்பினும், மற்ற மூன்று பாடல்களிலும், சிவநாமங் களையும் திருமால் நாமங்களையும் வரிக்குவரி மாற்றிச் சொல்வதும் சுட்டத்தக்கது. இந்நூலாசிரியர் அரன்-அரி ஒற்றுமையைப் போதிக்கவே இவ்வாறு அமைத்தார் எனத் தோன்றுகிறது. (8:53-56) அவை வருமாறு:

"நீல கண்டன் மழுவேந்தி நெற்றிக் கண்ணன் பூதேசன்
கால காலன் விடையூர்ந்தோன் கங்கை சூடி காமாரி
சூல பாணி கரியுரித்தோன் தோகை பாகன் காபாலி
ஆல முண்டோன் மதிசூடிஅந்த காரி ஈசானன்".

"வாசு தேவன் சனார்த்தனன் போர் மதுசூத னனச்சுத னெடுமால்
ஈசன் அரன்சங் கரன்கிரிச னிறைவன் பினாக பாணிசிவன்
கேசி நாசன் மணிவண்ணன் கெருடத் துவசன் நரசிங்கன்
நாச மில்லோன் விடையூர்தி நம்பன் மிருத்துஞ் செயன்பாகன்

"அரவா பரணன் அழலேந்தி யட்ட மூர்த்தி செகதீசன்
புருடோத் தமன்கேசவன் கண்ணன புயங்க சாயி புள்ளூர்தி
பரம சாந்தன் கணநாதன் பவன்முக் கண்ணன சருவேசன்
திரிவிக் கிரமன் கமலைபதி தேவன் சவுரி மாதவனே"

"புராரி தாமோ தரன்சயம்பு பூவை வண்ணன் கோபாலன்
முராரி யனந்தன் கோவிந்தன் முகுந்தன் சாரங்க பாணியரி
கிரீச னென்னும் பெயர்முதலாக் கிளர்க்கு நாமம் நூற்றெட்டும்
பரவு மவர்கள் யமனுலகம் படரார், அழியாப்பதம் பெறுவார்".

என இந்நூல் பாடுவது குறிப்பிடத்தக்கது.

## காசிக்கு நிகரான பதியில்லை

காயத்திரி மந்திரம் செபித்தலின் பெருமையைப் பல பாடல்களில் இந்நூலில் விளக்கக் காணலாம். காயத்திரியே மறைக்கும் பிரமனுக்கும் ஈன்ற தாய் என்பர் இந்நூலாசிரியர்.

"அறிவருங் காயத்திரி தனக்கி ணையா அறைவ தொனறில்லை யாங்கதுபோல
நிறைபுனல் வளங்கூர் காசியம் பதிக்கு நிகர்தரு பதியும ஆங்குறையும
இறைவனை நிகர்க்குங் கடவுளு மிலையால் இயம்புகா யத்திரி யெழுதா
மறையொடுங் கமலமல ரின்நான் முகற்கும் ஈன்ற தாயென வகுத்துரைப்பார்"

என்னும் இப்பாடலில், காயத்திரியையொத்த மந்திரமுமில்லை, காசிக்கு நிகரான பதியுமில்லை, விசுவநாதருக்கு நிகரான கடவுளும் இல்லை என்று கூறியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வாறு காசியின் பெருமைகளையெல்லாம் தமிழில் செய்யுள் நடையில் கூறும் முதல் நூலாக இக் காசிகண்டம் திகழ்கிறது. பல்வகை இலக்கிய நயங்களோடு சமய மரபுகளும், பொது ஒழுக்கங்களும், நிலவியல் வருணனைகளும், வரலாற்றுச் சான்றுகளும் நிறைந்த ஒரு கருவூலமாகவே இந்நூல் அமைந்துள்ளது.

## ஸ்ரீகாசி ரகசியம்

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் தமிழில் காசியின் சிறப்பை எடுத்துக்கூறும் முகமாக இயற்றிய நூல் ஸ்ரீகாசி ரகசியம் ஆகும். இந்நூலில் 26 அத்தியாயங்களும் 1012 செய்யுட்களும் உள்ளன.

காசி யாத்திரை பலமுறை செய்தவரும் அக்காலத்தில் திருவிடைமருதூர்க் கட்டளை அதிகாரம் பெற்றுப் பார்த்து வந்த வருமான சுப்பிரமணியத் தம்பிரான் அவர்களுடைய விருப்பத்தின்படி காசியின் தலவரலாறுகளைக் கூறும் நூல்களுள் ஒன்றாகிய ஸ்ரீகாசி ரகசியம் என்னும் நூல் இவரால் தமிழில் செய்யுள் வடிவாக இயற்றப்பட்டது. அந்நூலை அவர் காசியிலிருக்கும்போதே ஒரு வடமொழி வித்துவானைக் கொண்டு மொழிபெயர்க்கச் செய்து தமிழ் வசன நடையில் தாமே எழுதி வைத்துக் கொண்டு பின்பு அதன் துணையுடன் இந்நூலை இயற்றியுள்ளார். இதனை,

"ஆனதிரு வாவடுதண் டுறைநமச்சி வாயனடிக் கடிமை பூண்டு
ஞானநெறி யடைந்தவனற் காசியாத் திரைபலகால் நயந்து செய்தோன்
ஈனமினற் குணமனைத்து மோருருக் கொண்டெனப் பொலிவோன் எண்ணி லாத
மோனமுனி வரர்புகழப் பொலிதவச்சுப் பிரமணிய முனிவ னென்போன்".

"உரவுமலி கருங்கடல்சூ ழுலோகோப காரமிதென் றுள்ளத் தோர்ந்து
விரவுவட மொழியைமொழி பெயர்த்தெடுத்துச் செந்தமிழால் விளங்கு மாறு
கரவுதவிர் சிறப்புடைத்தா யறமுதனாற் பயனளிக்கும் காட்சித் தாய
பரவுபுகழ்த் திருக்காசி மான்மியமா மந்தணத்தைப் பாடு கென்ன".

"அனையவன மொழிந்த வார்த்தை யாருயிர்க் குறுதியாகும்
வினையம துணர்ந்து பாடும் விதஞ்சிறி துணரே னேனும்
தனையில்பே ராசை தூண்ட நாணெனுந் தளையி னீங்கிப்
புனைதரு தமிழி னாலே பாடிடப் புகுந்தேன் மன்னே".

(பாயிரம். 24, 26)

என்னும் பாடல்களில் விளக்குவர். இங்குக் காசிமான்மிய மாமந்தணம் என்பது காசி ரகசியத்தை. மந்தணம்-இரகசியம்.

இதனை வடநாட்டிலிருந்து சுப்பிரமணியத் தம்பிரானவர்கள் கொண்டு வந்த அருமையை,

"வானுறைதி யாகரா சரையிங்குக் கொடுவந்த வள்ளல் போலும்
தேனுறைகாக் கயிலையமர் போதமிங்குக் கொடுவந்த செல்வன் போலும்
மானுறைகா சியினின்றும் மந்தணஞ்செந் தமித்தேயம் வரக்கொ ணர்ந்த
மீனுறைநீர்த் துறைசையிற்சுப் பிரமணிய முனிவர்பிரான் மெய்ச்சீர் வாழ்க".

என்னும் இந்நூலின் இறுதிச் செய்யுளிலும் ஆசிரியர் பாராட்டியுள்ளார்.

இந்நூல் திருவிடைமருதூர் மகாலிங்கசுவாமி திருக்கோயிலுள்ள நூற்றுக்கால் மண்டபத்தில் அரங்கேற்றப்பெற்றது என்றும், மகாவித்துவான் அவர்களிடம் அப்பொழுது பாடங் கேட்டுக் கொண்டிருந்த சுந்தரப்பெருமாள்கோயில் அண்ணாசாமி ஐயர் என்பவர் இந்நூலை ஆசிரியர் செய்து வருகையில் எழுதியும் அரங்கேற்றுகையில் படித்தும் வந்தார் என்றும் கூறுவர் டாக்டர் ஐயரவர்கள்.

## திருவேங்கடத் தலபுராணம்

திருவேங்கடம் என்பது திருமலை. திருமால் இப்பூமியில் காட்சி தந்தருளிய திவ்வியத்தலங்கள் மூன்றனுள் ஒன்றாகும். நூற்றெட்டு வைணவத் தலங்களுள் மிகவும் குறிப்பிடத்தக்கது இது. திருமலையில் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடவன் இக்கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக நாளும் காட்சியளித்து வருகின்றான் என்றே பலரும் நம்புகின்றனர். இதிகாசம், புராணம், திவ்வியப்பிரபந்தம் போன்ற பலவற்றிலும் இத்தலத்தின் பெருமை விரிவாகப் பேசப்பெறும்.

"உலகுக்கெல்லாம் தேசமாய்த் திகழும் மலை திருவேங்கடம்" (பெரி. திரு. 1-8-9), "விண்ணோர்தொழும் வேங்கட மாமலை" (பெரி. திரு. 1-10-1) என்று இம்மலையின் சிறப்பையுரைப்பார் திருமங்கையாழ்வார்.

வேங்கடம் என்றாலே அழிவற்ற செல்வம் என்று பொருள். திருமகள் குடியிருக்கும் இத்தலத்தை ஆழ்வார்களில் மதுரகவியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார் இவர்களைத் தவிர மற்றனைவரும் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

"செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே வேங்கடவா நின்கோயி லின்வாசல
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே"

எனப் பலவாறு பாடும் குலசேகர ஆழ்வார்,

"செம்பவள வாயான் திருவேங்கட மென்னும
எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனு மாவேனே"

(பெரு. திரு. 4 - 9, 10)

என்று திருவேங்கடத்தின் சிறப்பையும் எம்பெருமானின் சிறப்பையும் ஒருசேர நினைந்துருகக் காணலாம்.

### ஏழுமலை

இத்தலத்திற்கு ஏழுமலை என்றும் ஒரு பெயர் உண்டு. ஏழுமலைகளாவன, வெங்கடாத்ரி, ஷேஷாசலம், வேதாசலம், கருடாசலம், விருஷபாத்ரி, அஞ்சனாத்ரி, ஆனந்தாத்ரி என்பன. இவற்றின் நடுவே கோயில் அமைந்துள்ளது.

### தீர்த்தங்கள்

வைகுண்டம், சக்ரம், ஜாபாலி, வருணம், ஆகாச கங்கை, பாபவிநாசம், பாண்டவம், குமாரதாரை, இராமகிருஷ்ணம், தும்புரு, சேஷம், சீகசந்தினம், யுத்தகளம், சீதம்மம் ஆகிய 14 தீர்த்தங்கள் இத்தலத்திலுள்ளன.

### தலபுராணம்

திருவேங்கடத்தின் வரலாறுகளைக் கூறும் நூல்கள் பல மொழிகளிலும் உள்ளன. தமிழிலும் எண்ணற்ற நூல்கள் இத்தலச்சிறப்பை விளக்குகின்றன. திருவேங்கடத் தலபுராணம் என்னும் நூல் தேவார நகரம் மதுரகவி வீரராகவ ஐயங்கார் அவர்களால் சென்ற நூற்றாண்டில் இயற்றப்பட்டுள்ளது. இந்நூலில் 59 அத்தியாயங்களும் 1482 பாடல்களும் உள்ளன. சிறந்த நயம்மிக்க பாடல்கள் பலவற்றை இந்நூல் முழுமையும் காணலாம்.

பாயிரப் பகுதியில், முதலில் நம்மாழ்வாருக்கு வணக்கம் கூறுகிறார் ஆசிரியர்.

"செய்ய சேடகிரிப் பெருஞ்சீர் மையை
வயய மேற்தமிழ்ப பாவின் வழங்கவே
தூய்ய செந்தமிழ்த் தொன்மறை சொல்லிய
அய்யன் பாதம் அகததுள் இருத்துவாம்"

இத்துதியையடுத்துப் பன்னிரு ஆழ்வாரையும் ஒரு பாடலிலும், இராமாநுசர், மணவாள மாமுனிகள், ஆசாரியர் ஆகியோரைத் தனித்தனிப் பாடல்களில் பாடுவர். அடுத்து வராகப்பெருமாள், ஸ்ரீநிவாசன், திருமகள், சேனை முதலிகள் ஆகியோரை வணங்கியபின் நூற்பயன் கூறுகிறார்.

"பூதலத தநிக நன்மை பொருந்திடு ஞான முண்டாம்
மீதலத் தழியாமுத்தி விளைந்திடுங் கல்வி சேரும்
ஓதுதற் கரிய பூமான் உகந்துவாழ் மார்பன் மேவும்
சீதமுற் றுயர்ந்த சேட கிரிவளஞ் செப்பு வோர்க்கே". (10)

### வடமொழி மூலம்

இப்புராணம் வடமொழியில் வியாச முனிவர் உரைத்த 'சேடாசல மகிமை' என்பதிலிருந்து மொழிபெயர்த்து தமிழில் எழுதப் பெற்றது என்பதை அவையடக்கத்தில் கூறுகின்றார்.

"ஆதி மறைக ளனைத்தையு நாலாக வகுத்த வியாதமுனி
ஓது முயருங் காதைகளி னுரைத்த சேடா சலமகிமை
கோதில் தமிழ்யாப் பாவதனாற் கூறத் துணிந்த தென்போலாம்
சீத வரியைக் கடக்கவொரு சிறிய வுறவி நினைவதுவே".

"வேங்கடமா மலைமகிமை வடமொழியிற் சுகன்தாதை விளம்பு மிந்தப்
பாங்குடைய கதையதனைத் தமிழ்விருத்தத் தாலடியேன் பகர்ந்த தெல்லாம்
ஓங்குபொருட் சுவையுடன் சொல்லருசி யிலாதெனினு முயர்ஞான மேவும்
தேங்குபுகழ்ப் புலவரரி சரிதமெனத் திருவுளங்கொண் டுவப்பர் தாமே"

(பா. 11, 13)

என்னும் அவையடக்கப் பாடல்கள் ஆசிரியரின் கவியுள்ளத்தைக் காட்டுகின்றன.

## நாட்டுச் சிறப்பு

*முதலாவது நாட்டுச் சிறப்புரைத்த அத்தியாயம் 22 பாடல்களைக் கொண்டதாகும். இதில் தொண்டை நாட்டின் சிறப்பு எடுத்துரைக்கப் பெறுவது குறிப்பிடத்தக்கதாகும்.*

"இவ்வணஞ் சிறப்பு வாய்ந்தே ஏர்குடி யிருந்து நாளும்
அவ்விய மவித்த சிந்தை அருந்தவ ருடனே விண்வாழ்
எவ்வமில் புலவ ரெலலாம் இனிதுகந் தேகொண் டாடும
செவ்விய தொண்ட நாட்டின் திறஞ்சொலற் கடங்கா தன்றே"

"மருப்பொலி வானோர் தங்கள வளந்திகழ பதியின் வாழ்ந்தே
இருப்பதி னழியா முத்தி எயதுதற் கரிதா மென்று
விருப்பமீ தூர வந்து விளங்குறப் பிறத்தற கெண்ணு ந
திருப்பதி நகரின் வண்மை தெரிந்தவா றினிச்சொல் வோமே"

(பா. 21, 22)

*எனத் தொண்டை நாட்டின் சிறப்பைக் கூறி மேலே திருப்பதி நகரின் சிறப்பை 20 பாடல்களில் விளக்குகின்றார்*

*அடுத்து, நாரதர் திருப்பாற் கடலடைந்தது கூறியபின் திருமலையின் தோற்றம் பற்றி விளக்குகிறார். இம்மலையின் தோற்றம் பற்றி வடமொழி பிரமாண்டம் என்னும் புராணநூலில் கூறியிருப்ப தாகவும் அதையே தாம் இங்கு எடுத்துரைப்பதாகவும் விளக்குகிறார் (பா. 15).*

## வேங்கடாசலம்

*சீநிவாசன் நாராயணமுனிக்கு அருள் செய்தது, இபாசுரனைக் கொன்றது, அஞ்சனாதேவி தவநிலை போன்ற அத்தியாயங்கள் தொடர்ந்து அமைகின்றன. வேங்கடாசலம் என்னும் பெயர் இத்தலத் திற்கு எவ்வாறு ஏற்பட்டது என்பதையே அடுத்துவரும் அத்தியாயத்தில் விளக்குவர்.*

"அத்திரு மலைக்குச் சீரார் வேஙகடா சலமென் னும்பேர்
வைத்தன ரதுவே தென்னில் வேவென வழங்கெ ழுத்தே
கொத்துறு பவத்தைக் கூறுங் கடவெனக் கூறி ரண்டாம்
சுத்தவக் கரங்கொ ளுத்தப் படுமெனச் சொல்வா மேலோர்".

"வெங்கொடும் பவங்க ளெல்லாம் வெந்திடச் செய்வ தானன்
மங்கலம் பொருந்துஞ் சீர்வேங் கடமலை யான தென்று
தங்களாச் சிரமந் தன்னிற் தவத்தவ ரணுக லோடும்
சிங்கநீர் மாத வப்போச் சீர்மறை யாளன் தானே". (பா. 24, 25)

***என்னும் பாடல்களில், "வெம்மையான கொடுமைமிக்க பாவங்க ளெல்லாம் வெந்திடுமாறு செய்வதனாலே இத்தலத்திற்கு வேங்கடமலை என்று பெயர் வந்தது" என்பதை ஒரு கதையின் மூலமாக விளக்கக் காணலாம்.***

## பேறு பெற்றோர்

சோழனுக்குச் சக்கரவர்த்தி பிறந்தது, சக்கரவர்த்தி அரசு புரிந்தது, தொண்டமான் சக்கரவர்த்தி திருப்பணி உற்சவம் நடத்தியது, கிருஷ்ணசன்மாவின் சரித்திரம், மேருபுத்திரன் என்பதை விளக்குவது போன்ற வரலாறுகள் தொடர்ந்து அமைகின்றன.

வாயு, அகத்தியன், சங்கன் ஆகியோருக்கு அருள் புரிந்ததை அடுத்த அத்தியாயத்தில் கூறுவர். இடையில் தீர்த்தங்களின் பெருமையும் தீர்த்த யாத்திரையின் பெருமைகளும் கூறுவர்.

தொண்டமான் சக்கரவர்த்திக்குத் திருவாழி திருச்சங்கீந்தது, தான விசேடம், சற்சங்கத்தால் வந்த மகிமை, தும்புருவுக்கு அருள் செய்தது, பெரிய திருவடி பரமபதத்திலிருந்து கிரீடாசலங் கொண்டு வந்தது போன்றவை தனித்தனி அத்தியாயங்களில் விளக்கப் பெறுகின்றன.

சக்கரவர்த்தித் திருமகன் திருவேங்கடம் அடைந்தது, தேவர்களுக்கும் தசரத சக்கரவர்த்திக்கும் வரங்கொடுத்தது, பிரமன் உற்சவம் நடத்துவித்தது ஆகிய வரலாறுகளைக் கூறிய பின்னர், சக்கரவேந்தன் வெற்றியுரைக்கின்றார் ஆசிரியர்.

## சங்கு சக்கரம் தரித்த வரலாறு

இராமாநுசர் வேண்டியவாறே சீநிவாசன் சங்கு சக்கரம் தரித்தது பற்றிய வரலாறு தனியே 31 ஆம் அத்தியாயத்தில் விளக்கப்படுகிறது. ஆதிசேடனின் அமிசமான இராமாநுசர் பூதபுரி என்னும் தலத்தினில் அவதரித்துப் பின் பல தலங்களையும் தரிசித்து வந்தார். நாரணனே மேலாம் நூவில் பரம்பொருளாமென்று எங்கும் எம்பெருமான் புகழையே பரப்பி வந்தவர் இத் திருவேங்கடத்தை யடைந்து வேங்கடவனை நேரில் தரிசித்தார். எம்பெருமானின் திருக்கரங்களிலே சங்கும் சக்கரமும் இல்லாதது கண்டு துயரமுற்று, அவற்றை ஏற்றருளுமாறு வேண்டுகிறார்.

"ஆங்குள குதர்க்க வாதர் அடங்குற வென்று நீண்ட
வேங்கடத் தானை மிக்க விருப்பொடு வாழ்த்தி நின்றே
தேங்கமழ் துளவ மாலைச் செல்வனே யடிக ளிந்தத்
தீங்குறு கலிகா லத்தில் திகழ்சுடரத் திகிரி சங்கை".

"ஊன்றிகழ் விழிக்குத் தோற்றா திவ்வண மொளித்தான் முன்னீர்
தான்கலா மண்ணின் மேலோர் தமந்திரண் மனத்தா ராகி
ஞான்றுநன் குணாங்கி லாது நலிவர்க ளாகை யாலே
ஆன்றபே ருலகில் யாரும் அறிவுற வளையோ டாழி".

"தாமரைக் கரத்திற் றோன்றத் தரிசனை தருதல் வேண்டும்
மாமறைப் பொருளே யென்று வழங்கலுங் கருணை கூர்ந்து
நேமிவெண் சங்கி னோடு நேரவு யர்ந்த சீர்சால்
சாமள வடிவன் யார்க்குந் தரிசனை தருவா னன்றே".

(பா. 10-12)

இராமாநுசர் வேண்டுகோளை அன்புடன் ஏற்றுக்கொண்ட வேங்கடவனாகிய எம்பெருமான் அன்றுமுதல் சங்கும் சக்கரமும் ஏந்திக் கொண்டு இக்கலியுலகில் கண்கண்ட தெய்வமாகக் காட்சியருளி வருவதை ஆசிரியர் இப்பகுதியில் விளக்குவது குறிப்பிடத்தக்கதாகும்.

## வைணவ மகிமை

அடுத்து, வைணவச் சிறப்பைப் பத்துப் பாடல்களில் எடுத்துரைக்கின்றார். வைணவர்கள் ஒழுக வேண்டியவற்றையும், குருபக்தி, அடியார் பக்தி, இறைபக்தி என முறைப்படியான உண்மையுடன் கூடிய பக்திநெறிகளையும் இப்பகுதியில் விளக்கக் காணலாம்.

"அச்சுத னடிக்கே தொண்டுசெய் திறத்தாங்கு அவனுடை யடியார்தம் மேலும்
இச்சைகொண் டியற்றி யின்பதுன் பங்கள சமமென விதயத்தி னெண்ணி
அச்சமற் றுயரும் பகவனற் பாக வதர்குரு வாமிவ ரிடத்தில்
நிச்சய பத்திபி றந்தெழி லாசா னேமனந் தனைமனங் கொணடே"

"அனந்தபூ தரத்தான் வறிதுசெய் கருணை யஃதொன்று நோக்கிநன் னிலையின்
கனந்திகழ் கின்ற வைணவர் கட்கே காணியா முயர்பத முளது
மனந்தெளி கில்லா விழுதை யர்க்கஃது வாயத்திடா தெனமறை யாலுஞ்
சினந்தவி ருரவோ ராலுநா னறிந்த சீர்கெழு வைணவ மகிமை".

வைணவ மகிமை கூறும் இப்பகுதி வராக புராணத்தில் க்ஷேத்திர காண்டத்தில் கூறியவாறே இங்கு விளக்கப்பட்டுள்ளதாக இறுதிப் பாடலில் உரைப்பர். இப்பகுதி வைணவரேயல்லாது எல்லாச் சமயத்தாருக்கும் பொதுவான ஒழுக்கங்களைக் கூறுவதாகவே அமைந்துள்ளதைக் காணலாம்.

## நான்கு பெயர்கள்

வேங்கடமாமலையாகிய சேடகிரி நான்கு யுகங்களிலும் நான்கு பெயர்களைப் பெற்ற வரலாற்றை ஒரு அத்தியாயத்தில் விளக்குகிறார். கிருதயுகத்தில் 'அஞ்சனாத்திரி' என்றும், திரேதாயுகத்தில் 'நாரணாத்திரி' என்றும், துவாபர யுகத்தில் 'நரசிங்காத்திரி' என்றும் கலியுகத்தில் 'வேங்கடமலை' என்றும் பெயர் பெற்ற விவரம் இங்கே உரைக்கின்றார்.

அலர்மேல்மங்கை அவதரித்தது முதலாக சீநிவாச கலியாணம் நிகழும் வரையிலான வரலாறுகள் தொடர்ந்து கூறப்படுகின்றன. இவற்றுடன், அகத்தியர், சங்கராசன், மார்க்கண்டர், சுகப்பிரமரிஷி, சங்கன், அஞ்சனை, அருந்ததி போன்றோர் திருமலையில் வேங்கடவனை வணங்கிப் போற்றிப் பேறு பெற்ற வரலாறுகளும் தனித்தனியே விளக்கப் பெறுகின்றன.

## நூற்பயன்

வீட்டுமாசாரியர் தருமனுக்குத் திருமலையில் சீநிவாசன் வரவுரைத்த அத்தியாயத்தின் இறுதியில்,

"வணங்கியன் பொடித்தி ருப்பதி மருத்துவ மிசைப்போர்
இணங்கிநன் றெனாவி னிதுகேட் டுவப்பவ ரநந்தன்
பணங்கொள்பார் மிசைப்ப ழுதறந லனடைந் தலர்மேல்
அணங்குகேள் வன்வாழ் பதியில் ஆனந்தமெய் துவரால்"

(பா. 15)

என நூற்பயனைக் கூறி இப்புராணத்தை முடிக்கின்றார் ஆசிரியர்.

## வாழித்திருநாமம்

நிறைவாக, வாழித்திருநாமம் கூறுமிடத்து, தொண்டை நாட்டிற்கும், சேசயிலமாகிய திருவேங்கடத்திற்கும், கோயிலுக்கும், சீநிவாசனுக்கும் வாழ்த்து கூறுகின்றார்.

"ஒப்பரிய ஆழ்வார்கள் வாழி குரவோர் வாழி உபயவே தாந்தம் வாழி
எப்புவன மும்புகழு மெதிராசன் வாழிதினம் ஏத்துமடி யவர்கள் வாழி
செப்பதிரு மலைமுனிவர் வாழிவர முனிவர் செம்மையெந் நாளும் வாழி
இப்புவியி னிக்கதை யிசைப்போர் கள்வாழி நலனென்று கேட்போர் வாழியே".

நூலின் தொடக்கத்தில் ஆழ்வார்களையும், இராமாநுசரையும், அடியார்களையும் வாழ்த்தி வணங்கித் தொடங்கியது போலவே, நூலின் இறுதியிலும் அவர்களை நினைந்து போற்றி வாழ்த்துவது இந்நூலாசிரியரின் தனிச்சிறப்பாகும்.

## திருவேங்கடாயணம்

திருவேங்கடமலையில் நின்றருளும் சீநிவாசரின் வரலாறும், பக்தருக்கு அருளும் சிறப்பும் குறித்தது இந்நூல். திருவேங்கடத்தின் சிறப்பு, சீநிவாச கலியாணம், திருவிளையாடல்கள் ஆகியனவற்றைக் கொண்ட இந்நூல் இரண்டு பாகங்களாக 1000 பாடல்களில் அமைந் துள்ளது. திரு வெ. ந. மூர்த்தி அவர்கள் அண்மையில் இயற்றியளித்த இந்நூல் அச்சில் வெளிவந்துள்ளது. இதில் இறுதியில் கீர்த்தனைப் பாடல்களாகச் சேர்த்திருப்பது ஒரு சிறப்பாகும்.

வட நாட்டு வைணவத் தலங்கள் பதினொன்றில் திருவேங்கடம் ஒன்று மட்டுமே தலபுராணம் பெற்றுள்ளது. அதுவும் அந்நூல் எழுந்த காலத்து இத்தலம் தொண்டை நாட்டில் இருந்ததாலேயே என எண்ண வேண்டியுள்ளது. பிற எந்தத் தலத்திற்கும் இவ்வாறு புராணம் தோன்றவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறே சிவத்தலம் ஐந்திற்கும், புராண, அபிமான தலங்கள் பத்தொன்பதற்கும் தமிழில் தலபுராணங்கள் கிடைக்கவில்லை.



# ஈழநாட்டுத் தலபுராணங்கள்

ஈழநாட்டில் தமிழ்ச் செய்யுள் இலக்கியத்தின் தோற்றம் மிகப் பழமையானது. கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டிற்கு முன்னரே இங்குத் தமிழ் இலக்கியங்கள் தோன்றி வளர்ந்ததாகக் கூறுவர். ஆயினும், ஆரியச் சக்கரவர்த்திகள் (கி. பி. 1250-1621) காலத்தில் தம்பதேனியாவில் எழுந்த 'சரசோதி மாலை' (கி. பி. 1310) என்ற நூலே முதல் ஈழத் தமிழ் நூலாக இன்று கிடைக்கின்றது. பண்டித போசராசன் இயற்றிய இந்நூலுக்கு முன்னே பல நூல்கள் இயற்றப் பட்டிருக்கலாம் எனத் தோன்றுகிறது. இருப்பினும் இன்று இதுவே முதல் நூலாகக் கிடைக்கிறது.

யாழ்ப்பாணத்தில் ஆரியச் சக்கரவர்த்திகள் ஆட்சி கி. பி. 13 ஆம் நூற்றாண்டில் தொடங்கியதென்று வரலாற்றாசிரியர் கூறுவர். அம்மன்னர் செகராசசேகரன், பரராசசேகரன் என்ற பட்டப் பெயர்களை ஒருவர்பின் ஒருவராகச் சூடிக்கொண்டு சில நூற்றாண்டுகள் சிங்கை நகரிலிருந்தும், பின்னர் நல்லூரிலிருந்தும் அரசு செலுத்தினர். அவர்களுள் சிலர் தமிழ்ப் புலவர்களை ஆதரித்துத் தமிழ் இலக்கியம் வளரப் பெரிதும் உதவினர். அவர்கள் காலத்தில் திருக்கோணமலைப் பகுதியிலும் யாழ்ப்பாணத்திலும், தேனுவரை, தம்பதேனியா ஆகிய இடங்களிலும் சிறந்த தமிழ்ப் புலவர்கள் வாழ்ந்தனர். செகராசசேகரம், பரராசசேகரம் என்ற மருத்துவ நூல்களும் செகராசசேகர மாலை என்ற சோதிட நூலும் இச் சக்கரவர்த்திகள் பெயர் கொண்டே விளங்குகின்றன.

கி. பி. பதினான்காம் நூற்றாண்டிற்கும் பதினொராம் நூற்றாண்டின் இறுதிக்குமிடையே ஈழத்தில் பல தமிழ் இலக்கியங்கள் தோன்றியுள்ளன. தூது, காதல், கோவை ஆகிய அகப்பொருள் வகை நூல்களும், பள்ளு, அந்தாதி, பதிகம், ஊஞ்சல், புராணம், காவியம் ஆகிய புறப்பொருள் வகை நூல்களும் குறிப்பாக இக்காலத்தில் தோன்றியுள்ளன. அவற்றுள் சில தலபுராணங்களும் தோன்றி யுள்ளமையை கண்டு நோக்குவோம்.

## பாடல் பெற்ற தலங்கள்

ஈழத்தில் பாடல் பெற்ற சிவத் தலங்களாகயிருப்பன திருக்கோணேசுவரம், திருக்கேதீசுவரம் என்னும் இரண்டுமாகும். தமிழ்நாட்டுத் திருத்தலங்களின் வரலாறுகள் பன்னெடுங்காலமாக அகில உலகச் சைவ மக்களின் நெஞ்சில் நிலை பெற்றிருப்பது போன்றே இந்த ஈழநாட்டுத் திருத்தலங்களும் இந்துக்களின் இதயத்தில் இருந்து வருகின்றன.

## திருக்கோணேசுவரம்

ஈழ வளநாட்டில் திருக்கோணமலை மாவட்டத்தில் அறுபதுக்கும் மேற்பட்ட சைவக்கோயில்கள் உள்ளன. சைவம் சுமழும் தமிழ்த் திருநாமங்கள் தாங்கிய பழைய ஊர்களில் செந்நெல்லும் கரும்பும் செழித்து வளருகின்றன. மிகப் பழைய காலத்தில் இராமாயண இதிகாச நிகழ்ச்சிகள் இங்கே நடைபெற்றன என்பர். குளக்கோட்டு மன்னன் செய்த தொண்டுகள் பலவற்றின் சுவடுகள் இன்றும் அறியக் கூடியனவாயுள்ளன. கோயில்களை மையமாகக் கொண்டெழுந்த குடியேற்றங்கள் இங்கே உள்ளன. "கோயிலுஞ் சுனையும் கடலுடன் சூழ்ந்த கோண மாமலை அமர்ந்தாரே" எனத் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பாடியவாறே இங்கு இறைவன் அருளாட்சி செய்வதைக் காணலாம். சைவத்தமிழ்ப் பெயர்களும் சைவ வழிபாடுகளுமே இப்பகுதியெங்கும் ஒளிவீசுகின்றன.

திருக்கோணேசுவரம் இலங்கையின் கிழக்கே கிழக்கு மாகாணத்தில் உலகப் புகழ்பெற்ற இயற்கைத் துறைமுகமாகிய திருக்கோணமலைத் துறைமுகம் அமைவதற்குச் சாதகமாகியுள்ள மலைகளொன்றின் உச்சியில் உள்ளது. மூன்று மலைகளைக் கொண்டு முக்கோண வடிவில் அமைந்திருப்பதால் திருக்கோணமலை என்ற பெயர் பெற்றுள்ளது. இத்தலம் சுமார் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட திருத்தலம் எனக் கூறுகின்றனர்.

திருக்கோணேசுவரம் தட்சிண கயிலாயம் என்று போற்றப்பட்டு வருகின்றது. வடக்கே இமயக் கொடுமுடியில், கயிலாய சிகரத்தில் கயிலைநாதன் எழுந்தருளியிருப்பதுபோல தெற்கே திருக்கோண மலையில் கோணேசப்பெருமான் அமர்ந்திருந்து அருள் பாலிக்கின்றார். பூகோள அமைப்பில் இந்த இரண்டு தலங்களும் ஒரே அட்சரேகையில் அமைந்திருப்பதையும், இவையிரண்டுக்கும் நடுவே தில்லைத் திருத்தலம் அமைந்திருப்பதையும் திருமூலர் தம் திருமந்திரத்திலே குறிப்பிடுவர்.

" மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை
கூருமிவ் வானின் இலங்கைக் குறியுறுஞ்
சாருந் திலைவனத் தண்மா மலயத்தூ
டேறுஞ் சுழுனை இவைசிவ பூமியே."

(திருமந்திரம் 9 - 27)

இவை விரிவான ஆய்வுக்குரியன.

மகாமேரு மலையின் சிகரங்களிலொன்றாகத் திருக்கோணமலை குறிப்பிடப்படுகின்றது. இந்த வரலாற்றைப் புராணங்கள் கூறுகின்றன. தட்சிணாகயிலாய புராணத்தில் இதன் விரிவான வரலாற்றை அறியலாம். இற்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது இராமாயண வரலாறு. அக்காலத்தில் வாழ்ந்த இலங்கை மன்னன் இராவணன் சைவ சமயத்தவன் என்பதையும், அவன் திருக்கோணேசுவரத்தில் தவம் செய்து வழிபட்டு மலையெடுத்த வரலாற்றையும், கோணேசப் பெருமானிடம் வாளும் நாளும் பெற்ற வரலாற்றையும், புராணங்களும் திருமுறைகளும் கூறுகின்றன. கோணமாமலையில் இராவணன் வாளால் வெட்டி மலையெடுத்த இடம்

இன்றும் "இராவணன் வெட்டு" என்று கூறப்பட்டு வருவதையும் அறிகின்றோம். "எடுத்தவன் தருக்கை இழித்தவர் விரலால்" என்று திருக்கோணமலைப் பதிகம் கூறுவதாலும், "இலங்கை மன்னன் எடுத்த அடுக்கல் மேல்" என்றும்; "இராவணன் மேலது நீறு" என்று திருமுறைகள் பேசுவதாலும் இத்தலம் இராமாயண காலத்துக்கு முற்பட்டது என அறியலாம்.

"தெக்காரும் மாகோணத்தானே" என்று நாவுக்கரசரும்; "மாகோணத்தானே" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளும்; "ஆழிபுடை சூழ்ந்தொலிக்கும் ஈழந்தன்னில் மன்னுதிருக்கோணமலை மகிழ்ந்த செங்கண் மழவிடையார்" என்று சேக்கிழார் பெருமானும்; "திருக்கோணமலை தலத்தாரு கோபுரம்" என்று அருணகிரிநாத சுவாமிகளும் இக்கோணேசுவரத்தைப் பாடியுள்ளனர்.

## முதல் தலபுராணம்

திருக்கோணாசல புராணம், தட்சிண கைலாச புராணம், திருக்கோணாசல வைபவம், கோணேசர் கல்வெட்டு, கோணேசர் ஆலய வரலாறு போன்ற நூல்கள் இத்திருத்தலத்தின் வரலாறுகளைத் தெரிவிக்கின்றன. இவற்றுள், தட்சிண கைலாச புராணம் என்னும் தலபுராணமே ஈழத்தில் கிடைக்கும் முதல் தமிழ்த் தலபுராணம் ஆகும். இந்நூல் ஆரியச் சக்கரவர்த்திகள் யாழ்ப்பாண அரசைக் கைக்கொண்ட காலகட்டத்தில், கி.பி. 17ஆம் நூற்றாண்டளவில் இயற்றப்பெற்றதாகக் கூறப்படுகிறது.

## தட்சிண கைலாசபுராணம்

தட்சிண கைலாசபுராணம் என்பது திருகோணமலையிற் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள கோணேசர் பெருமானையும் மாதுமையம்மையாரையும் பற்றிக் கூறும் தலபுராணமாகும். இத்தலத்தின் தோற்றம், ஆதிவரலாறு ஆகியவற்றையும் அவை பற்றிய வேறு பல செய்திகளையும் இது கூறுகிறது. வட மொழியிலுள்ள மச்சேந்திய புராணத்தைத் தழுவியே இந்நூல் செய்யப்பட்டுள்ளது என்பதைப் பின்வரும் பாயிரச் செய்யுள் காட்டும்.

"மீதுயர்ந்த வுருத்திரரும் விரிபதுமப் பெருமலரின் விரிஞ்சர் தாமும்
போதுதிரு மாதவரு மாதவர்க்கு ளொருபெரிய புனித மீனு
மாதரவி லிறைஞ்சககதை *கயிலாய புராணமென* வறைய லுற்றேன்
மாதுரிய மச்சேந்திய வடபுரா ணத்தியல்பு மருவத் தானே".

இச்செய்யுளால், இந்நூற்கு இதன் ஆசிரியரிட்ட பெயர் *'கயிலாய புராணம்'* என்றும் தெரிகிறது.

## நூலமைப்பு

தட்சிண கைலாச புராணம் பாயிரம் நீங்கலாக, ஈழமண்டலச் சருக்கம், திருமலைச் சருக்கம், புவனோற்பத்திச் சருக்கம், அர்ச்சனாவிதிச் சருக்கம், மச்சாவதாரச் சருக்கம், தரிசனாமுத்திச் சருக்கம், இருநகரச் சருக்கம் என ஏழு சருக்கங்களையும் 632 செய்யுட்களையும்

கொண்டுள்ளது. முதல் ஆறு சருக்கங்களும், திருநகரச் சருக்கத்திலே முதற் பதினேழு செய்யுள் வரையுமே வடமொழிப் புராணத் தழுவலாகு மெனத் திருநகரச் சருக்கத்தின் பதினேழாவது செய்யுள் கூறுகிறது.

தட்சிண கைலாச புராணமாகிய இந்நூல் 'மச்சேந்திய வட புராணத்தியல்பு மருவச்' செய்யப்பட்டதெனச் சொல்லப்படுவதனால் இது வடமொழிப் புராண நூலின் தழுவலென்பதும் அதன் இயல்பு அமையச் செய்யப்பட்டதென்பதும் புலனாகும். இதிற் காணப்பெறும் புவனோற்பத்திச் சருக்கம், மச்சாவதாரச் சருக்கம் ஆகியன வடமொழிப் புராணச் சாயலைக் காட்டும். எனினும் பெருங்காப்பிய இலக்கணப் பண்புகளாகிய வாழ்த்து, வணக்கம், வருபொருள் ஆகிய பயின்று, நாற்பொருளிற் சில குன்றித் தன்னிகரில்லாத் தலைவனும், மலை கடல் நாடு நகர் வருணனைகளும் கொண்டு, ஏனையவாய நன்மணம் புணர்தல், பொன்முடி கவித்தல் போன்றன எதுவுமின்றிக் காவிய இயல்பு ஓரளவு பெற்று விளங்குவதாலும் ஒரு தலத்தின் வரலாற்றைக் கூறுவதாலும் இது ஒரு தலபுராண இலக்கியமாகத் திகழ்கிறது.

## திருநகர்ச் சருக்கம்

காவிய, புராண மரபுக்கு மாறாக இந்நூலின்கண் திருநகர்ச் சருக்கம் இறுதியிலே வைக்கப்பட்டிருக்கிறது. வடமொழி நூலின் தழுவலாகையால் நூலின் தொடக்கத்தில் அதற்கிடமில்லை போலும். திருநகர்ச் சருக்கமென்ற பெயர் கொண்டிருப்பினும், இது நகர வர்ணனையாக அமையாது, இராம விராவண யுத்தத்தின்பின் இராமபிரான் இலங்கை நகராட்சியை விபீடணற் கீந்து, இராவணனைக் கொன்ற பிரமகத்தி தோடம் நீங்கத் தென்கயிலையை வணங்கி, அங்கே கோயிலமைத்த கதையும், சோழவரசனான வரராம தேவன் என்பான் புராணங் கேட்குநாளில் இத்தல வரலாறு கேட்டு அங்குப் பெரும் பொருளொடு சென்று அதனைத் திருத்தியமைத்த வரலாறும், எஞ்சிய பொன்னைக் கிணற்றிலிட்டுக் காவல் வைத்துச் செல்ல, அவன் புதல்வனான குளக்கோட்டன் அது கேட்டு மேலும் பொருள் கூட்டிக் கோயிலைப் பெருப்பித்துக் குளங்கட்டிய கதையும், அவன் மரபில் வந்த கயவாகுவென்னும் அரசன் பௌத்தனாய்ச் சிறிசங்கபோதி என்னும் பெயருடன் அநுராதபுரியிலிருந்து அரசோச்சிப் பின்னர் தென்கயிலைநாதருக்குத் திருப்பணி செய்ததும், அதன்பின் ஆரியச் சக்கரவர்த்தியாம் செகராசசேகரன் சைவம் வளர்த்த செய்தியும் சொல்வதாய் அமைந்துள்ளது.

இந்நூலின் முதலாவது அத்தியாயமான இலங்கை மண்டலச் சருக்கம் ஈழநாட்டின் வளங்கூறுவதாக அமைந்துள்ளது.

"வரையெலா மாரம் ஆரம் வனமெலா நன்கார் நன்கார்
நிரையெலாஞ் சாலி சாலி நிலையெலாங் கன்னல் கன்னல்
தரையெலா நீல நீலந் தடமெலா நாறு நாறுங்
கரையெலா மன்ன மன்னங் கடலெலா மீழ மீழம்".

என்னும் பாடல் ஈழத்தின் எழில் வனப்பை எடுத்துக் காட்டும்.

இப்புராணச் செய்யுள்கள் அந்தாதித் தொடையில் அமைந் திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். பாடல்கள் இனிய எளிய நடையில்

அமைந்திருப்பதுடன் வரலாற்றுச் செய்திகளையும் தருவனவாக அமைந்துள்ளன.

## வரலாற்றுச் சான்றுகள்

கி. பி. 6 ஆம், 7 ஆம் நூற்றாண்டில் பல்லவர் காலத்திலும் 9 முதல் 11 ஆம் நூற்றாண்டு வரை சோழர் காலத்திலும், 12 ஆம், 13 ஆம் நூற்றாண்டில் பாண்டியர் காலத்திலும் திருக்கோணமலை, பொலன்னறுவை, அநுராதபுரம் முதலிய இடங்களிலெல்லாம் சிவாலயங்கள் சிறப்புற்றிருந்திருக்கின்றன. திருக்கோணமலை மாவட்டத்தில் திருக்கரைசை, கந்தளாய், தம்பலகமம், தென்னமரவாடி, பெரியகுளம் போன்ற இடங்களில் சிவன் கோவில்கள் இருந்து அழிந்த அழிபாடுகள் இன்றும் காணப்படுகின்றன. இவற்றுள், திருக்கரைசைக்குத் தலபுராணம் கிடைக்கின்றதை நோக்குமிடத்து மற்றுமுள்ள திருத்தலங்களுக்கும் தலபுராணங்கள் இருந்திருக்க வேண்டுமென அறியலாம்.

சோழப் பேரரசு தலைதூக்கிய காலத்தில் ஆதித்ய சோழனின் மகன் முதலாம் பராந்தகன் (கி. பி. 907-956) மதுரையைக் கைப்பற்றிப் பாண்டி நாட்டைச் சோழப் பேரரசோடு இணைத்தான். அவ்வேளையில் பாண்டிய மன்னனாக இருந்த இரண்டாம் இராஜசிங்கன் இலங்கை மன்னனான ஐந்தாம் காசியப்பனின் (கி. பி. 915-923) துணையைச் சோழருக்கெதிராக நாடினான். சோழரோடு செய்த போரில் தோல்வியடைந்த இராஜசிங்கன் இலங்கைக்கு ஒடி ஒளிந்தான். அங்கு இம்மன்னன் திருக்கோணமலை மாவட்டத்திலுள்ள தம்பலகமம் சிவன் கோவில் திருப்பணிகளைச் செய்துள்ளான்.

"மிக்கசீர் இலங்கை நாட்டில் விரிகதிர் பரிதி யோச்சி
உக்கிர சேன சிங்கன் உதவிய சிறுவ னென்னும்
மைக்கடுங் களிற்றுத் தானை வரராச சிங்க மன்னன்
புக்குமற் றவர்கள் போற்றப் பொருவிலா வரசு செய்தான்".

என்னும் திரிகோணாசல புராணச் செய்யுள் இராசசிங்க மன்னன் இலங்கையை ஆண்டதாகக் கூறுகின்றது.

போர்த்துக்கீசியர் கோணேசர் ஆலயத்தை அழித்தபொழுது, அங்கிருந்த ஆதிகோண நாயகரை மறைத்து எடுத்து வந்த மக்கள், அதை இத்தம்பலக ஆலயத்தில் நிறுவி இன்றும் வழிபட்டு வருவதாகக் கூறப் பெறுகின்றது.[1]

## தொன்மைச் சிறப்பு

சிவத் தலங்கள் சில தாமே தோன்றுகின்றன. வேறுசில அற்புத நிகழ்ச்சிகளால் தோற்றுவிக்கப்படுகின்றன. திருக்கோணேசுவரம் இயல்பாகவே தெய்வீகமாகத் தோன்றிய தலம் என்று கூறுகின்றனர்.

மூன்றாவது கடல்கோள் நிகழ்ந்த காலத்தில் மாபெரும் கற்கோவிலொன்று ஈழக்கடலில் மூழ்கியிருக்கலாமென்ற கருத்து ஒன்றும் நிலவி வருகின்றது. திரு. மைக்வில்சன், திரு. ஆதர்கிளாக்

1. திருக்கோணமலை மாவட்டத் திருத்தலங்கள், ப. 20-21.

போன்ற ஆழ்கடல் ஆய்வாளர்கள் கோணேசர் கோவிலுக்கு அருகிலுள்ள கடலில் நடத்திய ஆராய்ச்சியின் பின்னர் கூறியிருக்கும் கூற்றுக்களின்படி கடலில் கோவிலின் தளங்கள், தூண்கள், மணிகள், விளக்குகள் என்பன இருப்பதாக அறியக் கிடக்கின்றது. அந்தக் கடல் கோளின் பின்னர் கோணமாமலையில் மூன்று கோவில்கள் அமைக்கப்பட்டிருந்தன. மலையடிவாரத்திலொன்றும், மலையுச்சியிலொன்றும், மலையின் நடுப்பாகத்திலொன்றும் இருந்தன. இந்தக் கோயில்கள் கிறித்து பிறப்பதற்கு ஆயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன், அதாவது இற்றைக்கு மூவாயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன் கட்டுப்பட்டுள்ளன.

இப்புராதன கோணேசுவரர் கோவிலுக்கு கி. பி. 5-ஆம் நூற்றாண்டளவில் சோழ மன்னனாகிய வரராமதேவனுடைய மகன் குளக்கோட்டு மன்னன் திருப்பணிகள் பல செய்வித்துள்ளான். தன் தந்தையாரின் விருப்பத்திற்கிணங்க குளக்கோட்டு மன்னன் இலங்கைக்கு வந்து கோணேசர் கோவிலில் திருப்பணிகள் செய்துள்ளான். இதற்கான திட்டப்பணிகள் முழுவதும் குறித்துக் கோணேசர் கல்வெட்டு என்னும் ஒரு தனிநூலே வழங்கப் பெற்று வருகின்றது. இக் கல்வெட்டிலுள்ளவாறு இக்கோயில் திருப்பணிகள் கி. பி. பதினாறாம் நூற்றாண்டு வரை நடைபெற்று வந்துள்ளன.

கி. பி. 1624 ஆம் ஆண்டு தமிழரின் புத்தாண்டு ஆகிய சித்திரை வருடப் பிறப்பு அன்று போர்த்துக்கீசத் தளபதியாகிய கொன்ஸ்ரன்டைன் டிசா என்பவன் இந்த ஆலயத்தை இடித்துத் தரை மட்டமாக்கிக் கொள்ளையடித்து அழித்தான். அப்போது ஆலயத்திலிருந்த கல்வெட்டுச் செய்தியைப் பிரதி செய்து போர்த்துகல் மன்னனுக்கு அனுப்பி வைத்தான். இந்தச் செய்தியில், "மனுராசா அல்லது மாணிக்கராசா என்னும் மன்னன் இலங்கையை ஆண்டான். அவன் கி. மு. 1300 ஆம் ஆண்டு கோணேசர் கோவிலைக் கட்டினான்" என்று கூறப்பட்டுள்ளது. (அஜீடா நூல் நிலையச் சுவடி "கொண்குவிஸ்ரா" பக்கம் 51).

இவ்வாறு இவ்வாலயம் அழிக்கப்பட்டபின் சுமார் முன்னூற்றைம்பது ஆண்டுகளாக ஆலயமில்லாதிருந்தது. 1950 ஆம் ஆண்டிற்குப் பிறகே திருக்கோணமலைச் சைவமக்கள் புதியதாகக் கோவிலை நிறுவியுள்ளனர்.

"போர்த்துக்கீசரால் கோணேசர் கோவில் அழிக்கப்பட்டபின் மாதுமையம்பாள் சமேத கோணேசப் பெருமான் தேவாரத் திருமுறைகளையே கோவிலாகக் கொண்டு அமர்ந்திருந்தார் என்று கூறுவதில் இந்துக்கள் தெய்வீகப் பெருமையடைகின்றார்கள்" என்பார் கூற்றும் இவண் கருதத்தக்கது.[1]

பாடல் பெற்ற தலங்கள் புராதனமாக இருப்பதும், அப்பாடல்களாலேயே அவை இன்றும் திருத்தலங்களாக நிலைநிறுத்தப் பெறுவதும், தேவாரத் திருமுறைகளின்வழி இத்தகைய தலங்களுக்குத் தலபுராணங்கள் எழுந்தன என்பதற்கும் இவ்வரலாற்றுச் சான்றுகள் பெரிதும் துணைபுரிகின்றன.

1. சைவப்புலவர் இ. வடிவேல், திருக்கோணமலை மாவட்டத் திருத்தலங்கள், ப. 1-4.

## பதிப்பு விவரம்

தட்சிண கைலாச புராணம் என்னும் இந்நூலை 1887 ஆம் ஆண்டு கா. சிவசிதம்பர ஐயர் சென்னையில் முதன் முதலாகப் பதிப் பித்துள்ளார். பின்னர் 1916 ஆம் ஆண்டு பு. பொ. வைத்தியலிங்க தேசிகர் பருத்தித் துறையிற் பதிப்பித்து வெளியிட்டார். முன்னவர் பதிப்பிலே இந்நூல் யாழ்ப்பாணத்து மகாவித்துவான் சிங்கைச் செகராசசேகரன் இயற்றியது என்று கூறப்பட்டுள்ளது. பின்னவர் பதிப்பிலே 'பிரம்மஸ்ரீ பண்டிதராசர் அருளிச் செய்த ஸ்ரீதக்ஷிண கைலாசபுராணம்' என்றுரைக்கப்பட்டுள்ளது. இரு பதிப்பின் பாயிரச் செய்யுள்களும், நூற்செய்யுள்களும் இடையிடை வேறுபடுவதால், அவற்றைக் கொண்டு ஆக்கியோன் பெயர் எதுவென அறிதல் அரிதாகவுள்ளது. எவ்வாறு ஆயினும் இந்நூல் ஆரியச் சக்கரவர்த்திகள் காலத்துக்குரியதாகுமென்பதனைச் சில சான்றுகள் கொண்டு நிறுவலாம்.

நூலாசிரியரைப் பண்டிதராசர் என்று கூறும் வைத்தியலிங்க தேசிகர் பதிப்பிலே திருநகரச் சருக்கத்தில்,

> "அம்புயத் துதரத் தண்ண லமைந்தவா ரியர்தங் கோமான்
> உம்பர்வந் திறைஞ்சுஞ் சேது வுயர்கரைக் காவல் வேந்தன்
> செம்பொன்மா மௌலிச் சென்னிச் செகராச சேக ரேசன்
> தும்பையஞ் சடையான் சைவந் தோன்றிடத் தோன்றி னானால்".

**(108)**

என்ற விருத்தப்பாவிலும், அதனைத் தொடர்ந்து வரும் செய்யுள்கள் சிலவற்றிலும் செகராசசேகரன் சமகாலத்தவனாகப் புகழப்படுகிறான். எனவே, இப்பதிப்பின்படியும், இந்நூல் ஆரியச் சக்கரவர்த்திகள் காலத்துக்குரியதாகிறது. அன்றியும் முதற் பதிப்பின்படி இதற்கு நூற்சிறப்புப் பாயிரமளித்த அரசகேசரியும், இரண்டாம் பதிப்பின்படி அந்நூற் சிறப்புப் பாயிரமளித்த கவிவீரராகவனும் இந்நூல் செகராசசேகரன் காலத்திற் செய்யப்பட்டதென்பர்.[1] எனவே, ஈழத்தில் தோன்றிய தலபுராணங்களுள் இப்புராண நூலே முதலாவது என்பது தெளிவாகும்.

## திருக்கேதீச்சரம்

ஈழ நன்னாட்டிலுள்ள சைவத் தலங்களுள் ஒன்று திருக்கேதீச்சரம். முன்னொரு காலத்தில் கேது பூசித்தமையால் இது கேதீச்சரம் என்று பெயர் பெற்றது என்பர். "செய்ய கேது தலையற்ற வந்நாள் இருந்து பூசனை செய்து முடிப்போன்" என்பது பழம்பாடல். இலங்கையின் வடபாகத்தில் மாந்தை என்னும் மாதோட்ட நகரிலே பாலாவி என்ற ஆற்றின் கரையில் உள்ளது இத்தலம். பிருகு முனிவர், மாலியவான் என்னும் மன்னன் போன்ற பலர் வழிபட்டுப் பேறு பெற்ற திருவூர்.

1. டாக்டர் க. செ. நடராசா, ஈழத்துத் தமிழ் இலக்கிய வளர்ச்சி, ப. 14, 15.

"பண்டு நால்வருக்கு அறம்உரைத் தருளிப் பல்லுல கினில்உயிர் வாழ்க்கை
கண்ட நாதனார் கடலிலங் கைதொழக் காத லித்துறை கோயில்
வண்டு பண்செயு மாமலர்ப் பொழின் மஞ்சை நடமிடு மாதோட்டம்
தொண்டர் நாடொ றும்துதி செயஅருள் கேதீச் சரமது தானே".

எனச் சம்பந்தர் இத்தலத்தின் சிறப்பினை உரைப்பர்.

திருக்கேதீச்சரம் அமைந்துள்ள மாதோட்டம் முன்னாளில் மிகப் பெரிய துறைமுக நகரமாய் நிலவியது. கிரேக்கர், உரோமர், அரேபியர் முதலானோர் கடல்கடந்து வந்து இங்கே வாணிபம் செய்தனர். மாதோட்டத்தை மருவினாற் போலமைந்த வங்காலையென்னும் இடம் வங்கங்கள் நிறைந்து விளங்கியது.

"அங்கத்துறு நோய்கள் அடியார்மேல் ஒழித்தருளி
வங்கம்மலி கின்றகடன் மாதோட்ட நன்னகரில்
பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்
தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே".

என்னும் சுந்தரர் திருவாக்கு இதனை வலியுறுத்தும்.

சிதம்பரத்தைப்போல சுமார் நாற்பது ஏக்கர் நிலப்பரப்பிலே இவ்வாறு சிறப்புடன் அமைந்திருந்த இத்தலம் பிற்காலத்தில் பெரும் அழிவுக்குள்ளாகியது. சோழர் காலத்தில் மாதோட்டத்து இராசராசபுரம் என வழங்கிய பகுதி, தமிழ்நாட்டுக் குலசேகரப்பட்டினம் போலப் பெருமை வாய்ந்ததாயிருந்தது. சோழரின் பின்வந்த பாண்டியர்களுள் சுந்தரபாண்டியன் இங்கே செய்த திருப்பணிகள் பற்றிய விவரம் சிதம்பரத்துக் கல்வெட்டுகளில் உள்ளன. இருப்பினும் காலத்தால் சிதைவுற்ற இத்திருத்தலம் 1872 ஆம் ஆண்டளவில் ஆறுமுகநாவலர் அவர்களால் ஈழச் சைவ மக்களுக்கு நினைவூட்டப் பெற்றது குறிப்பிடத் தக்கதாகும். அவர் தமது காலத்திலேயே இத்தலத்திற்குரிய நாற்பது ஏக்கர் நிலத்தை வாங்கி பழையபடியே கோயில் நிறுவ முயற்சிகள் மேற்கொண்டார். பின்பு 1893 இல் சைவ மக்கள் செய்த முயற்சியால் இக்கோயில் மீண்டும் அங்கே கண்டெடுக்கப்பட்டுள்ளது. பழைய திருமேனிகளும், கோயிலும் திருப்பணி செய்யப் பெற்று இப்பொழுது புது எழில்பெற்று விளங்கி வருகின்றன.

திருக்கேதீசுவரநாதன் மீது பக்தர்கள் பல பிரபந்தங்கள் பாடியுள்ளனர். ஆறுமுகநாவலர் அவர்களின் மருகரான வித்துவசிரோமணி பொன்னம்பலப்பிள்ளை திருக்கேதீச்சரத் தேவாரத் திருப்பதிகங்களுக்கு உரை எழுதியுள்ளார்.

இத்தலத்திற்குரிய திருக்கேதீச்சுர புராணம் வைத்தீசுவர குருக்கள் அவர்களால் அண்மையில் இயற்றப்பட்ட தலபுராணமாகும். இத்தலத்திற்குரிய பழைய தலபுராணம் இருந்திருத்தல் வேண்டும். அது இன்று கிடைக்கவில்லை.

## பிற தலபுராணங்கள்

ஈழநாட்டில் பாடல்பெற்ற தலங்களான திருக்கோணமலை, திருக்கேதீச்சரம் தவிர பிற தலங்களும் புராண வரலாற்று நூல்களைப் பெற்றுள்ளன. கதிர்காமம் பற்றி அ. நாகலிங்கம் பிள்ளையவர்கள்

கதிர்காமப்புராணம் இயற்றியுள்ளார். 18 சருக்கங்களும் 343 பாடல்களும் கொண்ட இப்புராணம் 1932 இல் வெளிவந்துள்ளது. கதிர்காம மான்மியம், கதிர்காம வரலாறு போன்ற நூல்களும் அண்மையில் தோன்றியுள்ளன.

வடமொழியிலுள்ள வியாக்கிரமான்மியம் என்ற நூல் தமிழில் வியாக்கிரபாத புராணம் என மொழிபெயர்க்கப் பெற்றதாகக் கூறுவர். அளவெட்டி வைத்தியநாதத் தம்பிரான் என்பவர் இயற்றிய இந்நூல் இன்று கிடைக்கவில்லை. எனவே அதன் காலம் பற்றியும் பொருள் பற்றியும் எதுவும் அறிய இயலவில்லை.[1]

ஈழத்திலுள்ள திருக்கரைசை என்னும் தலத்திற்குரியதாகத் திருக்கரைசைப் புராணம் என்னும் ஒரு தலபுராணமும், திருத்தில்லைபுரம் என்னும் தலத்திற்குரியதாக ஈழத்துச் சிதம்பர புராணம் என்னும் ஒரு தலபுராணமும் இன்று கிடைக்கப் பெறுகின்றோம். அவற்றை ஈண்டு நோக்கலாம்.

## திருக்கரைசைப் புராணம்

ஈழநாட்டில் திருக்கோணமலைப் பகுதியில் மகாவலிகங்கைக் கரையோரத்திலே அமைந்துள்ள 'கரைசை' என வழங்கும் பதியில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானின் புகழை விரித்துக் கூறும் தலபுராணம் இது. கரைசையம்பதியை 'அகத்தியத்தாபனம்' எனவும் வழங்குவர். அகத்திய முனிவரே இப்பதியைத் தாபித்தார் என்று இந்நூல் கூறும். இப்புராணம் சூதமுனி அருளிச் செய்த வடமொழிப் புராணத்தைத் தழுவிச் செய்யப்பட்டது என இந்நூலின் புராண வரலாற்றுப் பகுதியில் சொல்லப்பட்டுள்ளதாயினும், முதல் நூலின் பெயர் அறிய இயலவில்லை.

இந்நூல் செய்த புலவர் பெயர் தெரியவில்லை. அவர் செய்த நூற்பெயர் கொண்டு அவரைக் 'கரைசைப் புலவர்' என்ற காரணப் பெயரால் அழைப்பர். எனினும், நூலின் அகச்சான்றினைக் கொண்டு அவர் ஈசானச் சிவனைக் குருவாகக் கொண்டவரென்றும், 'கொற்றங்குடி வாழும் பிரான் சரணத் துறுதி' கொண்டவரென்றும் அறியலாம். காட்டாக,

"அண்டர்பிரா னடமாடுந் தில்லைமணி மன்றதனி லகலா தென்றும்
விண்டசிவ சித்தாந்த வேதாந்தப் பொருள்விளக்கும் விளக்க மாகித்
தொண்டறியா நாயேனுக் கருள் புரிந்து கிளைமுழுதுந் தொழும்பு கொண்ட
எண்டகுசீ *ரீசானச் சிவன்* மலர்தாள் மறவாதென் னிதயந் தானே".

என்னும் குருவணக்கச் செய்யுளும், பின்வரும் புராண வரலாறு கூறும் செய்யுள்களும் இதற்குச் சான்றாகும்.

"வண்ணமலி வடகைலைக் கொடுமுடியாந் தென்கைலை மணியார் தம்மைத்
தண்ணமரு மலரிட்டுத் தாடொழுவான் பொருட்டங்ஙன் சாரா நின்ற
கண்ணகலுங் கலைஞானத் தெளிவனைத்துங் கைவந்த கலச யோனி
அண்ணலுமுத் தரமுகமே யாக்கியமா வலிகங்கை யாடும் போதில்".

1. ஈழத்துத் தமிழ் இலக்கிய வளர்ச்சி, ப. 25.

"ஆங்கொருபே ரற்புதமா வசரீரி வாசகத்தா லண்ண லார்தம்
பாங்கமருந் தென்மலயம் பயின்றதமிழ்க் குறுமுனிவ பயிலு கின்ற
வீங்கமரு மிக்கங்கை யிரும்பெருமை யியல்பிவையா மிங்ங னீயும்
ஓங்கநம்மைத் தாபனஞ்செய் திடுதியென வுவனறிய வுரைத்திட் டாரால்".

"அக்கணமே தாபனஞ்செய் தவ்விறைக்குச் சூதமுனி யருளிச் செய்த
மிக்கிரும் *வடபாடைப் புராணத்தைத் தென்கலையின்* விருத்தப் பாவாற்
றிக்கிசைய வருந்தொண்டர் செய்தியென வென்னறிவுஞ் சிறிது சேர்த்தி
ஒக்கவுரைத் தனன் *கொற்றங் குடிவாழும் பிரான்சரணத்* துறுதி கொண்டே".

*'ஈசானச் சிவன்', 'கொற்றங்குடி வாழும் பிரான்' என்ற பதங்கள் உமாபதி சிவாசாரியரைக் குறிப்பனவாதலால் 'இந்நூல் செய்தோர் அவர் சீடர் என்பாருமுளர்' என்பர் சுன்னாகம் குமார சுவாமிப்புலவர். வேறு சிலர், உமாபதி சிவாசாரியர் பரம்பரையில் உள்ளார் ஒருவர் என்பர்' என்ற கருத்துக்களை இப்புராணத்தைப் பதிப்பித்த திரு வே. அகிலேசபிள்ளை தம் முன்னுரையில் குறிப்பர்.*

*இந்நூலாசிரியர் கி. பி. 14 ஆம், 15 ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்தவர் என ஈழத்துத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம் (இலங்கை சாகித்திய மண்டல வெளியீடு 1966) கூறும். இருப்பினும், கரைசைப் புலவர் உமாபதி சிவாசாரியர் காலத்து வாழ்ந்த சீடர் என்பதற்கு வேறு சான்றுகள் கிடைக்கவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.*

*இந்நூலின் இலங்கைச் சருக்கம் என்ற பகுதியில் வரும் செய்யுள்கள் திருத்தொண்டர் புராண நாட்டு வருணனைச் செய்யுள் களை ஒத்துள்ளன. கடவுள் வாழ்த்து, குருவணக்கம், புராண வரலாறு, அவையடக்கம் ஆகியன கொண்ட பாயிரப் பகுதியும், இலங்கைச் சருக்கம், கங்கைச் சருக்கம், தாபனச் சருக்கம், பூசைச் சருக்கம் ஆகிய நான்கு சருக்கங்களும் உள்ளன.*

### *திருக்கரைசையம்பதி*

*திருக்கோணமலை மாவட்டத்தில் கொட்டியாபுரப்பற்றிலுள்ள சைவக் கிராமமான கிளிவெட்டியிலிருந்து ஒன்பது கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது திருமங்கலாய் சிவன் கோயில். இந்த ஆலயத்திற் குரிய தலபுராணமாக இன்று கிடைப்பதே திருக்கரைசைப் புராணம். இந்த ஆலயம் இன்றும் அழிந்த நிலையில் காணப்பெறுகின்றது. ஆயினும், கொட்டியாபுரப்பற்றிலுள்ள பல ஆலயங்களில் திருக்கரைசைப்புராணம் இன்றும் படிக்கப்பட்டு வருகின்றது என்பது குறிப்பிடத்தக்கது.*

*பொதுவாக, தலபுராணம் பாடப்பெற்ற தலங்கள் பல இன்னும் சிறப்பான முறையில் செழித்து வருகின்றன. ஆயின், தலபுராணம் இன்றும் பாடப்பெற்றுவரும் நிலையில், இத்தலமும் கோவிலும் அழிந்த நிலையிலிருப்பதும் குறிப்பிடத்தக்கது.*

*மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் முறையே பொருந்திச் சிறந்து விளங்கும் இத்தலத்தின் திருமங்கலாய் சிவன்கோவில், மகாவலி கங்கையின் பெரு வெள்ளப்பெருக்கினால் அழிந்திருக்கலாம் என்று*

கருதப்படுகிறது. இவ்வாலயத்தின் தொன்மையையும் சிறப்பையும் திருக்கரைசைப் புராணம் எடுத்துக் கூறுகின்றது.

இலங்கையின் கிழக்குப் பகுதிகளில் தமிழ் மன்னர்கள் பன்னெடுங் காலத்திற்கு முன்பே ஆண்டு வந்துள்ளார்கள் என்பதைத் திருக்கரைசைப்புராணம் கூறுகின்றது. இந்திய மன்னர் பரம்பரையைச் சேர்ந்த சிங்கபூதரன் என்பவன் அயோத்தியிலிருந்து இலங்கைக்கு வந்தவன். தற்போது இலங்கைத்துறை என்று சொல்லப்படுமிடத்தில் கப்பலில் வந்திறங்கியவன். அப்போது இப்பகுதியை ஆண்டு வந்த எழில்வேந்தனின் மகளான திருமங்கையை சிங்கபூதரன் திருமணம் செய்துகொண்டு திருக்கரைசையம்பதியில் அரண்மனை அமைத்து நாட்டை ஆண்டுவந்தான். அரண்மனை அமைத்த இடத்திற்கு 'இரணியன் குன்று' என்று பெயர். இப்பெயர் இன்று திரிபுபட்டு 'இரணியன் கொட்டு' என்று வழங்கிவருகின்றது.

## ஈழத்துச் சிதம்பர புராணம்

தமிழகத்துச் சிதம்பரம் போன்று, ஈழத்திற் சிதம்பரம் ஆவது காரைநகர் ஆகும். ஈழத்துச் சிதம்பரம் என்ற பெயருடன் விளங்கி வருவது இங்குள்ள 'திண்ணபுரம்'. இதற்குப் புராணம் இல்லாக் குறையைப் போக்கி அண்மையில் ஓர் இனிய தலபுராணத்தைப் பாடியுள்ளார் நவாலியூர்ப் புலவர்மணி சோ. இளமுருகனார் அவர்கள். யாழ்ப்பாணத்துத் தொல்லிப்பழையைச் சார்ந்த சிவானந்தையர் புலியூர்ப்புராணம் பாடித் தில்லைப் பெருமானைப் போற்றியது போலவே, புலவர்மணி அவர்கள் ஈழத்துச் சிதம்பர புராணம் பாடித் திண்ணபுரச் சுந்தரேசரை ஏத்தியுள்ளார். யாழ்ப்பாணத்து முற்காலத் தற்கால வரலாறுகளையும் மரபுகளையும் தழுவி இதனை இயற்றியுள்ளார் இவர்.

இதில், பத்துச் சருக்கங்களும் 806 செய்யுள்களும் உள்ளன.

ஈழத்துச் சிதம்பரம் கோயில் தோன்றிய முறையையும் இறைவன் திருவருள் பாலித்த திருப்பணிக்குக் கருவியாயிருந்து அப்பணிக்கே வாழ்நாளை அர்ப்பணித்த அடியார்களது தோற்றம், மறைவு, அவர்களின் பரம்பரை, அப்பரம்பரையினர் வரலாறு, இறைவனை அருச்சித்த அந்தணர் பரம்பரை, அறநெறிக் காவலரதும் அருச்சகர் களதும் வரலாறுகள் ஆகியன பொருளாயமையும் வண்ணம் புராண மரபு தழுவியே இந்நூல் விளங்கக் காணலாம்.

தமிழிலுள்ள தலபுராணங்கள் பெரும்பாலும் மொழி பெயர்ப்புக்களே என்று கூறும் நிலையில், இப்புராணம் மொழிபெயர்ப் பாகாது முதல் நூலாகத் திகழ்வது குறிப்பிடத்தக்கது. மேலும், இப்புராண நூலாசிரியரின் துணைவியாராகிய பண்டிதைமணி இ. பரமேசுவரியார் அவர்களே இந்நூலுக்கு உரையாசிரியராகத் திகழ்ந்து அரிய உரை விளக்கங்களை எழுதிச் சேர்த்திருப்பதும் இதன் சிறப்பாகும். இந்நூல் பாட்டும் உரையுமாக 1972 ஆம் ஆண்டில் இலங்கையில் வெளியிடப் பெற்றுள்ளது.

## உரைநடை நூல் வழிவந்த செய்யுள் நூல்

திருவுத்தரகோசமங்கையிலிருந்து காரை நாட்டுக்கு முதன்முதல் வந்த மங்களேசுவரக் குருக்களும் அவர் பரம்பரையினரும் எழுதி வைத்த ஏட்டுச் சுவடிகளில் ஐயனார் கோயில், மாரியம்மன் கோயில், சிவன் கோயில் ஆகிய மூன்று கோயில் வரலாறுகளும், மங்களேசுவரக் குருக்கள் முதலாக உள்ள அந்தணர் வரலாறுகளும் உள்ளன. அவ்வரலாறுகளையும் முதியோர் கூறிய கன்ன பரம்பரைக் கதைகளையும் திரட்டிச் சேர்த்துக் கணபதீசுவரக் குருக்கள் என்பார் 'ஈழத்துச் சிதம்பரம்' என்னும் உரைநடை நூலை எழுதித் தலவரலாறு சிதையாமல் பாதுகாத்து வந்தார். அவர் எழுதிவைத்த அந்த உரைநடை நூலை அடிப்படையாகக் கொண்டே 'ஈழத்துச் சிதம்பர புராணம்' என்னும் செய்யுள் நூலை இயற்றியுள்ளார் இதன் ஆசிரியர்.

"காசறுநற் புலமைமிகு கணபதீசு வரக்குருக்கள் காரை நாட்டுத்
தேசுமிகு மந்தணர்தஞ் சுவடிகளுஞ் செவிவழக்குந் திரட்டிச் சேர்த்துப்
பேசரிய மதிவளத்தாற் பிறங்குதமி ழுரைநடையிற் பேணித் தந்த
வீசுபுக ழீழத்துச் சிதம்பரநூ லிந்நூற்கு வித்தா மன்றே".

என்னும் பாடலால் இது விளங்கும்.

## வாழ்த்து

ஈழத்துச் சிதம்பர புராணத்தின் முற்பகுதியில் பாயிரச் சருக்கத்தில் மூன்று செய்யுட்களால் வாழ்த்தினைக் கூறுகிறார் ஆசிரியர்.

"வான மும்மழை பெய்க வசுந்தரை
போன கம்மிகுந் தாருயிர் பொங்குக
தான முந்தரு மங்களு மோங்குக
ஆனு மையனுக் கைந்தளித் தார்கவே. "

'வேதம் வெல்லுக மெய்ம்மை விளங்குக
நீதி யோங்குக நீணில மெங்கணும்
பூதி பொங்குக கண்மணி பூக்குக
நாத னைந்தெழுத் தூறுக நாவெலாம்"

"ஆக மபபடி யாலய மோங்குக
மாக மெங்கணும் வைதிக சைவமே
ஆக நிற்கபொ துச்சம யம்மெனும்
நாகந் தீண்டுதல் நீங்குக நன்றரோ". (பா. 21-23)

வானம் பொய்யாது மழை பொழியவும், உணவுப் பொருட்கள் செழித்து உயிரினங்கள் மகிழவும், தானதருமங்கள் ஓங்கவும், பசுக்கள் பயன் தரவும், வேதங்கள் வெல்லவும், வாய்மையே வெல்லவும், நீதியே நிலைபெறவும், சைவமே செழிக்கவும் வேண்டுமானால் ஆகமங்களிற் சொல்லப்பட்ட முறைப்படியே திருக்கோயில்களில் தவறாது பூசைகள் நடைபெற வேண்டுமென்பதையே இவர் வலியுறுத்தக் காணலாம்.

எல்லாச் சமயமும் பொதுவென்னும் இக்காலக் கோட்பாடு சைவ சமய குரவர் காட்டிய நெறிக்கு முழுதும் முரண்படுதலாலும், அது மக்கள் கடைபிடிக்கும் சமயங்களிற் பற்றையும் ஒழுகலாற்றையும் அழிக்குமாதலாலும், ஒன்றுக்கொன்று முரண்பட்ட முடிபுகளை ஒப்பச் சிந்திப்போர்க்கு ஈற்றில் நாத்திகச் சார்பை உண்டாக்குமாதலாலும், அஃது இறப்பவும் தீங்கு பயத்தல் நோக்கி, பொதுச்சமயம் எனும் அதை விடம் நிறைந்த நாகபாம்பாக உருவகித்துப் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது (பா. 23).

## கோயில்களும் பிற செய்திகளும்

"திருக்கோயி லில்லாத வூரோங்கு திருவுடைய தெனினும் பாழே,
விருப்பொன்றி வெண்ணீற்றாற் கண்மணியால விளக்கமுறா மேனி பாழே,
செருக்கொன்றா மனமொன்றிச் சிவபெருமான் தாள்பணியாச் சென்மம பாழே,
வெருக்கொண்ட பாழெல்லா மகலப்பல வியன்கோயில விளங்கு மவவூர்".

*(1. காரைவளச்சருக்கம் 5)*

எனக் கூறும் இந்நூலாசிரியர் இதன் பின்னே காரை நாட்டிலுள்ள திருக்கோயில்களையெல்லாம் தொகுத்துக் கூறுகின்றார். அத்துடன், இக் காரைநாட்டில் இப்பொழுதுள்ள கல்லூரிகள், கல்விக் கழகங்கள், தமிழ்க் கழகங்கள் போன்றவற்றையும் (பா. 8-10) பாடல்களில் எடுத்துக்காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இந்நாட்டில் வாழும் சாதியினர், மக்களின் பொதுவாழ்க்கை, தொழில்கள், சோலைவளம், மக்களின் விருந்தோம்பல் பண்பு, மழை வளம், ஆடல், பாடல்கள், கடற்கரைக் காட்சிகள், மருத்துவமனைகள், மன்றங்கள், பிறவும் இந்நூலில் சுவைபடப் பாடப் பெற்றுள்ளன.

சைவச் சான்றோர் பற்றியும், ஆங்கிலர் ஆட்சி பற்றியும், நாவலர் சைவம் காத்தது பற்றியும், காரை நாட்டுப் புலவர்கள், வழக்கறிஞர், மருத்துவர், இந்நாட்டிலுள்ள மடங்கள், விழாக்கள் எனப் பல செய்திகளையும் இந்நூலாசிரியர் பாடுகின்றார்.

அகத்தியர், தினகர முனிவர், ஆண்டி முனிவர் போன்றோர் இங்கு வந்து பூசித்துப் பேறு பெற்றதும், ஐயனார் வழிபாடுகளும், கோயில் திருப்பணிகளும், கோயில் வழிபாடுகளும் கூறிவரும்பொழுது இடையே போத்துக்கீசர் அரசு வந்ததும், ஒல்லாந்தர் கோயிலை இடிக்க வந்ததும், சைவர் அடைந்த இன்னல்களும், பிற வரலாறுகளும் ஐயனார் கோயில் காண் சருக்கத்தில் விளக்கக் காணலாம்.

பழைய புராண மரபுடன் இந்நூலைப் படைத்துள்ள இந்நூலாசிரியர் புதுமைச் சிந்தனைகளுடனும், உவமை நயங்களுடனும் மிகவும் சுவையாக அமையும்படி இத்தல புராணத்தை உருவாக்கியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். காட்டாக, சவுக்கமரங்களைத் திருமாலின் நெடியமேனிக்கு உவமையாகக் கூறும் பாடற் பகுதிகள் சுட்டத்தக்கன.

சவுக்க மரங்கள் உயரத்தினாற் திருமாலையும் சத்தத்தினால் குதிரைச் சவுக்கின் ஓசையையும் ஒத்து விளங்குகின்றது என்ற உவமை மிகவும் புதுமையானதாகும்.

'மாலென நிமிர்ந்து போன
வான்கரைச் சவுக்கந் தோப்புக்
காலது வசைக்க வாடிக்
கலினமாப் பரியை யுய்க்கும்'

(காரைவளச் சருக்கம். பா. 75)

இவ்வாறு இந்நூல் முழுமையும் உவமைத் தொடர்களும் சந்தச் சிறப்பும் கொண்ட பாடல்கள் பல அமைந்திருக்கக் காணலாம்.

## ஆற்றுவளம் - நாவலர் ஒழுகலாறு

காரை நாட்டு வளத்தைக் கூறுமிடத்து ஆற்றுவளம் கூறுதற்கு அந்நாட்டில் ஒரு சிற்றாறு தானும் இல்லை. அழுக்காறு உண்டோ என்றால் அதுவும் இல்லை. இல்லை என்று சொல்லாது உண்டென்று சொல்லுதற்கு வாய்ப்பாக அங்கேயுள்ளது, அவர்கள் ஆறுமுக நாவலரை அடியொற்றி இதுகாறும் ஒழுகி வந்ததாகிய ஒழுகலாறு ஒன்றேயாம். எனவே, அந்த ஒழுகலாற்றையே காரை நாட்டுக்கு ஆற்றுவளமாகக் கூறினார். இது ஒரு புதுமையான உத்தியாகும். இப்பகுதியில் இவ்வாறு ஏழு பாடல்கள் அமைகின்றன.

"நல்லை நாவலன் நன்மலை யூற்றெழுந்
தெல்லை யில்பதி யெங்கணும் பாய்ந்தது
சில்ல மென்கிளை யுள்ளொன்றிச் சீர்ப்பதி
புல்லி யெங்கும் புகுந்தது பேசுவாம்".

(காரைவளச் சருக்கம், 114)

ஆறுமுக நாவலரை மலையாகவும், அவர் ஒழுகிய ஒழுக்க நெறிகளை ஆறாகவும், அவ்வொழுக்க நெறிகளைப் பின்பற்றி யொழுகிய தென்னிந்தியாவையும் இலங்கையையும், அவ்வாறு பரந்து பாய்ந்த இடங்களாகவும் உருவகித்து, அவ்வொழுக்கம் காரை நாட்டினரால் போற்றப்பட்டதை அவ்வாற்றின் ஒரு கிளை காரை நாட்டிற் பரந்து சென்றதாகக் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

"ஆறிலாக் காரை நாட்டி லழுக்காறு மில்லைச் சைவ
ஏறனான் நல்லை வந்த நாவல னெடுத்து வாழ்ந்த
ஈறிலா வொழுக லாறு வலமிட மெங்கு மோடி
மாறிலா வவ்வூர் மாந்தர் மனக்கடற் படியு மன்றே".

(காரைவளச் சருக்கம் 115)

நாவலர் ஒழுகலாற்றை அவ்வூரவர் நன்றாகக் கைக்கொண்டதை வலமிட மெங்கும் ஓடியதாகவும், அவர்கள் மனத்தில் அவ்வொழுக்க நெறி செவ்வையாகப் பதிந்து கொண்டதைக் கடலிற் கலந்து கொண்டதாகவும் உருவகித்துள்ளது நயம்மிக்கது.

நாவலர் பெருமான், சைவத்தையும் தமிழையும் ஐயந்திரிபறக் கற்று மக்கள் கடைப்பிடித்து ஒழுகவேண்டிய ஆசாரங்களையெல்லாம் சைவ வினா விடை, நான்காம் பால பாடம் முதலிய பல நூல்கள் வாயிலாக வெளியிட்டும், சொற்பொழிவு வாயிலாகச் சொல்லியும், தாமே வாழ்ந்து காட்டியும், மேலை நாட்டவர் ஆட்சியால் அழியும்

நிலையில் இருந்த சைவத்தையும் தமிழையும் பாதுகாத்தார் ஆதலின், அவர் வகுத்த நெறியினை 'நாவலர் ஒழுகலாறு' என்றார் ஆசிரியர். காரை நாட்டு மக்கள் மேலை நாட்டவரின் உடைநடை பாவனைகளையும் சமயாசாரங்களையும் விரும்பாதவராய்ச் சைவத்தையும் தமிழையும் பெரிதும் காத்து நாவலர் காட்டிய நன்னெறியில் ஒழுகி வருகின்றாராதலின், நாவலர் ஒழுகலாற்றை நாட்டு வளச் சருக்கத்திற்கு ஆற்றுவளமாக்கியது மிகவும் பொருத்தமான தொன்றாகும்.

"வஞ்சகங் களவு பொய்மை யாதிய மரங்கள் சாடித்
தஞ்சமில் சமய மாற்றச் சமணடலை சாய்த்தே யூனுண
நஞ்சமார் பழக்க மென்னுங் காஞ்சுரை நசித்து நாளும்
விஞ்சிய தீமைப் பூண்டு கீண்டுமேல் விரைந்த தன்றே".

(காரைவளச் சருக்கம் 116)

வஞ்சகம், களவு, பொய் முதலாகிய பெரிய மரங்களை முரித்து, பற்றுக்கோடு ஒன்றுமில்லாத சமய மாற்றமாகிய சமணடலையை அடியோடு வீழ்த்தி, புலால் உண்ணுதலாகிய நச்சுத்தன்மை பொருந்திய தீய பழக்கம் என்னும் காஞ்சுரையை நசித்து அழித்து, மிச்சமாக வளரும் பலவகைத் தீமையாக பூண்டை நாள்தோறும் சிறிது சிறிதாகப் பிடுங்கி, அதன் மேல் மிக விரைவாக அந்த ஒழுகலாறு ஓடிச் சென்றதாம்.

மேலே, 'வலமிடமெங்கும் ஓடி மணக்கடற் படியும்' எனத் தொகுத்துக் கூறியதை இதுமுதல் மூன்று செய்யுள்களால் விரித்துக் கூறுவார்.

"மெய்வகைச் சீல மென்னும் விழுத்தரு சோலை பூப்பத்
தெய்வநற் தருவு ஞானத் திருமுறைப் பயிரு மோங்கச்
சைவமாம் படப்பை தோறுந் தமிழ்வளர் பழனந் தோறும்
உய்வரு ளமுத மொத்துப் போனதவ் வொழுக லாறு".

"சைவமா சபையாம் பொய்கை தையலாண் மடமாம் வாவி
திவ்விய வாத வூரர் திருப்பெயர் மடத்த டாகந்
தெய்வீகக் கோயிற் சார்பு சிவநெறித் தொண்டர் வைப்பு
வைதிகர் வளாக மாதி வயின்தொறும் புகுந்த தன்றே"

"வான்முகில் வழங்கா தாயின் வறட்சிநாள் வளரு மாயின்
மேன்மைசா லாறும் வற்றும் மேதகு மிதுவோ வென்றும்
ஊனமை தில்ல தீதிற் தோய்ந்தவ ருண்டோர் தங்கள்
ஞானசந் ததியி லூறி நாடெலா நாடி யோடும்".

(காரைவளச் சருக்கம் 117-119)

## வற்றாத ஆறு

மழைவளம் சிறந்ததும், ஊற்றுக்களை மிகுதியாகக் கொண்டதுமாகிய கங்கை முதலிய பெருமை பொருந்திய ஆறுகளும் மழை இன்றி கோடை நீடுமாயின் வற்றிப் போகும். ஆனால், இந்த ஒழுகலாறு ஒரு போதும் வற்றாது ஓடிக் கொண்டே இருக்கும் என்னும் ஆசிரியர் கூற்று நயம் மிக்கதாகும்.

"காவிரி வைகை கங்கை மாணிக்க கங்கை மற்று
மாவலி கங்கை யெல்லாம் வாழ்வினுக் காக்கஞ் செய்யும்
நாவல னொழுக லாறு மற்றத னோடு நல்லோர்
மேவிடும் வீடு நல்கு நாமதிற் றோய்தல் வேண்டும்".

(காரைவளச் சருக்கம் 120)

காவிரியும் வைகையும் கங்கையும் மாணிக்க கங்கையும் மாவலி கங்கையும் ஆகிய எல்லா நதிகளும், இவ்வுலக வாழ்க்கைக்கு மட்டுமே ஆக்கந்தருவதாகும். நாவலர் காட்டிய ஒழுகலாறு என்னும் நதி, இவ்வுலக வாழ்க்கைக்கு ஆக்கந்தருவதோடு, சான்றோர் சென்று இன்புற்றிருக்கும் வீடுபேற்றையும் தரும். ஆதலால் நாம் எல்லோரும் அப்புண்ணிய நதியில் முழுகுதல் வேண்டும் என்கிறார் ஆசிரியர்.

"கங்கைமா நதியாள் நீல கண்டனார் முடியி லேறி
மங்கல மாக மன்னி வாழ்வது கண்டா மன்றே
பொங்குமில் வொழுக லாறும் புண்ணியச் சைவர் சென்னி
தங்குதல் வேண்டு மென்றுஞ் சிவக்கதிர்ச் சாலி யோங்க".

(காரைவளச் சருக்கம் 121)

பெரிய கங்கை நதியாகிய பெண், நீலகண்டத்தவராகிய சிவபெருமானது சடைமுடியில் ஏறி, மங்கலமாக நிலைபெற்று, வாழ்வதை நாம் அறிவோம். தமிழ்நாட்டிற் பொங்கிப்பெருகும் இவ்வொழுகலாறும், புண்ணியவான்களாகிய சைவர்களது தலையின் மேலே, சிவக்கதிரை எனும் சைவப்பயிர் எக்காலத்தும் மேலோங்கி வளர்தற்பொருட்டு, அக் கங்கைநதி போல மங்கலமாகத் தங்குதல் வேண்டும் என்னும் ஆசிரியர் கூற்று அவர்தம் சைவப் பற்றினைக் காட்டும்.

இங்குச் சிவக்கதிரென்றது சிவவிளக்கத்தையாம். சிவ சின்னங்களை அணிவதினாலும், திருக்கோயிலை வழிபடுவதினாலும், சிவனடியார்களைப் போற்றுவதினாலும் சைவ ஒழுக்கங்களைக் கடைப் பிடிப்பதினாலும், சிவதீக்கை பெறுவதினாலும், திருவைந்தெழுத்தை ஓதுவதினாலும், தேவார திருவாசகங்களை ஓதுவதினாலும், ஞானநூல்களைக் கேட்பதினாலும் சிவவிளக்கம் உண்டாகும் என்பர் ஆன்றோர்.

## சமய விழிப்புணர்வு

ஆங்கிலேயர் ஆங்கில மொழியை ஆட்சிமொழியாகக் கொண்டு ஆட்சி புரிந்தமையாலும், அந்த ஆங்கில மொழியைப் படித்தவர்களுக்கே அரசுப் பணிகளைக் கொடுத்தமையாலும், அம்மொழியைக் கற்ற தமிழர்கள் அந்த ஆங்கிலேயரது உடையினையும் ஒழுக்க நெறிகளையும் செயல்களையும் அவர்களுக்கு இசைவாக நாள்தோறும் பழகி முடிவில் அவர்களைப் போலாகி விட்டார்கள். அத் தமிழர்களது சைவசமயக் கல்வியோடு சைவ ஒழுக்கங்களும் நீங்கிவிட்டன. மேலைநாட்டு நாகரிகமாகிய கொடிய இருள் தலையெடுத்து எங்கும் நிறைந்து கொண்டது.

"ஆங்கிலத்தா லாணடமையா லதுபயின்றாக் கரகபணி யளித்த வாறறாற
பாங்காக வவருடையை நடைநெறியைப் பாவனையைய பயின்று நாளுந
தேங்கினரே தமிழரவா சைவநெறிக் கல்வியொடு சீல மெலலாம
நீங்கினவால் மேற்புலத்து நாகரிகக் கொடுந்திமிர நிமிர்ந்த தன்றே"

*(காரைவளச் சருக்கம் 124)*

என இவ்வாறு விளக்கும் ஆசிரியர், இத்தகைய காலத்தில் ஆறுமுக நாவலர் விழிப்படைந்தெழுந்து மற்றவரையும் விழிப்படையச் செய்து புகழ் பெற்றார் என்பதை வரலாற்றுச் சான்றுகளுடன் விரிவாக விளக்குகின்றார்.

## வீடுகள்தோறும் புராணம் படித்தல்

ஈழத்துச் சிதம்பரபுராண ஆசிரியர் திண்ணபுரச் சருக்கத்தில் அவ்வூரின் சைவச் சிறப்பை எடுத்துரைக்க வந்தவிடத்து, அவ்வூரின் கோயில்கள்தோறும், வீடுகள்தோறும் கந்தபுராணத்தை எப்பொழுதும் படிப்போரும் கேட்போருமாக மக்கள் இருப்பதைச் சுட்டிக் காட்டுவர்.

"முப்பொருளின் தன்மைகளும் இயைபுகளும் முடிவிலிவிடை மூழுரு மாறுந்
செப்புமொரு சிவகதையிற பொதிந்துகலி நித்திக்கச் செயத கந்தன
மெய்ப்புராண விழுப்பனுவல் தலையன்பாற கோயில்தொறும் வீடுதோறும
எப்போதும் படித்துப்பய னுரைப்பாருங் கேட்பாரு மெங்கு முணடாம்"

*(பா. 50)*

இத்தகைய புண்ணிய பூமியாகிய காரை நகரின் மக்கள் பக்தி மேலீட்டினால் அந்நகரமே சிவப்பொலிவு கொண்டு விளங்குகின்றது. அங்கு நாத்திகம் என்ற பேச்சுக்கே இடமில்லை என்கிறார் ஆசிரியர்.

"அழகனா ரழுகி யோடு கோயில்கொண் டமர்ந்த தாலும
பழவினை நீக்குந் தெய்வ நீற்றொளி பரந்த லாலும்
நளிகட லுலகை யிந்நாள் நலித்திடு நாத்தி கப்பேய
குழிமுகங் காட்டி யிங்கே குனித்திடா ததன்ற தன்றே"

*(பா. 69)*

இப்பொழுது எங்கும் வருத்திவரும் நாத்திகக் கொள்கையைப் பேய் என்றே உருவகித்துப் பாடியுள்ளார் இந்நூலாசிரியர். இத்தகைய பல அரிய செய்திகளையும் சிந்தனைகளையும் இந்நூல் முழுமையும் காணலாம்.

தமிழும் சைவமும் மிகச் சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கும் ஈழ நாட்டில் பல இலக்கிய நூல்கள் தமிழில் எழுந்துள்ளன. சைவக் கோயில்கள் பெருமளவிலுள்ள இந்நாட்டில் சைவ சமய நூல்கள் பலவும் இயற்றப் பெற்றுள்ளன. அவற்றுள் தலபுராணங்களாக அமையும் மேற் காணும் நூல்கள் பக்தி உணர்வோடு அந்நாட்டு மக்களால் போற்றப் பட்டு வருவது குறிப்பிடத்தக்கதாகும்.



# தெலுங்கில் தலபுராணங்கள்

திராவிட மொழிகளில் தமிழைத் தவிர மற்ற மொழிகளில் தல புராணங்கள் மிகுதியாக இல்லை. தெலுங்கில் மட்டும் சில தலபுராணங்கள் இயற்றப்பட்டுள்ளன. பதினான்காம் நூற்றாண்டு முதலாகத் தென்னகத்தில் ஏற்பட்ட இலக்கிய மறுமலர்ச்சியால் தெலுங்கிலும் பல இலக்கிய ஆசிரியர்கள் தோன்றினர். அவர்கள் படைத்த நூல்களுள் தலபுராணங்கள் சிலவும் குறிப்பிடத்தக்கன. இவை, தமிழிலுள்ள தலபுராணங்களைப் போலவே அமைந்திருப்ப தாலும், தமிழகத்திலுள்ள சில தலங்களுக்குரியதாக அமைந்திருப்பதாலும் இங்கு நோக்குவது பயனுடையதாகும். தெலுங்கு இலக்கிய வரலாறு கூறும் நூல் வரிசையிலேயே இவற்றை நோக்கலாம்.[1]

தமிழைப் போலவே தெலுங்கிலும் தலபுராணங்கள் காப்பிய மாகக் கருதப்படுகின்றன. சமஸ்கிருதக் காப்பிய மரபுகளைப் பின்பற்றியே தெலுங்குக் காப்பியங்கள் புனையப்பட்டுள்ளன.

தெலுங்கில் மிகுதியான காப்பியங்கள் எழுதிப் புகழ் பெற்றவர் ஸ்ரீநாதர் (ஸ்ரீநாதுடு) (கி.பி. 1385-1475). இவர் பெதகோமட்டி வேமா ரெட்டியின் அரசவையில் ஏறத்தாழ பதினெட்டு ஆண்டுகள் கல்வியமைச்சராகப் பணிபுரிந்தவர். 'கவிசார்வபௌம' (கவிச்சக்கரவர்த்தி) என்ற விருதைப் பெற்றவர். பிராகிருதம், தெலுங்கு ஆகிய இருமொழிகளிலும் புலமை வாய்ந்தவர். சிறந்த சிவபக்தர். இவர் 13 நூல்களை எழுதியுள்ளார். இவற்றுள் இரண்டு நூல்கள் தலபுராணங்கள்.

## பீமேஸ்வர புராணம்

இது, ஆந்திரத்தில் தாஷாராமம் என்ற ஊரிலிருக்கும் பீமேஸ்வரனின் திருவிளையாடல்களை விளக்கும் தலபுராணமாகும். இதில், ஆறு பகுதிகள் இடம் பெற்றுள்ளன. திரிபுரமெரிப்பு, விடம் உண்ணுதல் போன்ற சிவனின் திருவிளையாடல்கள் விளக்கப் பட்டுள்ளன. இதில் ஆந்திர நாட்டில் கோதாவரி மாவட்டப் பகுதிகள் அழகுற வருணிக்கப்பட்டுள்ளன. இக்காப்பியத்தை ஸ்ரீநாதர் தனது இளம் பருவத் தோழன் அவசிதிப்பய செட்டிக்குக் காணிக்கை யாக்கியுள்ளார்.

## காசிக் காண்டம்

இது, வடமொழியிலுள்ள காசிக்காண்டத்தின் மொழிபெயர்ப்புக் காப்பியமாகும். காசியின் மகத்துவத்தை விளக்கும் இத்தலபுராணத்தில் மூலத்திலில்லாத சில புதுக்கதைகளைப் புகுத்தியுள்ளார். (தமிழில் அதிவீரராம பாண்டியர் வடமொழியிலிருந்து மொழிபெயர்த்துள்ளார்.)

1 டாக்டர் டி. எஸ். கிரிபிரகாஷ், பா. ஆனந்தகுமார், தெலுங்கு இலக்கிய வரலாறு, பக். 64-123.

## காஞ்சி மகாத்மியம்

தக்குபல்லிதுக்கன (கி. பி. 1405) என்பவர் 'காஞ்சி மகாத்மியம்' என்னும் காப்பியத்தை இயற்றியுள்ளார்.

கி. பி. 15 இறுதியிலிருந்து கி. பி. 17 வரையுள்ள இடைப்பட்ட கால கட்டத்தில் பிரபந்த இலக்கியங்கள் தெலுங்கில் பரவலாகத் தோன்றின. குறிப்பாகக் கிருஷ்ணதேவராயர் காலத்தில் இவ்வகை இலக்கியங்கள் சிறப்புற்றன. இவரது காலத்தில் வாழ்ந்த அட்டதிக் கசங்கள் ஏன்றழைக்கப்பட்ட புலவர்களே மிகுதியான பிரபந்தங்களை இயற்றியுள்ளனர்.

வடமொழியில் பஞ்ச காவ்யங்கள்' என்ற மரபும், தமிழில் ஐம்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறு காப்பியங்கள் என்ற மரபும் இருந்தது போலவே தெலுங்கிலும் 'பஞ்ச காவ்யம்' என்ற மரபு காணப்படுகிறது. இவற்றுள், தெனாலிராமகிருஷ்ணரின் 'பாண்டுரங்க மகாத்மியம்' ஒன்று. இது ஒரு தலபுராணமே. முதலில் காப்பியமாகக் கருதப்பட்ட இலக்கியங்கள் பின்னால் பிரபந்தமாக மாற்றி அழைக்கப்பட்டன எனத் தெரிகின்றது.

## தெனாலிராமகிருஷ்ண கவி

கிருஷ்ணதேவராயரின் அட்ட திக்கசங்களுள் ஒருவராகப் புகழ்பெற்ற இவர் சைவத்திலிருந்து வைணவத்திற்கு மாறியவர். 'பாண்டுரங்க மகாத்மியம்' 'கடிகாசல மகாத்மியம்' ஆகிய நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

## பாண்டுரங்க மகாத்மியம்

இப்பிரபந்தம் வைணவ தலமான புண்டரீகத்தின் சிறப்பை எடுத்துரைக்கும் தலபுராணம் ஆகும். இக்கதை ஸ்கந்த புராணத்திலிருந்து எடுத்தாளப்பட்டது. தலம், தீர்த்தம், தெய்வம் என்ற மூன்றில் தலச்சிறப்பையே மிகுதியாக விளக்குகிறது.

## தூர்ஜடி

கிருஷ்ண தேவராயரின் அரசவையில் போற்றிப் புகழப்பட்ட கவிஞருள் ஒருவர் இவர். 'ஸ்ரீகாளஹஸ்தி மகாத்மியம்' என்ற தலபுராணத்தை இவர் இயற்றியுள்ளார்.

வடமொழியில் ஸ்கந்தபுராணத்திலுள்ள ஸ்ரீகாளஹஸ்தி மகாத்மியம் இப்பிரபந்தத்திற்கு மூலமாக அமைந்துள்ளது. இத்தலத்தின் சிறப்பைக் கூறும் கதைகள் பல இடம்பெற்றுள்ளன. தமிழ்ப் பெரிய புராணச் செல்வாக்கு மிகுதியாகக் காணப்படுகிறது. தமிழில் புகழ் பெற்ற கண்ணப்பநாயனார், சிவன் பாடலில் குற்றங் கண்ட நக்கீரர் கதைகள் சிறப்புற அமைந்துள்ளன. மேலும், யானை, பாம்பு, சிலந்தி போன்ற விலங்கினங்களும் சிவபக்தியில் மூழ்கி வீடுபேறடைந்த கதைகள் மிக அருமையாக விளக்கப்பட்டுள்ளன. மண்ணாசை, பெண்ணாசை, அங்கயற்கண்ணி போன்ற தமிழ்ச் சொற்களும் இடம்பெற்றுள்ளன. திண்ணனுடைய கதையில் இடம்பெறும் மலை வருணனை இவருடைய கவித்திறத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு. 755

பாட்டுரைப் பகுதிகளைக் கொண்ட இக் காப்பியத்தில் ஒவ்வொரு ஆசு வாசத்திலும் முதலில் இடம்பெறும் பாடலில், அதில் இடம்பெறுகின்ற கதைச் சுருக்கம் கூறப்பட்டுள்ளது.

## பைரவகவி (கி. பி. 15 நூ.)

இவர் கருட புராணத்திலிருக்கின்ற கதையை மூலமாகக் கொண்டு 'ஸ்ரீரங்க மகாத்மியம்' என்ற தலபுராணத்தை இயற்றியுள்ளார்.

## தாள்ல பாக அன்னமாச்சார்யுடு (கி. பி. 1424-1503):

வட மொழியிலும் தெலுங்கிலும் 32,000 க்கும் மேற்பட்ட இசைக் கீர்த்தனங்களைப் பாடி 'பதகவிதா பிதாமஹா', 'சங்கீர்த்தனாச்சாரியா' என்ற விருதுகளைப் பெற்ற இவர் புரந்தர தாசருக்கு முற்பட்டவர். இவர் 'வேங்கடாசல மகாத்மியம்' எனும் தலபுராணத்தை இயற்றியுள்ளார்.

## தென்னகத் தெலுங்கு இலக்கியங்கள்

### கார்த்திக மாஹாத்மியம்

திருச்சியிலிருந்து இருபத்தேழு மைல் தொலைவில் உள்ள திரிசிரபுரத்திற்கு பழைய பெயர் தீர்த்தபுரி என்பதாகும். துறையூர் அரண்மனை இங்குதான் இருந்தது. இங்கு கிருஷ்ணதேவராயர் காலத்திலிருந்த வெங்கடாசலரெட்டி என்னும் ராஜாவின் தூண்டு கோலால் குந்துர்த்தி வேங்கடாசலகவி என்ற கவிஞர் ஆறு பகுதிகள் கொண்ட 'கார்த்திக மாஹாத்மியம்' என்ற தலபுராணத்தை இயற்றியுள்ளார்.

### விருத்தாச்சல மாஹாத்மியம்

திருச்சி மாவட்டம் பெரம்பலூர் தாலுகாவில் உள்ள வெங்கனூர் என்ற கிராமத்திலிருந்த இலிங்காரெட்டியின் மனைவி எர்ராம்பிகா விருத்தாச்சலேஸ்வர ஆலயத்தைக் கட்டினார். இக்கோயிலைப் பற்றி ரேவூரி அனந்தயஜ்வா 'விருத்தாச்சல மாஹாத்மியம்' என்ற தல புராணத்தை இயற்றி இலிங்கா ரெட்டிக்குக் காணிக்கையாக்கியுள்ளார்.

இவ்வாறு தமிழகத்திலுள்ள சில தலங்களுக்கும் தெலுங்கு மொழியில் புராணங்கள் இயற்றியிருப்பது அறியத்தக்கதாகும். இருமொழி இலக்கிய ஒப்பீட்டு ஆய்வில் இவை மிகவும் பயனுடையதாகும்.



# பிற சமயங்களில் தலபுராணங்கள்

இந்தியப் பெருநாட்டிற்கேயுரிய சமயம் இந்து சமயம். இதுவே சைவம் என்றும் வைணவம் என்றும் இருவேறு நெறிகளில் அமைந்து நீண்ட நெடுங்காலமாக நாடெங்கும் பரவியது. இந்து சமயமேயன்றி, பௌத்தம், சமணம், இஸ்லாம், கிறித்தவம் ஆகிய பிற சமயங்களும் இங்கே அவ்வப்போது வந்து நிலைபெற்று விளங்கியதுடன் தமிழிலும் பல நூல்கள் உருவாவதற்குத் துணை புரிந்தன என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

பௌத்த சமயத்தில் தலபுராணங்கள் எதுவும் இயற்றப் பெறவில்லை.

சமண சமயத்திலும் தலபுராணங்கள் என்று தனியாக இருப்பதாகத் தெரியவில்லை. சமணர்கள், 24 தீர்த்தங்கரர்கள் முக்தி அடைந்த தலங்களைப் புண்ணிய தலங்களாக வணங்கி வருகின்றனர். இவை சித்த சேத்திரம், தீர்த்த சேத்திரம், மோட்ச ஸ்தானம் என்று அழைக்கப் பெறுகின்றன. இவற்றுள், 22 தீர்த்தங்கரர்களின் தலங்கள் பீகார் மாநிலத்தில் சன்மேத சிகரம் என்ற இடத்தில் உள்ளன. குஜராத் மாநிலத்தில் ஊர்ஜயந்தகிரியில் ஒருவரும், கைலாச மலையில் ஒருவரும் முக்தி அடைந்தார்கள் என்று கூறுவர். இவை தவிர, மைசூரில் உள்ள சிரவண பெளிகுளம் (கோமதீசுவரர்) போன்ற அதிசய சேத்திரங் களையும் குறிப்பிடுவர். இவற்றையெல்லாம் வடமொழியிலுள்ள 'மகா புராணம்', 'ஸ்ரீபுராணம்' ஆகியவற்றில் காணலாம். இவ்வாறு சமண நூல்கள் பெரும்பாலும் தீர்த்தங்கரர்களின் பிறப்பு, பெருமை, முக்தி யினைக் கூறுவதாக அமைந்துள்ளனவேயன்றித் தலங்களின் பெருமையைப் பாடவில்லை.

கிறித்துவ சமயத்தில், தமிழில் தலபுராணங்கள் எவையும் இயற்றப் பெறவில்லை.

## இஸ்லாம் சமயத்தில் தலபுராணம்

இஸ்லாம் உலகில் பரவுவதற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்னரே முஸ்லீம் மக்களின் மூதாதையரான அறபு மக்கள் தமிழ் நாட்டுடன் தொடர்பு கொண்டிருந்தனர் என்றும், தமிழ் நாட்டுக்கு அவ்வறபு மக்கள் வந்து கிழக்கு மேற்கு வணிகத்துறையிலே பெரிதும் ஈடுபட்டு வந்தனர் என்றும் கூறுவர்.[1] தமிழ் இலக்கியம் மீது கொண்ட பற்றின் காரணமாக இஸ்லாமியர்களும் தமிழில் பல புதிய இலக்கியங் களைப் படைக்கத் தலைப்பட்டனர். பன்னிரண்டாம் நூற்றாண்டில் எழுந்ததாகக் கருதப்பெறும் 'பல்சந்தமாலை' முதலாகப் பல்வேறு

---

1. டாக்டர் ம. முகம்மது உவைஸ், இஸ்லாம் வளர்த்த தமிழ், ப. 1

இலக்கியப் படைப்புக்களை இவர்கள் செய்து அளித்துள்ளதைக் காணலாம்.

பதினேழாம் நூற்றாண்டிற்குப் பிறகு 'புராணம்' என்னும் பெயரில் நான்கு இஸ்லாமிய நூல்கள் மிகவும் குறிப்பிடத்தக்கவையாக எழுந்துள்ளன. அவை, சீறாப்புராணம் (1703), திருக்காரணப் புராணம் (1812), முகியத்தீன் புராணம் (1876), நாகூர்ப்புராணம் (1882) என்பன.

இவற்றுள், நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் வாழ்க்கையைக் கருப்பொருளாகக் கொண்டு சிறந்து விளங்குவது சீறாப்புராணம். இதில் 5027 பாடல்கள் உள்ளன. அடுத்து, வடஇந்தியாவில் உள்ள மாணிக்கப்பூர் என்னும் இடத்தில் பிறந்து தென்னகத்திலும் பிற நாடுகளிலும் தெய்வீக ஆசிர்வாதத்துடன் பல அற்புத நிகழ்ச்சிகளைச் செய்து காட்டிய மீறான்சாகிபாண்டவர்கள் என்னும் செய்கு அப்துல் காதிறு சாகுல் கமீது ஆண்டகை அவர்களின் வாழ்க்கையை விவரிப்பதே திருக்காரணப்புராணம் ஆகும். இதில் மொத்தம் 2576 பாடல்களுள்ளன. இஸ்லாமில் காதிறிய்யா என்னும் ஆத்மிக வழியை நிறுவிய முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்களின் வாழ்க்கையைக் கருப்பொருளாகக் கொண்டமைந்தது முகியித்தீன் புராணம் ஆகும். இது 3983 செய்யுட்களைக் கொண்டது. திருத்தலம் ஒன்றின் பெயரால் அழைக்கப்படும் ஒரே இஸ்லாமியத் தமிழ்க் காப்பியம் நாகூர்ப்புராணம் ஆகும்.

## நாகூர்ப் புராணம்

தமிழ்நாட்டில் உள்ள நாகூரிலே சாகுல் கமீது ஆண்டகை அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளார்கள். அவர்கள் பிறந்தது வட இந்தியாவில் உள்ள மாணிக்காப்பூர் ஆகும். சாகுல் கமீது ஆண்டகை அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்ட பின்னர் அவர்தம் சிறப்பாற்றல் காரணமாக நிகழ்ந்த நிகழ்ச்சிகளே நாகூர்ப் புராணத்தில் வருணிக்கப் பட்டுள்ளன.

நாகூர்ப் புராணம் நாகூர் குலாம் காதிறு நாவலரால் 1882 இல் இயற்றப்பட்டது. இவர் வாப்பு மரைக்காயர் என்பவரின் புதல்வர். வித்வ ஜனசேகரர். தர்கா வித்துவான். கல்வி கேள்விகளிலே சிறந்தவர். பன்னுலாசிரியர். மூன்று காப்பியங்களின் ஆசிரியர். ஆரிபு நாயகம் என்பது இவர் இயற்றிய மற்றொரு காப்பியம். முகாஷபா மாலை இவரது குறுங்காப்பியம். பதாயிருக்கலம்பகம், குவாலீர் கலம்பகம், மதுரைக் கோவை முதலிய பல நூல்களை இவர் இயற்றியுள்ளார். மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கத்தை நிறுவுவதில் துணைபுரிந்த ஓர் உறுப்பினராய்த் திகழ்ந்த இவர் அச்சங்கத்தின் நக்கீரர் எனப் புகழப் பெற்றவர். தமிழில் மிகுதியான இஸ்லாமிய நூல்களைப் பாடியவரும் இவரேயாவார்.

## நாகூர்

நாகூர் நகரம் எத்தகைய சிறப்பு வாய்ந்தது என்பதை இந்நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார். முஸ்லீம்களுக்குப் புனிதமாகவுள்ள நான்கனுள் நான்காவது நாகூர் எனக் குறிப்பிட்டுள்ளார். பெருமானார்

முகம்மது (சல்) அவர்களின் கல்லறை (றவுளாசரீப்) அமைந்துள்ள மதினாவையும், அண்ணல் (சல்) அவர்கள் பிறந்த மக்காவையும், முகியித்தீன் ஆண்டவர் அடங்கி இருக்கும் பகுதாது நகரையும் தவிர்த்து, மேன்மையானது நாகூர் எனக் குலாம் காதிறு நாவலர் குறிப்பிட்டுள்ளார்.

"மங்க ளத்தொனி சேர்மதி னாவெழின் மக்கா
தங்கு சீர்பகு தாதெனு முப்பதி தவிர
எங்கி ருக்குமற் றிணையிதற் கென்றுல கியம்பு
நங்க ளுக்கொரு மேன்மையின மைந்தது நாகூர்"

(தலவிசேடப் படலம்: 3)

என்பது பாடல். (முஸ்லீம்களுக்கு மூன்றாவது புனிதத்தலமாக விளங்குவது ஜெருசலம் என்னும் பைத்துல் முகத்திஸ் நகரம் என்பதையும் சுட்டுவர் டாக்டர் ம. மு. உவைஸ் அவர்கள்).

## பெயர்க் காரணம்

சாகுல் கமீதாண்டகை நல்லடக்கம் செய்யப்பட்டுள்ள ஊரிலே பலவகை மரங்கள் உள்ளன. அத்தகைய மரங்களுள் புன்னை மரமே சிறப்புறத் திகழ்ந்தது. புன்னைக்கு நாகம் என மற்றொரு பெயருமுண்டு. எனவே நாகமரம் சிறந்து விளங்கியதால் நாகவூர் எனப் பெயர் பெற்றது. பின்னர் நாகவூர் என்பது மருவி நாகூர் என வந்தது என இவர் பாடியுள்ளார்.

"போக மாமரம் பலவகை யுளவெனிற் புன்னை
யேகவொண் மரமுதன் மைமிக் கிருந்தலி னிவ்வூர்
நாக வூரெனுந் தலைமை பற்றி யபெயர் நண்ணி
யாக மற்று நாகூ ரெனமரீஇ யதை யன்றே".

(செய்கு யூசுபு நாயகருபாத்துப் படலம்: 6)

இப் பெயர்க்காரணம், மற்ற இந்து சமய நாகூர்ப்புராணத்திலும் புன்னை மரத்தால் வந்தது என்றே கூறுவது குறிப்பிடத்தக்கது.

## சித்திரக் கவிகள்

நாகூர்ப் புராணத்தின் சிறப்பாகத் திகழ்வது அதில் அமைந்துள்ள சித்திரக் கவிகளே. தஞ்சை மாநகரத்தைச் சேர்ந்த பாவா ராவுத்தர் என்னும் பெரும்புலவர் எல்லா வரங்களும் பெற்று மதிவாணராகத் திகழ்ந்தார் என்றும், அவருக்கு மகப்பேறு இல்லாமல் வருந்தினார் என்றும், பின்னர் அவர் சாகுல் கமீது ஆண்டவரிடம் மகவரம் கேட்டுப் பல்வேறு வகையான சித்திரக்கவிகளைப் பாடினா ரென்றும் கூறுவர் இந்நூலாசிரியர் குலாம் காதிறு நாவலர் அவர்கள். பாவா ராவுத்தர் அவர்களுடைய குறை இரங்குதலையும் வேண்டு கோளையும் தமக்குப் பிள்ளை வரம் அருளவேண்டும் என்று முறையிடும் கருத்துக்களையுமே குலாம் காதிறு நாவலர் சித்திரக் கவிகளிலே அமைத்துப் பாடியுள்ளார். இப்புராணத்தில் மலடு தீர்த்த படலத்திலே 19 முதல் 36 வரை உள்ள செய்யுட்கள் இத்தகைய சித்திரக் கவிகளாக அமைந்துள்ளன.

இத்தலபுராணம் தமிழ்த் தலபுராண மரபை ஒட்டியே இயற்றப் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. தலச்சிறப்பைக் கூறுவதிலும், சித்திரக் கவிகள் போன்ற பாடல்களை அமைப்பதிலும் தமிழ்த் தலபுராண மரபுகளைக் காணலாம். இத்தகைய தலவரலாறு கூறும் நூல்களின் காரணமாக இன்று நாகூர் என்றாலே இஸ்லாம் சமயத்திற்குரிய தலம் என்னும் சிறப்புண்டாகியிருப்பது எண்ணத்தக்கது.

நாகூரிலே பழைய இந்துக்கோயில்கள் புராணம் பெற்றிருந்தும் அவை இன்று மறைந்த நிலையேயுள்ளமையும் குறிப்பிடத்தக்கது.

இஸ்லாம் சமயத்தில் எழுந்த இந்த நாகூர்த் தலபுராணத்தைத் தவிர வேறு சமய புராணங்கள் எதுவும் தமிழில் எழவில்லை. தலவரலாறு என்பது அத்தலத்தின் பழமையைக் குறிப்பது. இதில் இங்கிருந்த பழமையான சமயமே இடம்பெற முடியும். இவ்வகையில் சைவமும் வைணவமுமே சிறப்பிடம் பெறுகின்றன. பிற சமயங்கள் வேற்றிடங் களிலிருந்து இங்கு வந்தமையால் தம் பழம்பெருமைகளை எடுத்துக்கூற வழியில்லை என்பது தெளிவு.



# தமிழ்த் தலபுராணங்களின் பொதுவமைப்பும் சிறப்புக் கூறுகளும்

பழைய வரலாறுகளுள் பெரும்பாலும் இறையருள் தொடர்புடைய செய்திகள் மிகுந்துள்ளவை புராணம் எனப்பெறும். புராணங்களுக்குச் சிறப்பு என்பது, மிக நுண்மைத்தன்மை வாய்ந்த கருத்துக்களை யாவரும் உணரும்படி நூல் வடிவில் வைத்து விளக்குதலும், கடினமான செய்திகளை விளக்க ஓர் உருவம் கொடுத்து எளிய இனிய கதைகளாகக் கூறுதலும், மனித வாழ்வியல் உண்மைகளையும் சுவைமிக்க அழகிய பாடல்களில் எளிய முறையில் அறிவுறுத்தலும் ஆகும் என்பர் டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் அவர்கள்.[1]

தமிழில் புராண நூல்கள் மூன்று வகையாக இருப்பதைக் காணலாம். அவை, கடவுட் புராணம், சான்றோர் புராணம், தல புராணம் என்பன.

## கடவுட் புராணம்

பல வடமொழிப் புராணங்களின் பெயர்ப்பும் தழுவலும் பதினைந்து, பதினாறாம் நூற்றாண்டில் தமிழில் பரவலாக எழுந்தன. கூர்ம புராணம், இலிங்க புராணம், கந்த புராணக் காசிக் காண்டப் பகுதி ஆகியவற்றை அதிவீரராம பாண்டியர் தமிழில் எழுதினார். வரதுங்கராம பாண்டியரின் பிரமோத்தர காண்டமும் கச்சியப்பரின் கந்தபுராணமும் தமிழில் தோன்றின. வடமலையப்பர் மச்ச புராணத்தையும், ஒப்பிலாமணிப் புலவர் சிவரகசிய காண்டத்தையும், கச்சியப்பர் விநாயக புராணத்தையும் தமிழ்ப்படுத்தினர். செவ்வைச்சூடுவார், வரதராஜ ஐயங்கார் ஆகியோர் பாகவதத்தைத் தமிழில் பாடினர்.

இத்தகைய கடவுட் புராணமும் தலபுராணமும் ஓரளவு தம்முள் தொடர்பு பெற்றே அமைகின்றன எனலாம். 'கடவுள் பற்றிய புராணங்கள் தெய்வங்கள் தெய்வீக நிலையில் நின்று செயல்படுவதை விளக்கும். இத்தெய்வங்களின் செயல்கள் ஒரு தலத்தைச் சார்ந்து அமைகின்றபோது தலபுராணமாகிறது'[2] என்பாரின் கருத்தும் இவண் எண்ணத் தக்கது. திருத்தணிகைத் தலபுராணம் முருகன் செயலைப் பாடுவதும், கந்த புராணமும் அவன் விளையாடல்களைப் பாடுவதும் இவண் இணைத்து நோக்கலாம்.

---

1. DR. S. Radhakrishnan, Indian philosophy, part I, P. 25.
2. இரா. காசிராசன், காப்பியத் தமிழ், பக் 52, 53

## சான்றோர் புராணம்

சமணரின் செல்வாக்குக் காரணமாகவும் சமண நூல்களின் பெயர்ப்புக் காரணமாகவும் சான்றோர் புராணங்கள் தமிழில் பல எழுந்துள்ளன. பிராகிருத மொழியிலுள்ள ஆதிபுராணம், தீர்த்தங்கரர் வரலாறும் இடையிடையே அரசர், வாசுதேவர், பிரதிவாசுதேவர் கதையும் கூறும் சமண நூலாகும். இந்நூலின் தமிழ் மணிப்பிரவாளப் பெயர்ப்பான ஸ்ரீபுராணமே சிந்தாமணி, சூளாமணி கதைகளுக்கு மூலமாக அமைந்தது என்பர்.

தமிழில் பெரியோர் வரலாற்றைப் புராணமாக்கியவர்களில் முதன்மையிடம் பெறுபவர் சேக்கிழார். திருத்தொண்டர் புராணம் காப்பியமாகவே கருதப்படுகின்றது. உமாபதியின் சேக்கிழார் புராணம், கடவுண்மாமுனிவரின் திருவாதவூரடிகள் புராணம், பட்டினத்துப் பிள்ளையார் புராணம், தண்டபாணி சுவாமிகளின் புலவர் புராணம் என ஒருவர் அல்லது பலர் பற்றிய சான்றோர் புராணங்கள் பல தமிழில் எழுந்துள்ளன. சேய்த்தொண்டர் புராணம் மற்றும் சீறாப்புராணம் போன்ற இவை யாவும் பெருங்காப்பிய நிலையைப் பெற்றுள்ளன. தன்னிகரற்ற தலைவனைப் பாடும் பெருங்காப்பிய நிலை, பிற்காலத்தில், இறையன்பரைப் பாடும் சான்றோர் புராணத்திற்கு வழி அமைத்தன என்றும், அங்குப் புற வீரமும் இங்கு அக வீரமான சமய நிலையும் சிறப்புறுகின்றன என்றும் அறிஞர் சுட்டுவர்.[1]

## தலபுராணம்

ஒரு தலத்தைப் பற்றி மக்களால் வழங்கப்பெறும் பழங்கதைகளை நல்லிசைப் புலவர்கள் கேட்டுத் தங்கள் கற்பனையாலும் நாவன்மை யாலும் விரித்து, யாவரும் விரும்பும் வண்ணம் தொடர்நிலைச் செய்யுட் காப்பியமாகச் செய்கின்றனர். இத்தொடர்நிலைக் காப்பியங் களெல்லாம் புராணம் என்னும் பெயராலேயே வழங்கப் பெறுகின்றன.

பழமை, பழங்கதை என்பதையே புராணம் என்பது உணர்த்தும். பழங்கதைகளைக் கூறும் பனுவற்கெல்லாம் புராணம் என்ற சொல் பொருந்தும். ஆயினும் உலகத் தோற்றம், உலக ஒழுக்கம், மன்வந்தரம், முனிவர் வல்லமை, அரசர் மரபு என்னும் ஐந்தினைக் கூறுவதே புராணமாம் என்னும் வடநூலாசிரியர் கூற்றைக் கருதினால் தமிழிலுள்ள தலபுராணங்களெல்லாம் புராணம் என்று அழைத்தற்குத் தகுதியிலவாம்.

கடவுள் பற்றிய புராணங்கள் அனைத்தும் பெரும்பாலும் பிற மொழியிலிருந்து தமிழுக்கு வந்தனவாகவே அமைகின்றன. பெரியவர் பற்றிய புராணங்களும் இறையுறை தலங்களைச் சிறப்பிக்கும் புராணங் களும் பெரும்பாலும் தமிழுக்குரியனவாக அமைகின்றன என்றும், தமிழின் முதற் புராண இலக்கியங்கள் தலபுராணமாக அமைந்துள்ளன என்றும், முதலிலேயே நூலாக எழாது, வழிவழியாகக் கூறப்பட்டு வந்த

1. டாக்டர் ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வகையும் வடிவும், பக். 289,290

கர்ண பரம்பரைச் செய்திகள் பல தலைமுறைக்குப்பின் எழுதப்பட்டமை காரணமாகவே 'புராணப்' பெயர்ப் பொருத்தம் இவற்றிற்கு ஏற்பட்டிருக்க வேண்டும் என்றும் கூறும் அறிஞர்[1] தம் கருத்துக்கள் மிகவும் ஏற்புடையன.

எண்ணிக்கை மிகுதியிலும், அமைப்பிலும் சிறப்பிடம் பெறும் தலபுராணங்கள் தமிழுக்கே உரிய இலக்கிய வகையாக வளர்ந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இடைக்கால வடமொழிச் சார்பு கருதி மான்மியம், மகாத்மியம் போன்ற வடமொழிப்பெயர்களைத் தாங்கினாலும் இவை தமிழ் இலக்கியச் சிறப்புடனேயே விளங்கக்காணலாம்.

தமிழ்த் தலபுராணங்கள் நூற்றுக்கணக்கில் கிடைக்கின்றன. முதலில் வாய்மொழியாகச் சொல்லப்பட்டு வந்த இவை செய்யுள் வடிவில் பெருகி ஏட்டிலும் எழுதி வைக்கப்பெற்றன. பிற்காலத்தில் உரைநடை வளர்ச்சியின் காரணமாக வசன நடையிலும் இப்புராணங்கள் நூல்களாக மலர்ந்தன. இவ்வகையில், கி. பி. 12 ஆம் நூற்றாண்டு தொடங்கி 20 ஆம் நூற்றாண்டு வரையில் சுமார் 400 செய்யுள் நடையிலான தமிழ்த் தலபுராணங்கள் பற்றி இன்று அறிய முடிகின்றது. 500-க்கும் மேற்பட்ட உரைநடையிலான புராண நூல்களும் எழுந்துள்ளன. இவற்றை ஒன்றாகத் தொகுத்தும் வகுத்தும் காண்பது தமிழாய்வுக்கு மிகவும் பயனுடையதாகும். இது ஓர் அரிய பணி.

## தலபுராணமுந் தொல்லை

சிதம்பர தலத்துக்குக் கோயிற் புராணம் பாடியவர் உமாபதி சிவாசாரியர். அவருடைய காலம் 14 ஆம் நூற்றாண்டின் தொடக்கம். அவருக்கு அடுத்த நூற்றாண்டில் வாழ்ந்த இரட்டைப் புலவர்கள் தில்லைக்கு ஒரு கலம்பகம் பாடியுள்ளார்கள். அதில் தலபுராணத்தையும் சுட்டியுள்ளார்கள்.

"நில்லாத எழுபிறப்புந் தொல்லை, அல்லல்
நீக்குசிவ காமவல்லி நிலையுந் தொல்லை,
சொல்லாரும் பொழில்புடைசூழ் சிதம்பரமுந் தொல்லை,
திருமூலட் டானமொடு சிவகங்கை தொல்லை,
சல்லாபந் தருமகு டாகமுந் தொல்லை,
*தலபுராணமுந்* தொல்லை, சபையுந் தொல்லை,
சொல்லாரும் நான்மறையுந் தொல்லை, தில்லைச்
சோதிநட மாடுவதுந் தொல்லை தானே".

(69)

என்னும் இப்பாடலில், தொல்லை என்பதை முதலில் 'துன்பம் தருவது' என்ற பொருளிலும், பின்னர் ஒன்பது இடங்களில் 'பழமையானது' என்ற பொருளிலும் புலவர் கூறுவர். தலபுராணம் என்பது உமாபதியார் செய்த கோயிற் புராணம். இரட்டையர் இப்புராணம் பழமையானது என்று கருதினார்கள் என்று அறிகிறோம்.

1. டாக்டர் சு.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வகையும் வடிவும். பக். 285,286

பழமையான தலபுராண நூல்களின் பெயர், வடிவம், உள்ளடக்கம், பொருள், பயன்பாடு எனப் பன்முக நோக்கில் பகுத்தறியின் அவற்றின் சிறப்பு நன்கு வெளிப்படும். தமிழ்த் தலபுராணங்களின் புற அமைப்பும் அக அமைப்பும் சில சிறப்புக் கூறுகளை உள்ளடக்கியிருப்பதைப் பின்வருமாறு காணலாம்.

## செய்யுள் நூல்கள்

புராணம் கலித்துறை யாப்பில் அமையும் என இலக்கண நூல்கள் கூறினும், இன்று கிடைக்கும் பல நூல்கள் பெரும்பாலும் விருத்தப்பாக்களிலேயே இயற்றப்பெற்றுள்ளன. திருக்கருவைத் தலபுராணம் போன்ற ஒருசிலவற்றில் மட்டும் பல யாப்புகளில் பாடல்கள் அமைந்துள்ளன. இத்தகைய செய்யுள் நடையிலான தலபுராணங்கள் பெயர் நிலையில் சில மாறுபாடுகள் கொண்டமைகின்றன. புராணம், மான்மியம், லீலை, விளையாடல், ரகசியம், காதை எனப் பல பெயர்களில் இவை வழங்குகின்றன. காட்டாகச் சிலவற்றைக் காண்போம்.

## புராணம் என்னும் பெயரிலான நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. ஊர்ப்புராணம் | - | ஆப்பனூர்ப் புராணம் போன்றன. |
| 2. தலபுராணம் | - | அரிமழத் தலபுராணம் போன்றன. |
| 3. வனப் புராணம் | - | கடம்பவனப் புராணம், தேவதாரு வனப்புராணம், வேணுவனப் புராணம். |
| 4. அரண்யத் தலபுராணம் | - | வில்வாரண்யத் தலபுராணம் |
| 5. நகர்ப்புராணம் | - | நெல்லை மாநகர்ப்புராணம், கரையேற விட்டநகர்ப் புராணம். |
| 6. கோயிற் புராணம் | - | கோயிற் புராணம், இராசமன்னார் கோயிற் புராணம், தாடாளன் கோயிற் புராணம். |
| 7. நதிப்புராணம் | - | பஞ்சநதிப் புராணம், காவேரி புராணம், துலாகாவேரி புராணம், பெண்ணை நதிப் புராணம், தாம்பிரவர்ணி புராணம். |
| 8. மலைத்தலபுராணம் | - | சென்னிமலைத் தலபுராணம், சொக்கநாதமலைப் புராணம், திரிமூர்த்திமலைப்புராணம், தணிகாசல புராணம், திருப்பருப்பத புராணம், புட்பாசலப் புராணம், மயிலாசலப் புராணம், மகாதேவ மலைப் புராணம். |
| 9. பூப்புராணம் | | செவ்வந்திப்புராணம்(திரிசிராப்பள்ளி) |

என இவ்வாறு அமையும் நூல்கள் தலப்பெயர்களோடு வழங்குவன. இவ்வாறு தலப்பெயர்களோடு இறைப்பெயரை இணைத்துக் கூறும் நூல்களும் பல உள. உத்தமசோழபுரம் கரபுரநாதர் புராணம், காஞ்சிக் கம்பர் புராணம், சிதம்பர சபாநாத புராணம் என்பன அவற்றுள் சிலவாம்.

## லீலை, விளையாடல், ரகசியம், காண்டம் என்னும் பெயரினானவை

தியாகராச லீலை, திருவிளையாடற் புராணம், காசிரகசியம், காசிகாண்டம் போன்றவை முறையே திருவாரூர், மதுரை, காசி ஆகிய தலச் சிறப்பினைக் கூறுவனவேயாம்.

## காதை

தமிழ்க் காப்பியங்களில் கூறப்பெறுவது போன்று காதை என்ற பெயருடன் விளங்குவது திரு அரசிலிக்காதை என்னும் திருஅரசிலித் தலபுராணமாகும்.

## விலாசம்

நூல்களுக்கு விலாசம் என்று பெயர்வைக்கும் முறை வடமொழியிலும் தமிழிலும் உண்டு. பெரிய புராணக் கதையை வடமொழியில் அமைத்த இருவர் தம் நூல்களுக்கு உபமன்னியு பக்த விலாசம், அகத்திய பக்த விலாசம் என்றே பெயரிட்டுள்ளனர்.

தமிழில் 'சங்கர விலாசம்' என்ற புராணம் சிதம்பர நாதகவி என்பவரால் 16 ஆம் நூற்றாண்டில் எழுதப் பெற்றுள்ளது. இந்நூல் மூன்று பகுதிகளாக அமைந்துள்ளது. முதலில் புராணப்பகுதி, அடுத்து சிவசின்னங்களின் பெருமை, மூன்றாவது தலங்களின் பெருமை கூறுகிறது. சிதம்பரம் பற்றிய வரலாறுகளை மிகுதியாகக் கூறினும் திருவாரூர், காஞ்சி, திருக்காளத்தி, திருப்பருப்பதம், திருக்கழுக்குன்றம், கோதாவரி நதி ஆகியவற்றின் சிறப்புக்களையும் இந்நூல் விரித்துரைக்கின்றது.

சங்கரநயினார் கோயிலில் எழுந்தருளியுள்ள சங்கரநாராயணப் பெருமான் அருளால் இந்நூல் எழுதப் பெற்றதாலும், சங்கரன் புகழைப் பாடுவதாலும் இதற்கு ஆசிரியர் இப்பெயரிட்டுள்ளார். முழுமையும் நாட்டு வருணனையும், நகர வருணனையும், தோத்திரப் பாடலும் கொண்ட இந்நூல் புராணம் என்று கூறப்படாமல் விலாசம் என்றே கூறப்படுவது குறிக்கத்தக்கது.

## உரைநடை நூல்கள்

பழைய செய்யுள் வடிவிலுள்ள தலபுராணங்களின் தற்கால உரைநடை வடிவங்கள் பழைய புராணப் பெயர்களையே பெரும்பாலும் கொண்டு விளங்குகின்றன. வரலாறு, வசனம், சுருக்கம், உரை, உரைநடை, பொழிப்புரை, தெளிவு எனப் பல நிலைகளில் தேவைக்கேற்ப பழைய தலபுராணங்கள் உரைநடையில் எழுதப்பட்டுள்ளன. காட்டாகச் சிலவற்றைக் காண்போம்.

| | | |
|---|---|---|
| மகாத்மியம் | - | அத்திகிரி மகாத்மியம் போன்றன. |
| மான்மியம் | - | அத்திகிரி மான்மியம் |
| தலபுராணம் | - | அத்திப்புலியூர்த் தலபுராணம் |
| தல வரலாறு | - | ஆச்சாள்புரத் தலவரலாறு |
| புராண வசனம் | | அருணாசல புராண வசனம் |
| சேத்திர மகிமை | - | சடாரண்ய சேத்திர மகிமை (ஆற்காடு) |
| மகத்துவம் | - | சேது மகத்துவம், கடிகாசல தலமகத்துவம் |
| சரிதை | - | வேலைமாநகர் சரிதை |
| சுருக்கம் | - | காஞ்சிப்புராணச் சுருக்கம் |
| சாரம் | - | கோகர்ண புராண சாரம் |
| ரகசியம் | - | சிதம்பர ரகசியம் |
| உரை | - | சிவன்மலைப் புராண உரை |
| உரைநடை | - | சீகாழிப் புராண உரைநடை |
| புராணம் | - | சூதவனப்புராணம் |
| விசேடம் | - | சேது விசேடம் |
| பொழிப்புரை | - | தணிகைப் புராணப் பொழிப்புரை |
| சங்கிரகம் | - | திரிசிராமலை மான்மிய சங்கிரகம்,<br>திருக்களர் சார சங்கிரகம். |
| வைபவம் | - | திருக்கோவலூர் திவ்யதேச வைபவம் |
| பிரபாவம் | - | திருவானைக்கா பஞ்சப் பிரகார பிரபாவம் |
| தெளிவு | - | திருவொற்றியூர் மான்மியத் தெளிவு |
| சிந்தாமணி | - | திவ்விய தேசப்ரபாவ சிந்தாமணி |

என இவ்வாறு பல பெயர்களில் உரைநடையிலான தலபுராண நூல்கள் கிடைக்கின்றன.

உரைநடையிலான நூல்களில், அத்திகிரி மகாத்மியம் போன்றன மணிப்பிரவாள நடையிலும் அமைந்துள்ளன. பல நூல்களில், செய்யுள் புராண நூல்கள் போன்றே அத்தியாயம், சருக்கம், படலம் என்ற அமைப்புகளைக் காணலாம். காஞ்சி மகத்துவம், கும்பகோணம் மகாதீர்த்த மகிமை போன்றவை அத்தலங்களிலுள்ள சிவாலயம் திருமால் ஆலயம் ஆகிய இரண்டையும் ஒரு சேர விளக்குவதையும் காணலாம். இன்று அச்சில் பரவலாகக் கிடைக்கும் இவ்வுரைநடை நூல்கள் தல வரலாற்றுச் சுருக்கங்களாக .உள்ளமை குறிப்பிடத்தக்கது.

சென்ற நூற்றாண்டுகளில் கர்னல் மெக்கன்சி அவர்களால் தொகுக்கப் பெற்ற தலவரலாறுகள், புராணச் செய்திகள், திருப்பணிகள், கல்வெட்டுச் செய்திகள் போன்றன குறிப்புக்களாக உரைநடையில் எழுதப் பெற்றுள்ளன. இவற்றுள் பல இன்னும் அச்சில் வெளி வரவில்லை என்பதும் இவண் சுட்டத்தக்கது.

## ஊர்களின் புராணப் பெயரும் தற்காலப் பெயரும்

தலபுராணங்களில் பழைமையாக வழங்கிய ஊர்களின் பெயர்கள் சில இன்று பழக்கத்தில் முற்றிலும் வேறு வகையாகவும் வழங்கக் காண்கிறோம். காட்டாக, ஆதிகைலாயம் - திருப்பெருந்துறை; ஆதிபுரம்-எயினனூர், இந்திரகீலபுரம்-திருக்கழிப்பாலை; இறைசை-எலவானாசூர்; கொடுங்குன்றம்-பிரான்மலை; சக்கரபள்ளி-ஐயம்பேட்டை; தட்சிண கைலாசம்-திரிகோணமலை; திரு அரசிலி ஒழுந்தியாப்பட்டு; திருக்கடந்தை-பெண்ணாகடம்; திருக்குருகை-ஆழ்வார் திருநகரி; திருவூறல்-தக்கோலம்; புலியூர்-சிதம்பரம்; மயூரகிரி-குன்றக்குடி; வானரவீர மதுரை-மானாமதுரை; வில்வவனம்-நயினார் கோயில், மருதூர் என இவ்வாறு பல ஊர்களைக் கூறலாம். இவ்வாறு ஒரே ஊரின் பெயர் மாற்றத்தால் அவ்வூர்ப் புராணங்கள் இருவேறு பெயர்களில் வழங்குவதையும் காண்கிறோம்.

## ஒரே தலத்துக்குப் பல புராணங்கள்

இடைக்காலத்தில் சமயப் பொருளினிடத்துள்ள ஈடுபாட்டினால் ஒரே தலத்துக்கு ஒன்றுக்கு மேற்பட்ட புராணங்கள் செய்யப் பெறவும் காண்கிறோம்.

திருவண்ணாமலைக்கு அருணாசல புராணம், அருணகிரிப் புராணம் என இரு புராணங்கள் பதினாறாம் நூற்றாண்டில் செய்திருக்கக் காண்கிறோம். இவ்விரண்டுக்கும் முன்னதாகப் புராணத் திருமலைநாதர் மற்றுமோர் அருணகிரிப் புராணம் செய்துள்ளார். அந்நூல் கிடைக்கவில்லை. திருவையாற்றுக்கு நிரம்ப அழகிய தேசிகரும் அவர் மாணாக்கர் ஞானக்கூத்தரும் இரண்டு புராணங்கள் பாடியுள்ளனர். திருவாரூருக்கு அளகைச் சம்பந்த முனிவர் மற்றும் மறைஞான சம்பந்தர் தனித்தனியே புராணம் பாடினர். பிற்காலத்தில் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இத்தலத்திற்குத் தியாகராசலீலை பாடியுள்ளார். திருக்காளத்திக்குப் பதினாறாம் நூற்றாண்டில் ஒரு புராணம் தோன்றியது. பின்பு பதினேழாம் நூற்றாண்டில் சிவப்பிரகாசரும் அவர் சகோதரர் இருவரும் மற்றொரு புராணம் இயற்றினர். இதேபோன்று, திருவானைக்காவுக்குக் கமலை ஞானபிரகாசர் ஒரு புராணம் இயற்றவும், பதினெட்டாம் நூற்றாண்டில் கச்சியப்ப முனிவர் மற்றொரு புராணம் இயற்றியளித்துள்ளார். சங்கரநாராயணர் கோயிலுக்குச் சங்கர விலாசம் என்ற புராணம் தோன்றிய பின்னர் ஒரு புராணம் தோன்றியுள்ளது. திருநெல்வேலிக்குச் சுருங்கிய அளவில் வேணுவன புராணம் முதலில் தோன்றியது. அதன் விரிவாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பெரிய புராணமொன்று பாடப்பட்டுள்ளது. அனதாரியப்பர் மதுரைக்குச் சுந்தரபாண்டியம் செய்வதற்கு முன்பே பதின்மூன்றாம் நூற்றாண்டில் மதுரை மாநகருக்குச் நம்பி திருவிளையாடல் எழுந்துள்ளது. பிற்காலத்தில், 1700இல் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல் புராணம் பாடினார். சிதம்பரத்துக்குப் பதினான்காம் நூற்றாண்டில் உமாபதி சிவத்தின் கோயிற் புராணம் இருந்தது. பதினாறாம் நூற்றாண்டில் மேலும் ஒரு புராணம் இத்தலத்துக்காகப் பாடப்பெற்றது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் சபாபதி நாவலருடைய சிதம்பர சபாநாத புராணம்

புதிதாகத் தோன்றியது. இப்படி ஒரே தலத்திற்குப் பல புராணங்கள் எழுந்த நிலைகளைக் காண்கிறோம்.

சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணத்துக்கு உமாபதி சிவாசாரியர் ஒரு புராண சாரம் பாடியது போலவே, சைவ-எல்லப்ப நாவலர் பாடிய திருவெண்காட்டுப் புராணத்துக்கு மற்றொரு புலவர் ஒரு புராண சாரம் பாடியுள்ளார். பாடிய ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

## சிறப்புடைய தலங்கள்

பூமியில் எல்லா ஊர்களும் இறைவனுக்கு உகந்தவையே, இருப்பினும் இறைவனின் திருவிளையாடல்கள் நிகழ்ந்த காரணத்தால் சில தலங்கள் மிகுபுகழ் பெற்றுள்ளன. தலங்கள் பல இருப்பது பற்றியும் அவற்றுள் சிறப்புடைய தலங்கள் இவை என்றும் பல தலபுராணங்கள் குறிப்பிடக் காணலாம்.

சிவ வடிவங்களாகிய தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகிய இவற்றுள் தலங்களே அளவில்லாதன இருக்கின்றன. அவற்றுள்ளுந் தரும தலங்களே சிறப்புடையன; அவற்றுள்ளும் சைவத் தலங்களே சிறப்புடையன; அச்சிவத்தலங்களோ ஆயிரங் கோடியுண்டு; அவற்றுள்ளும் ஆயிரத்தெட்டுத் தலங்களே மேலானவை; அவற்றுள்ளும் நூற்றெட்டுத் தலங்களே மேலாகும்; அவற்றுள்ளும் அறுபத்தெட்டுத் தலங்களே சிறந்தன; அவற்றுள்ளும் பதினாறு தெய்வத் தலங்களே சிறப்புடையன; அவற்றிலும் முத்தி நகர்களெனக் கூறும் அயோத்தி, மதுரை, மாயை, அவந்திகை, காசி, காஞ்சி, துவாரகை என்னும் ஏழு தலங்களே உயர்ந்தன: இவற்றிலும் ஆதாரத் தலங்களாகிய திருவாரூர், திருவானைக்கா, திருவண்ணாமலை, சிதம்பரம், திருக்காளத்தி, காசி என்பனவே மேலானவை; இவற்றுள்ளும் பஞ்சபூதலிங்க தலமாகிய காஞ்சி, திருவானைக்கா, திருவண்ணாமலை, திருக்காளத்தி, சிதம்பரம் என்பனவே சிறந்தவை; இவற்றிலும் திருவாரூர், காசி, சிதம்பரம் என்பனவே சிறப்புடையன; இவற்றுள்ளுஞ் சிதம்பரமே மிகவும் சிறந்தது என்பர்.

"அவ்வகைய மூன்றின்முதற் தலப்பெருமை
தனைச்சுருக்கி யறையக் கேண்மின்
எவ்வகைய வுலகத்துந் தருமதல
மதிகமவற் றீறி லாத
சைவதல மதிகமவற் றறுபத்தெட்
டதிகமவை தமலீ ரெட்டுத்
தெய்வதல மதிகம்"

(தலவிசேடம். 3)

என்பது திருவிளையாடற்புராணம்.

"ஏற்ற மாந்தல மாயிர கோடியில் விடத்தி
னூற்று நாலிரண் டவையினும் பெருமையா நுவல்வர்"

(நைமிசாரணியச் சுருக்கம், 21)

என்பது திரிவிரிஞ்சைப் புராணம்.

"பிறந்தில மாரூர் தன்னிற் பேசிய காசி மேவி
இறந்தில யிரண்டு முத்தி யின்பமும் பின்ப தாநாம
உறைந்திடுந் தில்லை ஞான யோகமார் தான மாமாற்
செறிந்தடி காணச் சேவ முத்தராய்த் திரிய லாமே".

(இரணியவன்மச் சருக்கம், 68)

என்பது கோயிற்புராணம்.

இப்பூமண்டலத்திலே நினைப்பினாலும் பார்வையினாலும், இம்மை மறுமை வீடுகளைத் தரத்தக்க திருத்தலங்களில் ஏழாயிரத்து நானூறு இறைவனால் சிறப்பித்துச் செப்பியருளப் பெற்றன. அவற்றுள் சிறந்தன எழுநூற்று முப்பது எனவும், அவற்றுள் சிறந்தன நூறு எனவும், அவற்றுள் சிறந்தன முப்பத்திரண்டு எனவும், அவற்றுள் சண்பகவனம் என்னும் திருநாகேச்சுரமே கயிலைக்கொப்பான சிறப்புடையது எனவும் திருநாகேச்சுரப் புராணத்தில் புராண வரலாறுரைத்த படலத்தில் இறைவியே கூறுவதாக அமைக்கப் பெற்றுள்ளது.

## புண்ணியத் திருத்தலங்கள் பதினாறு

இப்பாரதப் பூமியில் புண்ணியத் திருத்தலங்கள் பல உள்ளன. அவை குற்றமற்ற காசி முதல் பல தலங்களாகும். இவற்றுள் மிக முக்கியமான தூய்மைமிக்க தலங்கள் பதினாறு என நாகூர்ப் புராணம் கூறுகிறது. அவை, காசி, திருக்காளத்தி, சிதம்பரம், காஞ்சிபுரம், திருவையாறு, திருவாரூர், ஸ்ரீசைலம், கும்பகோணம், திருவிடைமருதூர், மதுரை, திருவெண்காடு, திருவண்ணாமலை, விருத்தாசலம், மாயூரம், திருமறைக்காடு, புன்னாகவனம் (நாகூர்) என்பனவாம்.

இந்தப் பதினாறு தலங்களுக்குள்ளே மேம்பட்ட தலங்கள் நான்கு. அவை, சிதம்பரம், திருவெண்காடு, மதுரை மற்றும் புன்னைவனம் என்னும் நாகூர் ஆகும்.

இப்பூவுலகில் உள்ள தீர்த்தஙகளிலெல்லாம் சிறந்தது கடல். அக்கடற்கரையோரத்தில் அமைந்துள்ள பெரிய தலங்கள் எல்லாம் மிகவும் பெருமை பெற்ற தலங்களாகும். இவ்வகையிலும் இந்நாகூர்த் தலம் இறைவனுக்கு உகந்த மகாதலமாகவும், புண்ணியத் தலமாகவும் ஆகும் என இந்நாகூர்ப் புராணத்தில் பேசப்படுகிறது.

## மகாதலங்கள்

மகாதலங்களுக்குரிய உத்தம இலக்கணங்களை யெல்லாம் வியாச முனிவர் கூறியுள்ளதாகவும் அவற்றைச் சூதமுனிவர் முனிவர்களுக்கு எடுத்துக் கூறுவதாகவும் 'நாகூர்ப் புராணம்' குறிப்பிடக் காணலாம்.

ஆறு மங்கலங்களும் அமைந்திருக்குமானால் அதுவே மகாதலம் என்று அழைப்பர். அந்த மங்கலங்களாவன, அழகான நகரம், தீர்த்தப்பொய்கை, புண்ணியநதி, சிறந்தமலை, கோயில் விமானம், செறிந்த வனம்' என்ற ஆறுமாகும்.

இதற்கு எடுத்துக்காட்டாக நாகூர் என்னும் இத்தலத்தின் நகரம் பிரமாபுரம் என்றும், நதி உருத்திரை என்றும், வனம் புன்னாக வனம் என்றும், பொய்கை சந்திர தீர்த்தம் என்றும், மலை சுபுண்ணியம்

என்றும், விமானம் விசுவ கன்மீயம் என்றும் சொல்லப்பெறுவதால் இந்த ஆறு மங்கலங்களும் பொருந்திய இத்திருத்தலம் மகாதலம் ஆகும் என இப்புராணம் கூறுகிறது.

## முத்திதரும திருத்தலங்கள்

அக்காலத்தில் தலங்களுக்கு செல்வதும் தீர்த்தங்களுக்கு விழாக்காலங்களில் செல்வதும் மிகவும் கடினம். பயண வசதி, தங்கும் வசதி இவை குறைவாயிருந்த காலம். எனவே, புராண ஆசிரியர்கள் திருத்தலப் பயணங்களை மிகவும் வலியுறுத்திப் பேசியிருக்கிறார்கள். ஒவ்வொரு தலபுராணமும் தலச் சிறப்பை எடுத்துக் கூறுவதுடன் அந்தத் தலமே முத்தி அளிப்பது என்றும் கூறும். திருஆரூர் பிறக்க முத்தி. தில்லை காண முத்தி. காசி இறக்க முத்தி, அருணை நினைக்க முத்தி என்று சொல்வது மரபு. கேட்க முத்தி தருவது மதுரை என்பது திருவிளையாடற் புராணம். இவையன்றி ஒற்றியூரும் நினைக்க முத்திதரும். அரசவனம் என்னும் இறைவாசநல்லூர் இருக்க முத்தி தரும். கேதாரம் நீராட முத்தி தரும், வெண்காடு எல்லாம் தரும் என்றும் சொல்லியிருக்கக் காண்கிறோம்.

## ஒரேதலம்

நம் மனித உடலுக்குப் பிரமபுரம் என்றொரு பெயர் உள்ளது. அதில் சூக்குமாதி சூக்குமமாய்த் தூலாதி தூலமாய் ஒரு ஆகாயம் உண்டு. அதனையே சிவயோகிகள் தியானிப்பர். அவ்வாறே புறத்திலுள்ள பிரமாண்டத்திலும் பஞ்ச பூதங்கள் உள்ளன. அவற்றுள் ஆகாயமாக விளங்கும் தலம் சிதம்பரம். சூரியன் எங்கும் ஒளி வீசினாலும் அதன் பேரொளியை ஆகாயத்தில் காண்பது அருமை. அந்தப் பேரொளி மரம் முதலியவற்றிலும் கண்ணாடி முதலிய பொருள்களில் காந்தி மிகுதியாயிருக்கும். அதனினும் படிகத்தில் மிகுதியான ஒளி உண்டு. அதனினினும் சூரிய காந்தக் கல்லிலே ஒளியின் அதிகத்தைக் காண்கிறோம். அதுபோல, மற்ற எல்லாத் தலங்களினும் சிதம்பரத்திலே சிவ விளக்கம் மிகுந்திருத்தலின் 'கோயில்' என்றாலே சிதம்பரத்தைக் குறிக்கும் மரபு சைவப் பெருமக்களிடையே வழங்கி வருகின்றதைக் காணலாம்.

## மூன்று தென்னாட்டுக் கைலை மலைகள்

திருக்காளத்தி, திரிகோணமலை, திரிசிராப்பள்ளி என்னும் மூன்றும் தென்னாட்டுக் கைலாயம் (தட்சிண கைலாசம்) எனப் போற்றப் பெறும் தலங்களாகும்.

## வீடு நல்கும் நான்கு தலங்கள்

பிறக்க வீடு தருவது திருவாரூர், இறக்க வீடு தருவது காசி, கண்டு வழிபட வீடு தருவது சிதம்பரம். நினைக்க வீடு தருவது திருவண்ணாமலை என இந்நான்கு தலங்களையும் வீடு நல்கும் திருத்தலங்களாகக் குறிப்பர்.

## பஞ்சபூதத் தலங்கள்

ஐம்பெரும் பொருள் பதிகள் ஐந்தும் சிறப்புடையன. அவை, மண்-காஞ்சிபுரம் (திருவாரூரும் கூறப்பெறும்), நீர்-திருவானைக்கா, நெருப்பு-திருவண்ணாமலை, காற்று- திருக்காளத்தி, வான்-சிதம்பரம் என்பன.

இவ்வாறே சிறப்புடைய ஐந்து மன்றங்களும் கூறப்பெறும். அவை, பொன்மன்றம்-சிதம்பரம், வெள்ளி மன்றம்-மதுரை, ஓவிய மன்றம்-குற்றாலம், தாமிர மன்றம்-திருநெல்வேலி, இரத்தின மன்றம் -திருவாலங்காடு என்பன.

## காசிக்கு ஒப்பாகச் சொல்லப்படும் ஆறு தென்னாட்டுத் தலங்கள்

திருவெண்காடு, திருவையாறு, மாயூரம், திருவிடைமருதூர், திருச்சாய்க்காடு, திருவாஞ்சியம் ஆகிய ஆறு காசிக்கு ஒப்பாகச் சொல்லப்படும் திருத்தலங்களாகும்.

## ஏழுவிடங்கத் தலங்கள்

இறைவன் தியாகேசன் எனத் திருப்பெயர் பூண்டு, சோமாஸ்கந்த மூர்த்தமாய், திருமாலின் ஆன்மார்த்த மூர்த்தியாய் அவரது இதயக் கோயிலிலே எழுந்தருளியிருந்து அருள் வழங்கிய பின், இந்திரனால் பூசிக்கப்பெற்று, முசுகுந்தன் என்ற மாமன்னனால் வழிபடப் பெற்றவர். அச்சிவ மூர்த்தம் விண்ணுலகிலிருந்து மண்ணுலகு வந்தது வியத்தகு வரலாறு ஆகும். முசுகுந்தன் என்ற சோழர்குல முன்னோன், இத் தியாகேசப்பெருமானை நிலவுலகிற்குக் கொண்டு வந்தான். அம்மன்னனின் ஆழ்ந்த பக்தியுணர்விற்கு இத்திருத்தலங்கள் ஏழும் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

டங்கம்-உளி. விடங்கர்-உளியாற் செய்யப்படாதவர். விண்ணுலகிலிருந்து வந்த இறையுருவம் என்பது பொருள். சப்தவிடங்கத் தலங்களில் தியாகேசர் ஏழுவகைத் திருப்பெயர்களைப் பூண்டு ஏழுவகைத் திருநடங்களைச் செய்தருளுகின்றார். அவையாவன,

| | | |
|---|---|---|
| திருவாரூர் - | வீதிவிடங்கர் - | அஜபா நடனம் |
| திருக்கோளிலி - | அவனிவிடங்கர் - | பிருங்க நடனம் |
| திருநள்ளாறு - | நாகவிடங்கர் - | உன்மத்த நடனம் |
| திரு நாகைக்காரோணம் - | சுந்தரவிடங்கர் | -பாராவாரதரங்க நடனம் - வீசி நடனம் |
| திருக்காறாயில் - | ஆதிவிடங்கர் - | குக்குட நடனம் |
| திருவாய்மூர் - | நீலவிடங்கர் - | கமல நடனம் |
| திருமறைக்காடு - | புவனி விடங்கர் - | அம்ஸபாத நடனம். |

சோழ நாட்டில் திருவையாற்றைச் சுற்றியுள்ள ஏழு ஊர்கள் சத்தத் தலங்கள் (சப்த ஸ்தானங்கள்) என்று அழைக்கப்பெறும். அவை, திருவையாறு, திருப்பழனம், திருக்கண்டியூர், திருநெய்த்தானம், திருப்பூந்துருத்தி, திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி என்பன.

## எட்டு வீரட்டத்தலங்கள்

அன்பு செய்யும் அடியார்களுக்குச் சாந்தமூர்த்தியான இறைவன், வன்பு செய்யுங் கொடியோர்களுக்கு உக்கிரமூர்த்தியாய் எழுந்தருளி மறக்கருணையும் புரிவர். அப்படிச் சிவபெருமான் உக்கிரமூர்த்தியாய் எழுந்தருளி வந்து மறக்கருணை புரிந்த வீரட்டானங்கள் எட்டாம். அவை,

| | | |
|---|---|---|
| 1. திருக்கண்டியூர் | - | பிரமனைச் சிரங்கொய்த தலம் (ஸ்தானம்) |
| 2. திருக்கோவலூர் | - | அந்தகாசூரனைக் கொன்ற தலம் |
| 3. திருவதிகை | - | திரிபுரதகனம் செய்த தலம் |
| 4. திருப்பறியலூர் | - | தக்கன் சிரத்தைத் தடிந்த தலம் |
| 5. திருவிற்குடி | - | சலந்தரனைத் தலையரிந்த தலம் |
| 6. திருப்பழூவூர் | - | யானையை யுரித்தணிந்த தலம் |
| 7. திருக்குறுக்கை | - | மன்மதனை யெரித்த தலம் |
| 8. திருக்கடவூர் | - | இயமனை உதைத்த தலம் |
| வீரஸ்தானம் | - | வீரட்டானம் என மரீஇயிற்று. |

இவ்வாறு அமையும் தலங்கள் சிவத்தலங்களில் முதன்மை பெற்று விளங்குகின்றன. இத்தகைய சிவத்தலங்கள் பல் புராணம் பாடப் பெற்றுள்ளன.

## நவ திருப்பதிகள்

வைணவர்கள் வணங்கும் ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி, தென்திருப்பேரை, தொலைவில்லிமங்கலம் மற்றும் அங்குள்ள அரவிந்தலோசனன் சந்நிதி, திருக்குளந்தை, புளியங்குடி, திருக்கோளூர், வரகுணமங்கை ஆகிய ஒன்பது திருப்பதிகள் சிறப்புடையதாகக் கூறப்பெறுகின்றன.

## நூற்றெட்டுத் திருப்பதிகள்

ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட திருப்பதிகள் நூற்றெட்டும் குறிப்பிடத்தக்க வைணவத் தலங்களாகும். இவற்றுள் பல புராணம் பாடப்பெற்றுள்ளன.

## சத்தித் தலங்கள்

இறைவன் உயிர்களுக்குப் போகம் அருளுதற்பொருட்டு உமையாகிய சத்தியை ஒருபாகங் கொண்டான் என்பர். பாகம் பெண்ணொடு ஆயின விதமானது உயிர்களுக்கு ஞானத்தை ஊட்டி வினையை மாய்த்து அருளற் பொருட்டே என்றும் கூறுவர். இத்தகைய இறைவன் உறையும் திருத்தலங்களே மிகுதியாக இருப்பினும் உமையாகிய சத்திக்குரிய தலங்களாகவும் சில சிறப்புற்று விளங்குகின்றன. சிறப்புடைய சத்தித் தலங்கள் தோன்றிய வரலாற்றையும் சில தலபுராணங்கள் விளக்கக் காணலாம்.

துறைசைப் புராணத்தில், இறைவனும் இறைவியும் சூது விளையாடுவதாக அமையும் பகுதியில் (அத். 9) சத்தித் தலங்கள் பல தோன்றிய வரலாற்றைக் கூறுவர்.

கயிலைமலையின் நடுவிலே பொருந்திய கோயிலின் ஐந்தாவது ஆவரணத்திலே உள்ள வசந்த மண்டபத்தில் ஒருமுறை இறைவனும் இறைவியும் சூது விளையாடுகின்றனர். சிவகணங்களும், பிரமன், திருமால், இந்திராதி தேவர்களும் சூழ்ந்து இருக்க இவர்கள் விளையாடுகின்றனர். ஆண்களெல்லாம் இறைவன் பக்கமும், பெண் களெல்லாம் இறைவியின் பக்கமும் நிற்கின்றனர். திருமால் நடுவராக இருக்கிறார். விளையாட்டில் இறைவர் பந்தயமாக வைத்துக் கொண்டவை திருத்தலங்கள். இறைவியானவள் விளையாட்டில் வெற்றி பெற்றால் தம் அதிகாரத்திற்குட்பட்ட தலங்களை ஒவ்வொன்றாக இறைவிக்கு அளித்துவிடுவதாகவும் இறைவர் கூறுகிறார். அவ்வாறே இருவரும் விளையாடுகின்றனர். உமையே முதலில் வெற்றி பெறுகிறாள். இறைவர், சலந்தரபுரம் என்ற நகரை அம்மைக்கு அளித்தார். பிறகு இவ்வாறே தொடர்ந்து ஐம்பது முறை வெற்றி பெற்று ஐம்பது தலங்களைப் பெறுகிறாள் இறைவி. மேலும், முந்நூற்றைம்பது முறை தாமே தோற்று அம்பிகைக்கு அவ்வளவு தலங்களையும் அளித்து, நாற்திசைகளிலும் போற்ற விளங்குமாறு அருளுகிறார் இறைவர். இவ்வாறு பல சத்தித் தலங்கள் தோன்றியதாக இப்புராணம் கூறுகின்றது.

இப்பரந்த உலகம் சிவம்-சத்தி இவர்களால் நடத்தப்படுகிறது என்பதும், சிவசத்தி-திருவிளையாடலால் இத்தகைய திருத்தலங்கள் தோன்றின என்பதும் இதனால் பெறப்படும். இவற்றுள் பல புராணம் பாடப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

## திருமுருகன் உறையும் சிறப்புத் திருத்தலங்கள்

சிவசக்தியின் செல்வக்குமாரனான முருகன் பல திருத்தலங் களிலும் கோயில் கொண்டுள்ளான். குறிப்பிட்ட சில தலங்களில் சிறப்பான வழிபாடுகளும் நிகழ்கின்றன. அத்திருத்தலங்கள் வருமாறு :

இரத்தினகிரி, இலஞ்சி, இளையனார் வேலூர், எட்டிகுடி, எண்கண், கழுகுமலை, காஞ்சி குமரகோட்டம், கீழ்வேளூர், குமரன்மலை, குளஞ்சியப்பர் கோயில், குறுக்குத்துறை, குன்றக்குடி, குன்றத்தூர், கொண்டல், சிக்கல், சிவன்மலை, சுவாமிமலை, சென்னிமலை, சென்னைக் கந்தகோட்டம், திருச்செங்கோடு, திருச்செந்தூர், திருத்தணிகைமலை, திருப்பரங்குன்றம், திருப்போரூர், திருமுருகன்பூண்டி, திருவிடைக்கழி, பழமுதிர்சோலை, பழனிமலை, புள்ளிருக்குவேளூர், மயிலம், மருதமலை, வடபழனி, வயலூர், வள்ளிமலை, வள்ளியூர், விராலிமலை ஆகிய முப்பதும் திருமுருகன் உறையும் சிறப்புத் தலங்களாகும்.

இவற்றுள் திருப்பரங்குன்றம், திருச்செந்தூர் (திருச்சீர் அலைவாய்), பழனிமலை (திரு ஆவினன்குடி), சுவாமிமலை (திருஏரகம்), திருத்தணிகைமலை, பழமுதிர்சோலை என்னும் ஆறு தலங்களும் முருகப் பெருமானுடைய ஆறுபடை வீடுகள் ஆகும். இவை

திருமுருகாற்றுப்படையில் இடம்பெற்றுள்ளன. இத்தலங்களுள் பல புராணம் பாடப் பெற்றுள்ளன.

## நவக்கிரக தலபுராணம்

இறைவர் எல்லாம் வல்லவர்; எங்கும் நிறைந்தவர்; எல்லாம் அறிந்தவர்; எல்லாவற்றையும் இயக்குபவர்; அவர் ஆட்டுவித்தால் நாம் ஆடுகின்றோம். ஆகவே, நமக்கென்று ஒரு தனி இயக்கம் இல்லை. நாம் செய்த நல்வினை தீவினைக்கேற்ப நாம் இன்ப துன்பங்களை அடைகின்றோம். அவ்வாறு இன்ப துன்பங்களை அளிப்பதற்காக ஏற்படுத்தப்பெற்ற தெய்வங்களே ஒன்பது கிரகங்கள். சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது என்னும் இவ்வொன்பது கிரகங்களையும் நாம் 'பகவான்' என்னும் சொல்லைச் சேர்த்தே அழைக்கின்றோம். நம் துன்பத்திற்குரிய கிரகத்தை வழிபட்டால் துன்பங்கள் பெருமளவு குறையும் என்ற நம்பிக்கையினாலேயே கோயில்களில் நவக்கிரகங்களுக்குத் தனியிடங்கள் அமைத்து வழிபடுகின்றனர்.

நவக்கிரகங்கள் தமக்கேற்பட்ட இன்னல்களைக் களைய இப்பூமியில் உள்ள இறைவன் திருத்தலங்களில் வந்து பூசித்து வழிபட்டதைப் புராணங்களால் அறியலாம். இத்தகைய திருத்தலங்கள் பல தமிழ்நாட்டிலுள்ளன. நவக்கிரகங்களையும் அவற்றால் பூசிக்கப் பெற்ற மூர்த்திகளையும் ஒரு சேர வழிபட்டால் நமக்கு எல்லாத் தெய்வங்களின் அருளும் ஒருசேரக் கிடைக்கும் என்பதும் ஒரு நம்பிக்கையாகும்.

இத்தகைய நவக்கிரக தலங்கள் பல்வற்றிற்கும் தலபுராணங்கள் தோன்றியிருப்பதும், அப்புராணங்களில் இவ்வரலாறுகள் விளக்கப் பெற்றிருப்பதும் நோக்கத்தக்கனவாம்.

| கிரகம் (கோள்) | தலம் |
|---|---|
| 1. சூரியன் (ஞாயிறு) | 1. சூரியனார் கோயில், 2. திருக்கண்டியூர் வீரட்டம், 3. திருப்புறவார்பனங்காட்டூர். |
| 2. சந்திரன் (திங்கள்) | 1. திங்களூர், 2. திருப்பதி |
| 3. அங்காரகன் (செவ்வாய்) | 1. திருச்சிறுகுடி, 2. திருப்புள்ளிருக்கு வேளூர் (வைத்தீசுவரன் கோயில்), 3. பழநி |
| 4. புதன் | 1. திருவெண்காடு, 2. திருவாலவாய் (மதுரை) |
| 5. குரு (வியாழன்) | 1. தென்குடித்திட்டை, 2. திருவலிதாயம், 3. திருச்செந்தூர். |
| 6. சுக்கிரன் (வெள்ளி) | 1. திருநாவலூர், 2. திருவரங்கம் |
| 7. சனி | திருநள்ளாறு |
| 8. ராகு | திருக்காளத்தி |
| 9. கேது | திருக்காளத்தி. |

இவற்றுள், சூரியன், செவ்வாய், வியாழன் ஆகியோர் வழிபட்டுப் பேறுபெற்ற தலங்களாக ஒன்பது தலங்கள், (வகைக்கு மூன்றாக) கூறப்பெறுகின்றன. திங்கள், புதன், வெள்ளி ஆகிய மூவர் வழிபட்டதாக ஆறு தலங்கள் (வகைக்கு இரண்டாக) கூறப்பெறுகின்றன. சனிபகவான் திருநள்ளாறு என்னும் ஒரே தலத்தில் வழிபட்டதாகவும், ராகு, கேது ஆகிய இருவரும் சேர்ந்து திருக்காளத்தி என்னும் ஒரே தலத்தில் வழிப்பட்டதாகவும் கூறப்பெறுகின்றன. ஆக, ஒன்பது கிரகங்களும் பதினேழு திருத்தலங்களில் வழிபட்டுப் பேறு பெற்றதாகப் புராணங்கள் கூறுகின்றன. இவற்றுள் பெரும்பாலானவை சோழ நாட்டுள் இருப்பது குறிப்பிடத்தக்கது. திருப்பதி (திங்கள்), திருவரங்கம் (வெள்ளி) ஆகிய இரண்டு வைணவத் தலங்களைத் தவிர்த்த பிற பதினைந்து தலங்களும் சைவத்தலங்கள் என்பதும் நோக்கத்தக்கதாகும்.

மேற்கூறப்பட்ட சிறப்புடைய தலங்கள் பெரும்பாலும் ஆழ்வார்கள் மற்றும் நாயன்மார்களால் பாடப்பெற்றும், தல புராணங்கள் பெற்றும் சிறப்புற்று விளங்குவது இவண் குறிப்பிடத் தக்கதாகும்.

## தலபுராணம் சொல்லும் முறை

அருளாளர்களால் போற்றப் பெற்ற திருத்தலங்களின் மாண்பை மக்கள் அனைவரும் தெரிந்துய்யும் வண்ணம் அவ்வத் தலங்களின் தொன்மை வரலாறுகளையெல்லாம் சமய நெறிகளையும் தத்துவங்களையும் உள்ளடக்கிய கதைகளின் மூலம் தெரிவிக்க முற்பட்டவையே தலபுராணங்களாகும். இப்புராணங்களெல்லாம் தொன்மையும் தெய்வநலமும் சான்ற முனிவர்களால் அருளப்பெற்றவை என்பதை வலியுறுத்தவே இவற்றின் முன்னே, சிவபெருமான் உமையம்மைக்கோ, முருகனுக்கோ நந்தியெம்பெருமானுக்கோ அருளிச்செய்ய நந்தி சனற்குமாரற்கும், அவர் அவர்தம் மாணாக்கருக்கும் கூற, இறுதியில் சூதமுனிவர் இப்பூவுலக முனிவர்களுக்கு அறிவித்ததாகக் கூறுகின்றன.

திருமால், பிரமன் முதலான தேவர்களும்; நாரதர், அகத்தியர் முதலான முனிவர்களும்; சூரியன், சந்திரன் முதலான கோள்களும்; விலங்குகளும்; பறவைகளும் பூசித்துப் பேறு பெற்றனர் என்றும் கூறி அற்புத நிகழ்ச்சிகள் பலவற்றை அமைத்தே பெரும்பாலும் எல்லாப் புராணங்களும் கூறும். ஆயினும், சில புராணங்களில் சில சிறப்புக் கூறுகள் அமைந்திருக்கவும் காணலாம்.

## தலபுராண நூல்களின் பொது அமைப்பு

தலபுராணங்களைச் சுவடிகளிலிருந்து பதிப்பித்தோர் சில குறிப்பிட்ட அமைப்புகளைக் கொண்டு அச்சிட்டுள்ளனர். குறிப்பிட்ட தலத்திற்குரிய தேவாரப் பாடல்களை முதலில் பதிப்பித்தல் எல்லாத் தலபுராண நூல்களிலும் காணலாம்.

## சிறப்புப்பாயிரம்

சிறப்புப் பாயிரம் என்னும் பகுதியில் நூலாசிரியர் சிறப்பு, சோதனாசிரியர் சிறப்பு, பதிப்பாசிரியர் சிறப்பு, பிரதி தந்தோர் சிறப்பு ஆகியன பல புலவர்களால் பாடப்பெற்றுச் சேர்க்கப் பட்டுள்ளன. ஒரே புலவரே பல பாடல்களைப் பாடியும் சில

நூல்களைச் சிறப்பித்துள்ளனர். அப்புலவர்கள் இப்புராண நூலை ஏற்றுக் கொண்டனர் என்பதும், இவற்றிற்கு மதிப்பளித்தனர் என்பதும் விளங்குகின்றன. காட்டாக, பொன்னாயிரங்கவிராயர் என்பார் சேற்றூர்ப் புராணத்தை இயற்றி அரங்கேற்றம் செய்தபோது சந்திராமுத கவிஞர் என்பவர் அதற்கு மறுப்புக் கூறிப் பின்பு தோல்வி கண்டு அப்புராணத்தைப் பாராட்டிச் சிறப்புப் பாயிரம் பாடியதாகவும் அறிகிறோம்.

சில பழைய தலபுராணங்களின் ஆசிரியர் பற்றிய செய்திகளைக் கூட இச் சிறப்புப் பாயிரங்களே உணர்த்தக் காணலாம். திருச்செந்தூர்த் தலபுராணத்தைக் குமாரக் கடவுளே வந்து பாடுமாறு கேட்க, ஏதுமறியாத மடைத்தொழில் புரிந்து வந்த வென்றிமாலை என்பவர் முருகனருளால் பாடினார் என்னும் வரலாற்றை அழகிய சொக்கநாத பிள்ளையவர்கள் பாடியுள்ள சிறப்புப் பாயிரத்தாலேயே அறிகிறோம். இச் சிறப்புப்பாயிரம் இருபத்தேழு பாடல்களால் ஆனது. இதைத்தவிர இந்நூலாசிரியர் வரலாறு பற்றி எங்கும் அறிய இயலவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

## இறைவி கனவில் தோன்றி, தலபுராணம் பாடச் சொல்லுதல்

கிருட்டிண ஐயங்கார் என்பவர் நடு நாட்டில் திருவாமாத்தூரில் வாழ்ந்துவந்த புலவராவார். இவர் கனவில் இறைவி தோன்றித் 'தண்டபாணி சுவாமிகளைக் கொண்டு திருவாமாத்தூர்ப் புராணத்தைப் பாடி முடிக்கச்செய்' என்று கட்டளையிட்டதை இவர் உடனே தண்டபாணி சுவாமிகளிடம் கூறிப் புராணத்தைப் பாடி முடிக்கச் செய்தார் என்பர். இச்செய்தியை இவரே பின் வரும் சிறப்புப் பாயிரம் பாடலால் விளக்கக் காணலாம்.

"திருமாதை யூரினில் தண்டபா ணிப்பெயர்ச் செந்தமிழ்ச் சரபம் வந்துள்
நேரட் சகனான வபிராமன் மான்மியம் தெரிதர விரும்பு பல்லோர்
அருளால் வெளிப்படுதல் கருதிமுயல் வுறுநாளில் அனைவரும் வியப்பெய் தவே
அந்தரி எனதுகன விலொரு சிறியகன்னியாய் அவனா லதைச்செ யெனலும்
கரவிடமி லாமல்இவள் அவளெனத் தேறினேன் ககனத்தின் வழியே கினாள்
கண்விழித் ததிவிரைவில் அவனுடனவ் வுண்மையைக் கழறினேன் உவகை மலிவாய்
பரமன்வினை யாடலங் கொன்றியல்வ துஞ்சொலிப் பழுதறு புராண மாகப்
பாடினல் கினன்உலகில் வாழ்வீரெ நாளுமெய்ப் பத்திசெய் துய்வீர் களே ".

என இவ்வாறு அமையும் பாடல்களால் இந்நூல்கள் தோன்றிய வரலாறுகளை அறியலாம்.

## புராண வடிவில் சிறப்புப்பாயிரம்

நெல்லையப்ப பிள்ளை என்பவர் இயற்றிய திருநெல்வேலித் தலபுராணத்தை 1869 ஆம் ஆண்டில் தம்முடைய முத்தமிழாகர அச்சுக் கூடத்தில் அச்சிட்ட திருநெல்வேலி புதூர் வள்ளிநாயகம் பிள்ளையவர்கள் அப்புராணத்திற்கு 43 செய்யுட்களால் புராண வடிவில் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். தமிழில் மிக அதிகமான பாடல்களைக் கொண்ட தலபுராணம் திருநெல்வேலித் தலபுராணம்

ஆகும். எனவே, இதற்கேற்ப சிறப்புப்பாயிரமும் நீண்ட அமைப்பில் கூற வேண்டுமென்றே இவ்வாறு பாடியுள்ளனர் எனத் தெரிகிறது. படிப்போர் இச்சிறப்புப்பாயிரத்தால் நூலின் உட்பொருளையெல்லாம் சுருக்கமான முறையில் அறிந்துகொண்டு நூலைப் படிக்கத் தொடங்குவர் என்பதும் நோக்கமாகலாம்.

இவ்வாறு, நூலுக்குப் பிறர் சிறப்புப்பாயிரம் பாடுவது போலவே, சில நூலாசிரியர்கள் தற்சிறப்புப்பாயிரம் பாடி, அதில் தன் வரலாறும், நூல் எழுந்த வரலாறும் கூறக் காணலாம்.

## தற்சிறப்புப்பாயிரம்

திருமயிலைத் தலபுராணம் பாடிய மயிலை நாதமுனி முதலியார் வர்கள் தம்முடைய சிறப்புப்பாயிரத்தில் தம்முடைய முன்னோர், தம்முடைய கல்விப்படிப்பு, புராண நிகழ்த்துதல், கற்பகவல்லியின் அருளால் புராணம் இயற்றுதல் போன்றவற்றை மிக அழகிய முறையில் கூறக் காணலாம்.

## பாயிரம்

தலபுராணங்கள் ஒவ்வொன்றின் தொடக்கத்திலும் பாயிரப்பகுதி வெகு சிறப்பாக அமைந்துள்ளதைக் காணலாம். அவ்வத் தலத்து இறைவன் சிறப்பிற்கேற்பவும் இப்பகுதியில் துதிப்பாடல்கள் அமைவதைக் காணலாம். பொதுநிலையில் மூத்த பிள்ளையாராகிய விநாயகர் வணக்கம் முதலாவதாக அமைப்பர். பிறகு சிவபெருமான், உமாதேவியார், பொன்னம்பலவர், முருகன், காலபைரவர், திருநந்திதேவர், கலைமகள், அகத்தியர் எனக் கடவுள் வாழ்த்துப் பாடல்களைப் பலவாறு அமைப்பர்.

பழனித் தலபுராண ஆசிரியர் முதலில் விநாயகர் துதி, அடியார் பெருமை கூறிய பின் "பிதா வணக்கமும் மாதா வணக்கமும்" கூறிய பின்பே கடவுள் வணக்கம் கூறுகிறார். இது ஒரு புதிய முறையாகும்.

## அடியார் வணக்கம்

தலபுராணங்களின் பாயிரப் பகுதியில் கடவுள் வாழ்த்தினை அடுத்து அடியார் வணக்கம் கூறுவது ஒரு மரபாக உள்ளது. சைவ சமயக் குரவர்களையும், சமய ஆசாரியர்களையும், அடியார்களையும் வணங்குவது புராண ஆசிரியரின் பண்பாகவே அமைந்துள்ளது.

## நால்வர் துதி

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் நன்னெறி முதல்வர் நால்வரையும் எல்லாத் தலபுராணங்களிலும் நூலின் முதற்கண் வணங்கக் காண்கிறோம்.

> "முன்னாளுந் துளைக்கரத்தோன் முருகவேளை பிடித்தெழுந்து மொழியமைபிற தாவப
> பின்னாளுங் கிரிச்சடிலப் பிஞ்ஞகனார் அடித்தொண்டின் பெருகக வீறு
> பொன்னாலும் பெண்ணாலும் அறிவுறுத்தில் வுலகினிடை பொன்றி யாண்ட
> அந்நால்வர் பதகமலம் அகந்தழீஇப் புகழ்த்திறைஞ்சி யரநதை தீர்வாம்"

எனத் தணிகைப் புராணம் இந்நால்வரை வணங்குவது போன்றே பிற தலபுராணங்களும் துதிக்கக் காணலாம். சில புராணங்கள் இந்நால்வரை தனித்தனியேயும் துதிக்கக் காணலாம்.

### ஞானசம்பந்தர் துதி

"பரசமய கோளரியைப் பாலறா வாயனைப்பூம் பழனஞ் சூழ்ந்த
சிரபுரத்துத் திருஞான சம்பந்தப் பெருமானைத் தேய மெல்லாங்
குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளுங் கவுணியர்தங் குலதீ பத்தை
விரவியெமை யாளுடைய வென்றிமழ விளங்களிற்றை விரும்பி வாழ்வாம்".

எனக் காஞ்சிப் புராணம் திருஞானசம்பந்தரை வணங்குவது போன்றே திருவிளையாடற் புராணம், பேரூர்ப் புராணம் ஆகியனவும் இவரைத் தனியாகத் துதிப்பது குறிப்பிடத்தக்கது.

### நாவுக்கரசர் துதி

"மருக்கு லாவு மறைவனத் தொன்றிய
திருக்க பாடந் திறந்தசொல் வேந்தனை
அருட்கு லாவும் அறிவினை மூடிய
இருட்க பாடந் திறக்கவும் ஏத்துவாம்".

எனத் திருக்கூவப் புராண ஆசிரியர் திருநாவுக்கரசரைத் தனியே துதிப்பர். காஞ்சிப்புராணம், சீகாழித் தலபுராணம் ஆகிய புராண ஆசிரியர்களும் இவ்வாறே நாவுக்கரசரை ஏத்துவர்.

### சுந்தரர் துதி

"ஒருமணத்தைச் சிதைவுசெய்து வல்வழக்கிட் டாட்கொண்ட வுவனைக் கொண்டே
இருமணத்தைக் கொண்டருளிப் பணிகொண்ட வல்லாளன் எல்லா முய்யப்
பெருமணச்சீர்த் திருத்தொண்டத் தொகைவிரித்த பேரருளின் பெருமா னென்றுந்
திருமணக்கோ லப்பெருமாள் மறைப்பெருமாள் எமதுகுல தெய்வ மாமால்".

என்பது காஞ்சிப் புராணம். இந்நூலாசிரியர் சுந்தரரைத் தெய்வ வடிவாகவே காண்பர். பரஞ்சோதி முனிவர் தம் திருவிளையாடற் புராணத்திலும் இவ்வாறே சுந்தரரை முதற்கண் வணங்குவர்.

### மணிவாசகர் துதி

"உள்ள மாகிய புலத்தினைப் பத்தியா லுழுது
தெள்ளு ஞானவித் துறத்துநற் சிரத்தைநீர் பாய்ச்சிக்
கள்ள வான்பொறிக் களைகள்கட் டானந்தம் விளைத்துக்
கொள்ளை கூறுமா ணிக்கவா சகன்கழல் குறிப்பாம்".

எனப் பேரூர்ப் புராணம் மணிவாசகரை வணங்கும்.

"வாத வூரர் வாசகமே வையத் தவர்தஞ் செவிகவரும்
ஏத மருவா மலரடியே யெந்த ஞான்று மணங்கவரும்
சீத மருவு செயலொன்றே தெளியச் செயலெ லாங்கவரும்
போத மருவுந் திருமேனிப் பொற்பே விழியெ லாங்கவரும்".

என மணிவாசகரின் மாண்பினை விளித்துப் பாடி வணங்குவர் திருப் பெருந்துறைப் புராண ஆசிரியர். காஞ்சிப்புராணம், திருவிளையாடற் புராணம் போன்றவற்றிலும் இத்தகைய தனிப்பாடல்களைக் காணலாம்.

## தலத்தால் பெயர் பெற்ற நால்வர்

"புகலியன் திருவா ரூரன் போற்றுநன் னாவ லூரன்
இகலறு வாத வூரன் என்பவர்த் தாள்கள் போற்ற
அகலுறு உலகத் தென்றும் அமைபெயர் ஊரும் அற்றே
நகலுறு இறைவன் தாள்கள் நண்ணுதல வாய்மை கண்டீர"

புகலியன், திருவாரூரன், நாவலூரன், வாதவூரன் என்று தலத்தோடு (ஊரோடு) கூடிய நால்வரின் பெயரைக் கூறவே அடியார்கள் ஊரும் பேரும் அற்று வீடு பெறுவர் எனக் கூறுகிறார் அரசிலிக் காதையின் ஆசிரியர்.

## சண்டேசுர நாயனார் துதி

சமயக் குரவர் நால்வரும், திருமூலரும், சேக்கிழாரும் வணங்கி ஏத்தும் சண்டேசுர நாயனாரைத் தணிகைப் புராணம், பேரூர்ப் புராணம், திருவானைக்காப் புராணம், பூவாளூர்ப் புராணம், திருக்குற்றாலத் தலபுராணம் போன்ற நூல்களிலும் வணங்கிப் பாடக் காணலாம்.

"தான் பிறந்த தந்தையையு மினிப்பிறக்கு நிந்தையையுந தடிந்து சேயன
தான்பிறங்கு மழவிடமே லொருவரழைத திடவிருவ ரயிராப வேங்கி
கான்பொழிதா ரரிபிரமா தியர்க்குமெய்தா விருக்கை யெய்திக கடவுள் சேய
வான்புலவர் பெறாப்பேறு பெற்றவனை நற்றவனை வழுத்துதல செய்வாம"

எனச் சண்டேசுர நாயனாரின் வரலாற்றையே உள்ளடக்கித் துதிப்பவர் திருக்குற்றாலத் தலபுராண ஆசிரியர்.

## அறுபத்துமூவர் துதி

"புரிவினை புரிவோ னெய்தும பயனது பொருந்த நலகும
பெரியவன் சைவமன்றிப் பேசாமற் றுள்ள வென்று
தெரிதரு மனத்த ராகிச் செயற்கருஞ் செயன்மேற் கொண்ட
பரிவுறு பத்து மூவர் பாததா மரைகள் போற்றி"

என்று அறுபத்துமூவரையும் ஒரு சேர வணங்குவர் திருப்பெருந்துறைப் புராண ஆசிரியர். காஞ்சிப்புராணம், திருவானைக்காப்புராணம், மாயூரப் புராணம் போன்ற தலபுராணங்களிலும் இத்தகைய அறுபத்து மூவர் வணக்கப் பாடல்களைக் காணலாம்.

## சேக்கிழார் துதி

தொண்டர்சீர்பரவு சேக்கிழாரை முதற்கண் வணங்குவதைப் பல புராண ஆசிரியர்கள் கடமையாகக் கொண்டுள்ளனர்.

"ஓங்கு சைவத் துயர்பரி பாடையும்
வீங்கு பேரொளிப் பத்திசெய் மேன்மையுந்
தேங்கு பேறுந் தெரிந்தருள் சேக்கிழான்
பாங்கு சேர்மலர்ப் பாதம் பரசுவாம்".

என்பது திருவெம்பாப் புராணப் பாடல்.

காஞ்சிப்புராணமும், திருவானைக்காப்புராணமும், திருப் பெருந்துறைப்புராணமும் பிறவும் சேக்கிழார் பெருமானை இவ்வாறே துதிக்கக் காணலாம்.

## மெய்கண்டதேவர் துதி

"வேதத்தி னரும்பொருளை விமலனரு ணந்திக்குப்
போதித்த சிவஞான போதத்தைக் குருமரபால்
ஓதித்தேர்ந் தருந்தமிழா லெமக்குணர்த்தி யெம்முனஞ்
சேதித்த மெய்கண்ட தேவனடி சிந்திப்பாம்".

என்பர் அருணகிரிப்புராண ஆசிரியர்.

"பன்னுசிவ சமயநெறி வளர வேண்டிப்
பரஞ்சோதி யடிகளிந்தப் பாரின்மேவி
மன்னுபுகழ்ச் சுவேதனப் பெருமா னிங்கே
வருகவென விளம்புதலு மவுன நீங்கித்
தன்னிகரி லவனதருள் பெற்றுச் சைவ
சந்தான நெறிதழைக்கத் தமிழ்நூல் செய்தோன்
அன்னையிலன் புடையவன்மெய் கண்ட தேவன்
அடியவருக் கடியவர்தா ளகத்திற் சேர்ப்பாம்".

எனத் திருவெண்காட்டுப் புராணம் இவர் பெருமையை விளக்கித் துதிக்கும். சேது புராணம், திருவாரூர்ப் புராணம் போன்றவற்றிலும் இவருக்கெனத் தனியே துதிகள் கூறக் காணலாம்.

## நமச்சிவாய தேசிகர் துதி

"கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு நீடூழி தழைக மாதோ".

என நமச்சிவாய தேசிகரைப் போற்றிப் பரவுவர் காஞ்சிப்புராண ஆசிரியர். தணிகைப் புராணமும், திருப்பெருந்துறைப் புராணமும், திருக்குடந்தைப் புராணமும் இவருக்கெனத் தனியே துதிகளைக் கொண்டுள்ளன.

## தமிழ்த்தெய்வம் துதி

"மறைமுதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்த வேணி
இறைவர்தம் பெயரை நாட்டி யிலக்கணஞ் செய்யப் பெறறே
அறைகடல் வரைப்பிற் பாடை அனைத்துமென் றாரியத்தொ
டுமுறதரு தமிழ்த்தெய் வத்தை யுண்ணினைந் தேத்தல் செய்வாம்"

எனத் திருக்காளத்திப்புராணம் பாடிய கருணைப்பிரகாசசுவாமிகளும்,

"அன்பினால் விளங்குறு அமலன் செய்திட
அன்பினால் உலகெலாம் அடையும் இன்பென
முன்பினால் பொருளுரை முழங்கு நற்றமிழ்
இன்பினால் விளங்குக இசைகள் மனனியே".

எனத் திரு அரசிலிக் காதை பாடிய அடிகளாசிரியரும் பாயிரப் பகுதியில் தமிழினைத் தெய்வமாக நினைந்து துதிப்பர். இவை போன்ற துதிகள் இந்நூலாசிரியரின் மொழிப்பற்றைக் காட்டுவன.

## திருமுறைகள் ஏழையும் தனிப்பாடலால் துதித்தல்

திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் பாடிய மார்க்கசகாய தேவர் தம் நூலில் திருமுறை வணக்கம் கூறுகிறார். இத்திரு விரிஞ்சைக்குப் புராணம் பாடிய சைவ எல்லப்பநாவலர் தம் திருவெண்காட்டுப் புராணத்தில் இவ்வாறு திருமுறைகள் ஏழையும் சிறப்பித்துத் தனிப்பாடலால் துதிப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

"காழிதனிற் பெருமானைக் காட்டியகைத் தமிழ்விரகன் கழற்றாள் போற்றி
ஆழியிலே குண்டரிடுங் கலமிதப்ப வந்தபிரான் அடியை யேத்திச்
சூழியிட மன்றுரித்தார் துணையான தோழனடித் துணையை வாழ்த்தி
வாழியவர் திருமுறைக ளேழையுமந்ய மனதார வழுத்து வாமே"

என நூலின் முதலிலும், 'திருமுறைகளேழும் வாழியவே' என்று நூலின் இறுதி வாழ்த்துப் பாடலிலும் இப்புராண ஆசிரியர் வாழ்த்துவது குறிப்பிடத்தக்கது.

திருமுறைகளிடத்துத் தலபுராண ஆசிரியர் கொண்டிருந்த தனி ஈடுபாட்டிற்கும் பக்திக்கும் இது ஓர் எடுத்துக்காட்டாகும்.

## தலபுராண ஆசிரியர்கட்குத் துதி பாடுதல்

திருவாரூர்ப் புராணம் பாடிய அளகை சம்பந்தமுனிவர் தம் புராணத்தில் கடவுளர், சந்தான குரவர், திருத்தொண்டர் இவர்கட்கெல்லாம் துதி கூறிய பின்னர், தலபுராணம் பாடிப் புகழ்பெற்ற கமலை ஞானப்பிரகாச தேசிகர், நிரம்பவழகிய தேசிகர் ஆகியோருக்குத் துதி பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.

"இருந்தமிழ்ப் புலவருயவா னிடவன மழவை யெனனுந்
திருந்துசீர்த் தலபுராணத் தெள்ளமு தளித்த செலவப
பெரும்புகழக் கமலை ஞானப் பிரகாச னெனுமபேர் பெற்ற
வருங்கலைத் திறைய றாத வருட்கடற் கணட செயவாம"

"உருநிரம்புடவப பிணிதீர்கடற சேது புராணமருந் துதவியோவாத
திருநிரம்பு ஞான மணிமருவி நெடுஞ்சேனை விளங்குத் தெய்வக் கலைவிர
தருநிரய பியள வொட்கை விளரியருள் குவிதமிழ்த் தயங்கு மெங்கள
குருநிரம்ப வழக னெனுங குணைநத் துதித்திறைஞ்சிக் குறித்து வாழ்வாம"

(பாயிரம்: 21, 22)

என்னும் இதுபோன்ற துதிகள் குறிப்பிடத்தக்கன.

## ஆலயப்பணி முதலியன செய்யும் அடியார்களையும் துதித்தல்

கோயிலூர்ப் புராணம் பாடிய மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் தம்முடைய பாயிரப் பகுதியில், வன்னி விநாயகர், கொற்றவாளீசர், நெல்லைநாயகி, கைலாயநாதர், நித்தியகல்யாணி, நடராசர், சிவகாமசுந்தரி, தட்சிணாமூர்த்தி, வைரவக் கடவுள், சுப்பிரமணியர், திருநந்திதேவர், அகத்தியமுனிவர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி, மாணிக்கவாசகர், தண்டீசப் பிள்ளையார், அறுபத்துமூவர், பஞ்சாக்கரதேசிகர், அம்பலவாண தேசிகர் ஆகியோரைத் துதித்தபின் ஆலயப்பணி முதலியன செய்யும் அடியார்களையும் துதித்துப் போற்றுவதைக் காணலாம்.

"கொற்றவா ளீசற் காலய விமான கோபுர மண்டப மாதி
முற்றவாா் வத்திற் புரிந்தவா் புரிவோா் முனிவரும் விழாச்சிறப் பெடுப்போா்
செற்றபல் லுபசா ரங்களும் பரிவாற் செய்பவா் பிறவிரும் புநரும்
உற்றவ ரவா்கள் யாவரா யினும்யாம் உண்மையிற் போற்றுதும் உவந்தே". (22)

என்னும் இப்பாடலில் கோயிற் திருப்பணிக்கு உதவி புரிவோரும் துதித் தற்குரியோர் என்பதைச் சுட்டுகிறார்.

## பெயர் வேண்டாப் பெரியார்

சிவஞான சுவாமிகள் காஞ்சிபுரத்தில் தங்கியிருந்த காலத்தில், சுவாமிகளையும் கச்சியப்ப முனிவர் முதலிய மாணாக்கர்களையும் வேண்டுவனவற்றைச் செய்து, பொருளாலும் பணியாலும் பெரிதும் உபகரித்து இனிதிருக்கச் செய்தவர் பிள்ளையார்பாளையம் மணியப்ப முதலியார் ஆவார். காஞ்சிப்புராணம் இயற்றியதும் அவர் வேண்டுகோளின்படியேயென அப்புராணத்துள், 'நூல் செய்தற்குக் காரணம்' என்னும் செய்யுளில் சுவாமிகள் அருளிச்செய்தனரெனவும், அவர் அடியேன் பெயர் அதன்கண் வேண்டுவதில்லை எனக் கூறியதால், அதனை வேறு வகையாக அமைத்தனரெனவும் கூறுவர்.[1]

"பொருவில் கச்சியம் புராணம்வண் டமிழினிற் புகலென்
றிருநி லம்புகழ் மணிமதிற் கச்சிஏ கம்பர்
திருவ ருட்குரி யான்றவா் கூறிய சிறப்பால்
உரிமை யுற்றெழும் ஆசையான் உரைத்திட லுற்றேன்".

(பாயிரம் : 1)

என்பது அப்பாடல்.

சிறந்ததொரு தலபுராணத்தின் தோற்றத்திற்குக் காரணமாகத் தாம் இருந்தும், தம்முடைய பெயரைக் கூட இந்நூலில் அமைக்க வேண்டாம் எனக்கூறிய அப்பெரியாரின் பெருந்தன்மை மிக மிகப் போற்றற்குரிது. ஆயினும், இந்நூலாசிரியர் அவரை நினைந்து போற்றிப் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது.

1. சி. அருணைவடிவேல், காஞ்சிப்பு ராணம், முன்னுரை, பக். 34.

இவ்வாறு பாயிரப் பகுதியில் துதிப்பாடல்களேயல்லாமல் நூற்பெயர், முதனூல் வழி, நூற்பயன், ஆக்கியோன் பெயர், நூல் அரங்கேற்றிடம், காலம், சருக்கத்தொகை போன்றவற்றையும் தனித் தனி பாடல்களில் பல தலபுராண ஆசிரியர்கள் கூறுகின்றனர்.

## நூலின் மூலம், உள்ளடக்கம், சருக்கம், பாடல் தொகை, நூற் பெயர் ஆகியவற்றை ஒரே பாடலில் கூறுதல்

"காரணியும் நெடுஞ்சோலைக் களிவண்டு ஆர்க்கும்
 காண்தகுறை மிசவனத்தில் கலந்து வாழும்
ஆரணநூல் தருமுனிவர் கேட்கச் சூதன்
 அருள்பாத்ம புராணத்தின் அடைவு நோக்கி
ஏரணியும் சருக்கம்ஈ ரேழது ஆக
 இசைவிருத்தத் தொகைஐந் நூற்று எழுபது ஆகச்
தாரணிஎண் செந்தமிழால் வகுத்த மேன்மை
 தந்திவனப் புராணத்தைச் சாற்றல் செய்வாம்."

(10)

என்னும் இப்பாடல் கமலை ஞானப்பிரகாசர் இயற்றிய தந்திவனப் புராணத்தில் அமைந்த பாயிரப் பாடலாகும்.

## நூல்வந்த வழி கூறுதல்

கயிலை நாதனாகிய சிவபெருமான் நந்தி நாயகருக்கு நவிலவும், அவர் சனற்குமாரற்கு மொழியவும், அவர் வியாசருக்கு அளிக்கவும், அவர் சூதமுனிக்கு மொழியவும், அவர் முனிவர்களுக்கு அளிக்கவுமாகத் தோன்றிய புராணங்கள் பதினெட்டு என்றும்; அவை இன்னின்ன என்பதும்; அவற்றுள் குறிப்பிட்ட புராணத்தில் கூறப்பெறும் ஒரு பகுதியிலிருந்து இந்நூல் தமிழில் மொழிப்பெயர்த்துக் கூறப்பட்டது என்பதும் பல தலபுராணங்களின் பாயிரப் பகுதியில் விரிவாகக் கூறப்படுகின்றன.

## அவையடக்கம்

கடவுள் வாழ்த்து என்னும் பகுதியை யடுத்து வருகின்ற பகுதி அவையடக்கம் ஆகும். பழமையான நூல்களாக தொல்காப்பியம், திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற நூல்களில் அவையடக்கம் என ஒரு பகுதி தனியே இல்லை. சீவகசிந்தாமணி முதலான இலக்கியங்களிலேயே அவையடக்கம் பயின்று வரக் காண்கிறோம். தமிழ்த் தலபுராணங்களில் அவையடக்கம் தவறாது இடம்பெறும் பகுதியாகும்.

தாம் இயற்றும் நூலில், பல குற்றங்குறைகள் இருப்பினும், அவற்றைப் பொறுத்தருளி, அறிவுடைய பெருமக்கள் தம்முடைய நூலை இகழாது ஏற்றுக்கோடல் வேண்டும் என வேண்டிக் கொள்ளும் முறையில் இந்நூலாசிரியர்கள் தம்மைப் பெரிதும் தாழ்த்திக் கொண்டு, இப்பகுதியிற் பல பாடல்களை அமைப்பர். அடிப்படைக் கருத்து ஒன்றேயாயினும், இதனை வெவ்வேறு வகைகளில், பல்வேறு

உவமைகள் மூலம், அழகும் சுவையும் அமைய இவர்கள் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இவ் அவையடக்கப் பாடல்களே இந்நூலாசிரியர் களின் நற்பண்புகளையும் முதற்கண் தெரிவிக்கின்றன. அவர்தம் புலமைச் சிறப்பும் இப்பகுதியில் பெரிதும் வெளிப்படுத்தப் பெறுகின்றன.

ஒவ்வொரு தலபுராண ஆசிரியரும் ஒவ்வொரு வகையில் இவ் அவையடக்கப் பாடல்களைப் பாடிச் சிறப்பித்திருக்கக் காணலாம். காட்டாக, ஒரு சிலவற்றை மட்டும் காண்போம்.

திருவம்பர்த் தலபுராணத்தில் பெரும்புலவர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் கூறும் அவையடக்கப் பாடல்கள் அவர்தம் பெரும் புலமையைச் சுட்டுவன. இவர்தம் ஆறு பாடல்களும் சுவைபட அமைந்துள்ளதைப் பின் வருமாறு காணலாம்.

## இறையருளே துணை

பிரமதேவர் வழிபட்ட திருவம்பர்ப் பிரமபுரேசரின் புராணம் பாடுவதற்கு உனக்குத் தகுதியில்லை என்று சிலர் கூறக்கூடும், ஒரு காலத்தில் திருமால் முதலிய தேவர்களும் கூடத் தன்னை அசைக்க முடியாதபடி நிலை பெற்று நின்று, ஒரு துரும்பும் கூட வெற்றி பெற்றது என்னும் வரலாற்றைக் கேனாபநிடதம் கூறுகின்றது. ஆதலின் இறையருள் பெற்றால், இறையருளைத் துணையாகப் பற்றினால், எளியவன் ஆகிய யானும் இந்நூலைப் பாடுதல் இயலும்.

"பிரமனார் பூசை கொண்டு பெருந்திருக் கோயில் மேய
பரமனார் புராணம் பாடும் பண்புனக் கில்லை என்னில்
உரமனார் அணங்கி னோர்முன் னோரைவெல் துரும்பு போலத்
திரமனார் அருள்இ லேசம் சேர்தரின் உண்டாம் அன்றே".

## குறிலும் நெடிலும்

தமிழில் உயிர் எழுத்துக்கள் குறில் நெடில் என இருவகைப்படும். குறுகிய ஓசையையுடைய குற்றெழுத்துக்கள் இருத்தல் பற்றியே, நீண்ட ஓசையை உடையன என்னும் பொருளில், மற்றைய எழுத்துக்கள் நெட்டெழுத்துக்கள் எனப் பெயர் பெற்றன. நெட்டெழுத்துக்களுள் ஆ ஈ ஊ ஏ ஓ என்ற ஐந்திற்கு மட்டுமே அ இ உ எ ஒ என்னும் ஐந்து இணைக்குற்றெழுத்துக்கள் முறையே உள்ளன. உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டில் ஐ, ஔ என்னும் இரண்டுக்கும் இணையான குற்றெழுத்துக்கள் இல்லை. ஆயினும் இரண்டு மாத்திரையளவு ஒலித்தல் ஆகிய காரணம் பற்றி ஒரு வகையில் ஐ, ஔ என்னும் இரண்டும் கூட நெட்டெழுத்துக்களேயாகும் என்று இலக்கண நூலார் கொள்வர். அம்முறைப்படி அறிவில்லாத என்னுடைய இழிந்த கவிதைகளையும் கூட, இறைவனுடைய புகழ் பற்றியனவாக இருக்கும் காரணம் பற்றி, அறிவுடையோர்களின் சிறந்த பாடல்களோடு சேர்த்துப் பெரியோர்கள் போற்றி ஏற்றுக் கொள்வார்கள்.

"செறிகுறில் உடைஇந் நோடு குறிலிலா யிரண்டும் சேர்ந்து
மறிவில்நெட் டுயிர்எழ் என்று மாத்திரை நோக்கிக் கொள்வார்;
அறியிய லுடைய பாவோடு இயலிலா அடியேன் பாவும்
குறியிலான் சரிதம் நோக்கிக் குறிகொள்பா என்றே கொள்வார்".

### புன்சொல்

நல்ல சிறந்த சொற்களைக் கொண்டு இறைவனைத் துதிப்பது தான் முறை. அங்ஙனம் இயலாது முட்டுப்பாடு நேர்ந்தால், புல்லிய இழிந்த 'சொற்களையேனும்' கொண்டு போற்ற முற்படுதல் கடமை யாகும். மூர்த்திநாயனார் சிறந்த நல்ல சந்தனக் குறடுகளால், சாந்து அரைத்து இறைவனுக்குச் சாத்தி வழிபட்டு வந்தவராயினும், அவை கிடைக்கப்பெறாமல் முட்டுபாடு நேர்ந்தவழி, தம்முடைய முழங் கையையே தேய்த்தார் அன்றோ. அதுபோலவே என் கவிதைகளும் அமைவதாகுக.

"நன்சொலே கொண்டு போற்றல் நன்மையாம்; அதுமுட் டுற்றால்
புன்சொலாய் வந்த கொண்டு போற்றலும் கடன்மை யாகும்;
கொன்சொலார் நறிய சந்தக் குறடுமுட் டுற்ற தாலே
முன்சொல்வார் மூர்த்தி யார்தம் முழங்கைதேய்த் திட்டார் அன்றே".

### சந்திரனும் பாம்பும்

விராட் (உலகமே உருவமாகக் கொண்டவன்), சாம்ராட் (பெருந்தலைவன்), சுராட் (தனிமுதற் பெருந்தலைவன்), மன்று அமர் ஆட்டவன் (அம்பலத்தில் நடனம் புரிபவன்) என்னும் பெயர் களையுடைய சிவபெருமான், விரும்பத்தக்க சந்திரனோடு விரும்பத் தகாத பாம்பினையும் கூடச் சடையில் அணிந்து கொண்டிருக்கிறான். அது எதற்கு எனில், திருஞானசம்பந்தரின் சிறந்த பாடல்களோடு என்னுடைய இழிந்த பாடல்களையும் விருப்பு வெறுப்பு இல்லாமல், உயர்வு தாழ்வு நோக்காமல், ஏற்றுக்கொண்டு அருள் புரிதலை யுணர்த்துவதற்கே ஆகும்.

"விராட்டொடு சாம்ராட் என்னும் நாமத்தும் விசேட மாகச
சுராட்டெனும் நாமம் பூண்ட சுயம்பிர காசன், மன்ற
மராட்டவன் மதியொ டும்பாம்பு அணிந்தமை மதிக்கின், ஒன்றோடு
இரட்டையின் எழும்முற் பாவோடு என்னதும் ஏற்றற்கு அன்றோ?"

### ஈயும் எறும்பும்

சிறந்த பெரிய கவிஞர்களைப் போல ஒன்றுக்கும் பற்றாத எளியவன் ஆகிய யானும், அம்பர்ப் புராணம் பாடத் தொடங்கியது எவ்வாறு உள்ளதென்றால், திருமாலைப் போல யானும் உலகம் முழுவதையும் உண்பேன் என்று ஒரு சிற்றெறும்பு எழுந்ததனையும்; மலர்களிலுள்ள சிறிய தேனைத் தேடியுண்ணும் தேனீயானது, அகத்தியமுனிவரைப் போலக் கடல் முழுவதையும் யான் பருகுவேன் என்று கூறிப் புறப்படுதலையும் போன்றதாகும்.

"பெரியர்போல் யாலும் பெம்மான் பேரருட் புராணம் கூறல்
தெரிதரின், மாயோன் போல்சிற் றெறும்புமண் முழுதும் உண்பான்
புரிவொடும் எழுஞ்சற் றாய போதில்தேன் உண்ணல் நீந்துப்
பரிவின்ஈ முனிபோல் ஆழி யுண்ணவும் படரும் அன்றே".

## உயர்திணையும் அஃறிணையும்

தனித் தனியே கருதிய வழி அஃறிணையாகக் குறிப்பிடப் பெறும் உயிரும் உடலும் தம்முள் ஒன்று சேர்ந்து அறிவு நலனும் எய்தப் பெற்றால், அஃறிணை என்னும் குறைபாடு ஒழிந்து, உயர்திணை என்னும் சிறப்புப் பெறும். இங்ஙனம் அஃறிணை எனப்படும் உயிரும் உடலும் அறிவுடன் ஒன்று கூடுதலால் உயர்திணையாகிச் சிறப்புறுதல் போன்று, இழிதகவு மிக்க என்னுடைய சொற்பொருள்களும் கூட, இறைவனின் சரிதத்தோடு முழுவதும் சேர்தலினால் சிறப்பை அடையும். இதில் ஐயமில்லை.

"இழிதனை உயிரும் மெய்யும் இலங்கு அறிவொடும் இயைந்தே
இழிபு உயர்பு உற்றாற்போல், இறைவன் சரிதத் தோடும்
அழிதக வுடையேன் சொல்லும் பொருளும் முற்றுற இயைந்தே
இழிவு ஒழித்துயர்வு பூணும் என்பதற்கு ஐயம் என்னே? "

இவ்வாறு தம்முடைய பணிவுடைமை தோன்றப் பாடுவதற்குரிய, எளிய பொதுவான அவையடக்கச் செய்தியினைக் கூட, தமது புலமை நயத்தாலும் கற்பனை வளத்தாலும், பத்திமைப் பண்பாடும் தோன்றிப் பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

## தாய் போலப் பாராட்ட வேண்டுதல்

"தமிழ்தேர்ந்த புலவர்களுந் தங்குழவி குதலைமொழி சாற்றக் கேட்டே
உமிழ்வாரோ இலக்கணமும் இலக்கியமும் உணராதேன் உகப்பி னாலே
அமிழ்தமெனுந் திருமயிலைப் புராணமதைப் பாடலுற்றேன் அறிஞ ரானோர்
இமிழ்திரை மாஞாலம் அதிலிதுவு முலாவக் கருணை யேன்செய் யாரே".

எனத் திருமயிலைத் தலபுராண ஆசிரியரும்,

"நன்மையதே யென்றாலு மன்மையதே யென்றாலும் நற்றா யீன்ற
தன்மகவைச் சீராட்டிப் பாராட்டுந் தன்மையைப்போற் தமிழ்வல் லோரென்
புன்மொழியை நன்மொழியென் றெடுத்தாள்வ ரெனவுளத்திற் பொங்கு மன்பாற்
தென்மயிலை மலையில்வருங் குமரகுரு திருக்காதை செப்பு வேனால். "

என மயூராசல புராண ஆசிரியரும் அவையடக்கமாகப் பாடியிருக்கக் காணலாம். இவற்றுள், குழவியிடம் குற்றம் பாராட்டாத தாய் போலத் தமிழ்ப் புலவர்கள் இந்நூல்களின் குறைகளைப் பாராட்டாமல் ஏற்குமாறு வேண்டுவது குறிப்பிடத் தக்கதாகும்.

## மருத்துவர் மருந்து சுத்தி செய்வது போல

பாதரசம், கந்தகம், பாடாணம் போன்றவை மிகுந்த நச்சுத் தன்மை கொண்டவை. இவற்றை முறைப்படி சுத்தம் செய்த பின்பு

சிறந்த மருந்துப் பொருள்களாக்கி நோய்க்கு எதிராகப் பயன்படுத்துவது மருத்துவர் பண்பாகும். இவ்வாறே இந்நூலில் உள்ள குற்றம் குறைகளைப் போக்கி ஏற்குமாறு கூறுகிறார் கூடற்புராண ஆசிரியர்.

"தூதங்கந் தகம்பா பாணஞ் சுத்தியாற் குற்றம் போக்கி
மீதங்கன் கூட்டு மாயுள் வேதியன் போல மேலோர்
மாதங்கன் காந்த கூடல் மதுரையான் புகழ்நான் பேசும்
போதங்கண் டேத மெல்லாம் போக்கிநன் காக்கு வாரே". (3)

என்பது இந்நூலில் வரும் ஓர் அவையடக்கப் பாடல்.

## குற்றம் எல்லாவற்றிற்கும் இலக்கியம்

தாம் இயற்றிய நூல் முழுமையுமே குற்றமுடைய தென்றும், இதை ஆன்றோர் பொறுத்து ஏற்க வேண்டும் என்றும் கூறுவர் சாயாவனப் புராண ஆசிரியர்,

"செந்தமிழ்நூற் புலவர்பலர் யாப்புத் தோறும்
சிறப்பின்மை தனைநாடித் தியங்கா வண்ணம்
முந்தவுரைத் திடுமெழுத்தும் அசையுஞ் சீரும்
முதன்மைபெறு பந்தமடி தொடையின் குற்றும்
வந்தவகை யுளிசெய்யல் எதுகை மோனை
வழுக்கள் பொருள் நலமிலதாய் வைத்தல் தானும்
இந்தவகைக் குற்றமெலாம் எளிதிற் காண
இலக்கியமா வதற்கிதனை இயம்பி னேனே."

என்பது இந்நூலின் அவையடக்கப் பாடல்.

இவ்வாறு அமையும் அவையடக்கப் பாடல்கள் பல அறிந்து இன்புறத்தக்கன.

## நாட்டுச் சிறப்பும் நகரச் சிறப்பும்

தமிழ் நாட்டின் பழமைச் சிறப்பும், கோயிற் சிறப்பும், கோயில்கள் நிறைந்த நகரச் சிறப்பும் ஒவ்வொரு தலபுராணமும் சுட்டக் காணலாம்.

காட்டாக, குறிப்பிட்ட தலம் சோழ நாட்டிற்குரியதாயின் அந்நாட்டின் சிறப்பும், அந்நாட்டின் பெருமைக்குரிய காவிரியின் சிறப்பும், பயிர்வளமும், கல்வி, செல்வம், வீரம், நல்லறிவு, ஒழுக்கம், நல்லுறவு, தூய்மை ஆகியவற்றின் மேம்பாடும், அந்நதிக்கரையிலுள்ள முக்கிய தலங்களும் அவற்றின் பெருமைகளும், பாடல் பெற்ற தல வரலாறுகளும், அந்நகரின் எல்லைகளும், நகரின் பல்வேறு பெயர்களும் அதன் காரணங்களும் என இவ்வாறு பல செய்திகள் இலக்கிய நயங்களோடு கூறப்பெறும்.

"தெருள்காட்டு மாரியங்க ளமரர்முத லெவரைவர்களுந் திரண்டு தேர்ந்து
பொருள்காட்டு நீர்மைமன் னொக்கமுமும் புனிதனொளப் புகலா நின்றே
இருள்காட்டு மதிகெடுத்து விதிகெடுத்துக் கதியுடைய ரச ளார்தும்
அருள்காட்டுந் தமிழ்நாட்டுப் பெருமையெமர் மதிகாட்டி அறைதற் பாற்றோ".

எனத் தமிழ் நாட்டின் சிறப்பையும்,

"ஆவேறு மிறைவனரு ளுருவுடைய திருக்கோயிற் களவே யின்று
பாவேறு மெய்ப்புலவர் பாட்டேற அருள்சுரந்து பரவ வொண்ணாக்
கோவேறு முந்நாட்டின் முன்னாடாய்ச் சோழர்குலக் கொடியே யென்னக்
காவேரி வளங்காட்டுந் திருநாட்டின் பெருமையது கரையப் போமோ".

என சோழநாட்டின் சிறப்பும்,

"அன்புநெறி இதுவென்றே அகிலமெலாம் அறிந்துய்ய அருள வந்த
இன்புடைய குன்றைநகர்ச் சேக்கிழான் அகத்துளா யெம்மான் தொண்டர்
மன்பொலியு மன்பதனை விளக்கியிட எஞ்ஞான்றும் வாழ்ந்த தென்னில்
பொன்பொலியுந் திருநாகேச் சுரநகராம் இதன்பெருமை புகலப் போமோ".

என அச்சோழநாட்டிலுள்ள திருநாகேச்சுரம் என்னும் நகரத்தின் சிறப்பும் பற்றிப் பாயிரப் பகுதியிலேயே (பா. 22-24) உரைப்பர் திருநாகேச்சுரப் புராண ஆசிரியர்.

இவ்வாறு நாட்டின் பொது வளமும், மழை வளமும், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை போன்ற ஐவகை நிலம் பற்றியும் ஒவ்வொரு ஆசிரியரும் குறிப்பிடுவது சிறப்பாகும்.

நகரச் சிறப்பிலே புறநகர், இடைநகர், அகநகர் எனப் பிரித்து அவற்றில் காவற் படைகள் இருக்குமிடம், பரத்தையர் (பொது மாதர்) இருக்கும் வீதி, ஆவண வீதி, வேளாளர் வீதி, வைசியர் வீதி, இராசவீதி, வேதியர் வீதி, ஆதி சைவர் வீதி, திருமடாலயங்கள், திருக்கோயில்கள் என அந்நகரையே படிப்போர்தம் கண் முன்னே காட்சிப்படுத்துவது இத்தல புராணங்களின் தனிச்சிறப்பாகும்.

இவ்வாறு நாட்டுச் சிறப்பும் நகரச் சிறப்பும் கூறுமிடத்து இலக்கியச் சிறப்பிற்காகச் சிலவற்றைப் புனைந்து பாடினும், புராண ஆசிரியர் தாம் நேரில் கண்டவற்றையும் பழைய நூல்களின் சான்றாகக் கொண்டவற்றையும் சேர்த்துப் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது. அந் நாடும் அந்நகரமும் ஒருசில புலவர்களாலும், நூலாலும், பிற வளத்தாலும் தனித்தன்மை பெற்றதாயின் அவற்றையெல்லாம் தவறாமல் குறிப்பதில் இப்புராண ஆசிரியர்கள் முன்னிற்கின்றனர். காட்டாக,

"எத்தொழில்செய் வார்க்குமுலை வினிதளித்து நிலைநிறுத்தி
அத்தொழில்கட் காருயிரா மருந்தொழிறந் தொழிலாக்கொண்டு
எத்தொழில்க ளினுமுழவே தலையெனநூ லிசைவாய்மை
கைத்தலநெல் லியிற்றேற்றுங் காரால ரிவரம்மா".

(128)

" நிலமலைநீள் கடல்வினவு நேரியர்க்கீந் தமைச்சாகி
உலகமுதல் கொடுபெருநூ லுலகமெலா முயவளித்த
மலர்புகழ்சேர் சேக்கிழார் மாமணியிம் முதலியார்
குலமணியே யெனிலினிநாங் கூறுதிறன் வேறெவனோ".

(129)

எனச் சூதவன புராணத்தில் திருநகரச் சிறப்பு கூறும் ஆசிரியர், வேளாளர் வீதியை வருணிக்குமிடத்து வேளாளர் சிறப்பும் அமைச்சராகி விளங்கி அருள்தொண்டர் புராணத்தை இயற்றிப் புகழ் பெற்ற சேக்கிழார் சிறப்பும் குறிப்பர். இவ்வாறு தொண்டை நாட்டுத் தலபுராணமாயினும் சோழநாட்டுப் புராணமாயினும் சேக்கிழாரைக் குறிப்பிடாமல் இருப்பதில்லை. இதே போன்று பிற முக்கியமானவர் களும் தவறாமல் குறிக்கப்பெறுகின்றனர்.

## உவமைச் சிறப்பு

தமிழ்நாட்டின் சிறப்பும் திருத்தலச் சிறப்பும் பாடும் ஆசிரியர்கள் அரிய பல உவமைகளோடு பாடியிருப்பது தமிழுக்கே உரியதாகும். ஆசிரியர்தம் அனுபவங்களும் தமிழ் உணர்ச்சிகளும் இப்பகுதியில் மிகுதியாக வெளிப்படக் காணலாம். காட்டாக, மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் தலபுராணங்கள் பலவற்றையும் சுட்டலாம். இவர் நால்வகைப் பாக்களைப் பாடுவதில் வல்லவர். சித்திரக்கவி என்னும் மிறைக்கவி என்பது இவருக்கு இயல்பாக அமைவது. தலபுராணங்களிலும் இவ்வரிய கவிகளை அமைத்து இவர் பாடுவர். இவர் நாட்டுப் படலம், நகரப் படலங்களை அமைக்கும் போது மிக அரிய உண்மைகளை அள்ளித் தெளிப்பவர் என்றும் புகழ் பெற்றவர். திருக்குடந்தைப் புராணத்திலே திருநாட்டுப் படலத்தில் உழவர்களின் சிறப்பைக் கூறவந்த இவர் அவ்வுழவர்கள் நிலத்தில் வடக்கும் தெற்கும் மேற்கும் கிழக்கும் எனத் திசை மாறி மாறி உழுவது, ஒரு புலவர் சித்திரக்கவி எழுதி அதை மேலும் கீழும் முன்னும் பின்னுமாக வாசித்திடுவது போல இருப்பதாகக் கூறுகிறார்.

"எண்ணும் புலவர் மிறைக்கவிஒன்று எழுதி வாசித் திடுவதுஎன
நண்ணும் அலம்கீழ்த் திசைச்செலுத்தி உடனே நடத்திக் குடதிசையும்
அண்ணும் வடக்கில் செலுத்தியுடன் தெற்கு நடத்தி அயர்வின்றி
விண்ணும் புகழத் தொழில்செய்வார் விருப்பிற் கள்ளுண்டு எழுகளமர்".

என இவ்வாறு அமையும் பல அறிய உவமைகள் குறிப்பிடத்தக்கன.

## கையெழுத்து-உவமை

பழைய ஏட்டுச் சுவடிகளைப் பார்த்தால் அதில் எழுத்துக்கள் ஒன்றோடொன்று படாமல் வரி கோணாமல் எழுதியிருப்பதைக் காணலாம். அங்ஙனம் அமைந்த எழுத்துக்களைப் பார்த்தும் எழுதியும் வந்த கச்சியப்ப முனிவர் தணிகைப்புராணத்தில் எழுத்துக்களின் ஒழுங்கான வரிசையை ஒரு பெரிய நகரத்தின் தெருவிலுள்ள மாடவரிசைக்கு உவமையாகக் கூறியிருக்கின்றார்.

"பொறித்த சீரெழுத் தொழுக்கெனப் பொற்ற மாடங்கள்
செறித்த வார்நிரை வீதியிற் சிலவளம் மொழிந்தாம்"

ஒவ்வோரெழுத்தும் தத்தமக்குரிய தனியமைப்போடு வரிசை வரிசை யாக அமைந்திருந்ததைப் போல மடங்களும் தத்தமக்குரிய தனியலங்கா ரங்களோடு வரிசையாக விளங்கின. பல எழுத்துக்கள் சேர்ந்து பக்கமும், பல பக்கங்கள் சேர்ந்து நூலும் ஆவது போலப பல வீடுகள்

வீதிகளாகவும், பல வீதிகள் நகரப் பிரிவுகளாகவும், பல பிரிவுகள் ஒரு பெரிய நகரமாகவும் அமைந்தனவென்ற விரிவும் அந்த உபமானத்தாற் கொள்ளக் கிடக்கின்றது என்பர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள்[1].

இதே போன்று மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள் தம் மாயூரப் புராணத்தில் நைமிசவனத்தை நம் தமிழ்மொழி நெடுங்கணக்குக்கு ஒப்பிடுவதைக் காணலாம்.

"கோடு கொண்டன பல்லகால் கொண்டன பல்ல
கூடு புள்ளிகள் கொண்டன பல்லமேல் விலங்கும்
பாடு கொண்டன பல்கீழ் விலங்குவ பல்ல
நீடு மின்னதால் நெடுங்கணக் கொன்றுகைய மின்றே".

கோடு, கால், புள்ளி, விலங்கு என்னும் எழுத்தின் உறுப்புக்களின் பெயர்களால் மரங்களின் உறுப்புக்களும் குறிக்கப்படும். மரங்களும் கோடுடையன; கோடென்பது கொம்பிற்கும் பெயர். மரங்களிலும் கால்கள் இருக்கின்றன; அடிமரத்தைக் காலென்று சொல்வது வழக்கம். புள்ளியுடைய மரங்கள் இருக்கின்றன. மேலே விலங்கும் தன்மையின; கீழே விலங்கும் தோற்றத்தையுடையன. விலங்குதல்-கோணுதல், வளைதல். இவற்றால் அவ்வனம் நெடுங்கணக்கென்று கூறத் தகுமென்கின்றார். இவ்வாறு அமையும் உவமைச் சிறப்புகள் பல ஆழ்ந்து படித்தின்புறத்தக்கன.

## நைமிசாரணியச் சருக்கம்

புராணப் பகுதியின் தொடக்கமாக அமைவது இச்சருக்கம். நைமிசாரணியம் என்னும் வனப்பரப்பில் முனிவர்கள் கூடியிருந்து புராணம் கேட்பர் என்பதாக எல்லாப் புராணங்களும் கூறுகின்றன. அதற்கேற்ப அந்நைமிசாரணிய அமைப்பையும் வளத்தையும் இலக்கிய நயத்தோடு விளக்குவதையும் பல நூல்களில் காணலாம்.

## நைமிசாரணியக் காட்சி-புராணங்கள் முழக்கம்

நைமிசாரணியத்தைக் காட்சிப்படுத்தும் திருப்பரங்கிரிப் புராண ஆசிரியர், அங்கேயிருக்கும் இயற்கை வனப்பையெல்லாம் 'நைமிசாரணியச் சிறப்பு' என்னும் பகுதியில் இருபத்திரண்டு பாடல் களில் விளக்கக் காணலாம்.

கமுகு முதலிய மரங்கள் நெருங்கிய சோலையான அந் நைமிசாரணியத்தில் எப்பொழுதும் சுவையாக அனுபவிக்கப்படும் வேதங்கள் முழக்கமும், சிவபிரானே பரம்பொருளென்று விளக்கு கின்ற சிவாகம முழக்கமும், பிறப்புத்துயரைப் போக்குகின்ற புராணங்கள் படிக்கும் முழக்கமும் கடலின் முழக்கத்தையொத்து ஒலித்துக் கொண்டிருக்கும் என்பர்.

"சுவைதி ளைத்திடு மாமறைச் சும்மையுங் கடவுள்
சிவமெ னக்கிளை ராகமந் தெரித்தகம் பலையும்

1. நல்லுரைக் கோவை, முதற் பாகம், பக். 171.

பலவ றுத்திடு புராணநூல் பகுத்திடு மொலிபு
நூலை றங்கட லொலிதரு நைமிசா ரணியம்'. (35)

எனவரும் இப்பாடலில், புராண நூல்கள் பிறப்பறுக்கும் பெருநூல்கள் என்றே போற்றுவர்.. இப்புராணங்களைச் சொல்லும் சூதமுனிவர் பலவாறு போற்றப் பெறுகிறார்.

## ரோமஹர்ஷனர்-சூதமுனிவர்

புராணங்கள் கேட்கும்போது உடல் சிலிர்ப்பதால் சூதமுனிவரை 'ரோமஹர்ஷனர்' என்பர். 'நந்தல் இல்லா வியாசமுனி புராணம் நினக்கு நவில்போதில்-சிந்தை மகிழ்ந்து மயிர்பொடிப்ப அதன்பேர் நினக்குச் சேர்த்தினனால்' என்பது கூர்ம புராணம் பூர்வ காண்டம்.

சிவபிரானைத் தியானித்துச் சூதமுனிவர் புராணங் கூறத் தொடங்கிய போது உடலில் புளகம் உண்டாயிற்று என்பதைக் காஞ்சிப் புராணத்தில் காணலாம் (கம்பர் புராணம்).

"என்று கூறலுஞ் சூதமா முனிவனாங் கெண்ணி
வென்றி சேர்தரு முரோமங்கள் பொடித்திட விழிநீர்
சென்று மார்பிணி லொழுகிட வுள்ளியே சிவனை
யொன்று காதலில் முனிவரை நோக்கியே யுரைப்பான்".
(32)

"விழிபுனல் சொரிதர விதிர்வி திர்ப்புறா
மொழிதடு மாறிட முகிழ்ப்பரோ மங்கள்
எழுதரு முவகையி னெய்தியா னந்தத்
தழிவுறு பரவச னாகி விம்மியே"
(43)

எனச் சூதமுனிவர்-புராணம் கூறும்போது அடைந்த மெய்ப்பாட்டை கூறுவர். இவ்வாறு சூதமுனிவர் மிக்க உணர்ச்சிப் பெருக்கோடும் உள்ளன்போடும் கூறியதே இப்புராணம் என்னுமிடத்துப் படிப்போரிடையே இயல்பாகவே ஒரு பற்று உண்டாவது இயற்கை.

## தலமரமும் ஊர்ப்பெயரும்

சூதமுனிவர் கூறுவதாகச் சொல்லப் பெறும் பகுதிகள் பல குறிப்பிடத்தக்கன. ஒவ்வொரு தலத்திற்கும் ஒவ்வொரு மரம் புனிதமாகக் கருதப்படுகிறது. ஒருகாலத்தில் இவ்வகை மரம் அல்லது செடி மிகுதியாக இருந்த இடங்கள் பல இம்மரப் பெயராலேயே வழங்கப்பெற்றதை அறிகிறோம். பின்பு அவையே தலமரமாக வைத்து வழிபடவும், இறைவன் அம்மரம் அல்லது செடியின் அருகே இருந்து அருளுகிறான் என்ற மரபும் தோன்றலாயிற்று.

## தலவிருட்சங்கள் தோன்றிய வரலாறு

திருத்தருப்பூண்டி மான்மியத்தில், அத்தல இறைவனான சிவபெருமான் வில்வ விருட்சத்தினடியில் தோன்றியருளினார் என்று சூதமுனிவர் கூறினார். அதுகேட்ட நைமிசாரணிய முனிவர்கள், அவ்விருட்சம் தோன்றிய வரலாற்றைக் கேட்கின்றனர். அப்போது

சூதமுனிவர் தல விருட்சங்கள் தோன்றிய வரலாற்றினைப் பின் வருமாறு கூறுகிறார்.

"பூர்வ காலத்தில் திருப்பாற்கடல் கடையப் பட்டபொழுது அதிலுண்டான அமுத திவலைகள் பூமியிற் சிதறின. அதனாற் தோன்றிய கற்பக விருட்சங்களே தல விருட்சங்கள். திருப்பாற்கடலில் விடம் தோன்றியதை நீலகண்டர் உண்டபின்பு, பாற்கடலில் மாயையும், கற்பக விருட்சமும், காமதேனுவும், பாஞ்சசந்நியமும், கவுத்துவமணியும் உண்டாயின. தாரை, சந்திரன், ஐராவதம் இவையும் உண்டாயின. அதன்பின் மகாலக்குமி தோன்றினாள். அக்கடலை மேலும் கடைந்தபொழுது அமுதம் திரண்டது. சுஷேணன், வாலி என்னும் இருவர் கடந்த வேகத்தினால் அமுததிவலைகள் பூமியிலும் மலைகளிலும் சிதறின. அப்படிச் சிதறின ஒவ்வொரு துளியும் ஒவ்வொரு விருட்சமாயிற்று. அவ்வாறான விருட்சங்கள் அரசு, வில்வம், விளா, நாவல், புன்னை, மா, பலா, வன்னி, சம்பகம், கதம்பம், அகில், சந்தனம், பாடலி, கரண்டம், கோவிதாரம், வேம்பு, நெல்லி முதலியனவாம். இவ்விருட்சங்களில் வில்வம் விசேடமானதால் பரமசிவம் அவ்விருட்சத்தினடியில் தோன்றினார்"[1] என்று கூறும் பகுதிகள் குறிப்பிடத்தக்கன.

தலவிருட்சங்கள் அனைத்தும் நோய் நீக்கும் மூலிகைகளாக இருப்பதும், இவை மக்களால் பெரிதும் போற்றப் பெறுவதும், இவை அமுதத்திலிருந்து தோன்றியவை என்பதற்கு மிகவும் பொருந்துவதாக உள்ளது.

## தலம், தீர்த்தம், மூர்த்திச் சிறப்புரைத்தல்

சூதமுனிவர் கூறுவதாக அமையும் பகுதிகளில் தலமகிமை, தீர்த்தமகிமை, மூர்த்திமகிமை ஆகியன தனித்தனிச் சருக்கங்களாக அமைப்பதைப் பெரும்பாலான தலபுராணங்களில் காணலாம். இவை அந்தந்த தலத்திற்கே உரிய பல சிறப்புக்களை எடுத்துரைப்பனவாகும்.

## தலவரலாற்றுக் கதைகள்

தலத்தில் வந்து வழிபட்டவர்கள், தீர்த்தங்களில் நீராடிப் பேறு பெற்றவர்கள், மூர்த்திகளை நிறுவி பூசித்தவர்கள் ஆகியோரைப்பற்றிய வரலாறுகளையெல்லாம் கதைப்போக்கில் தனித்தனி படலமாகவும், சருக்கமாகவும், அத்தியாயமாகவும் கூறுவது தலபுராணத்தின் பெரும் பகுதியாக அமைகின்றது. தலச் சிறப்புக்கு இத்தல வரலாற்றுக் கதைகளே அடிப்படையாக அமைகின்றன.

பிற காப்பியங்களைப் போல ஒரே கதையை மையமாகக் கொள்ளாமல், பல்வேறு கதைகளை ஒரே நூலில் கூறுவதே தல புராணங்களின் தனித் தன்மையாகும். இவற்றுள், வரலாற்றுக்கதைகள், இதிகாசக்கதைகள், புராணக்கதைகள் பல பல்வேறு வகைகளில் அமையக் காணலாம்.

வானவர், முனிவர், அரசர், அசுரர், கடவுளர், அடியார், விலங்குகள், பறவைகள் என இவ்வாறு பலர் வந்து பூசித்துப் பேறு

1. திருத்தருப்பூண்டி மான்மியம், க்ஷேத்திர உற்பத்தி, பக். 7-10.

பெற்றகதைகளை இத்தல புராணங்கள் கூறுகின்றன. இவற்றுள் சில வழிவழியாகச் சொல்லி வருபவை. சில அத்தலத்தில் உண்மையாகவே நிகழ்ந்தவை எனப் பலவாறு அமைகின்றன. இவை தனித்தனி ஆய்வுக்குரியவை.

பல நாடோடிக் கதைகளை உள்ளடக்கிப் புலவர்களால் புனைந்துரைக்கப் பெற்றவை இப்புராணங்கள் என்று கூறுவாரும் உளர்.

## வேறு தலபுராணக் கதைகளைக் கூறுதல்

ஒரு தலபுராணத்தில் பல கதைகள் அமைவது இயல்பு. ஆயின், சில கதைகள் பல தலங்களுக்குப் பொதுவாக அமைவதும், வேறு தலபுராணக் கதைகளை ஒரு தலபுராணத்தில் அங்கங்கே குறிப்பிடுவதையும் காண்கின்றோம். காட்டாக, வீரவனப்புராணத்தின் ஆசிரியர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் வேறு தலபுராணங்களில் அரியனவற்றை அங்கங்கே எடுத்துக் கூறுவர்.

கண்டதேவிப் புராணத்துள் வரும் பொன்மாரிபெய்த வரலாற்றை இப்புராணத்தின் நைமிசவனப் படலத்தில் குறிப்பர்.

சிவபெருமான் காமதேனுவின் கன்றினுடைய குளம்படியின் சுவட்டைத் தாங்கிய தலம் திருப்பேரூர். இவ்வரலாறு திருப்பேரூர்ப் புராணத்தில் குமுகன் குளப்புச் சுவடுற்ற படலத்தில் கூறப்பெறும். இதை இவர், இந்த வீரவனப்புராணத்தில் வீரசேகரர் திருமுடித்தழும்புற்ற படலத்தில் அமைப்பர்.

திருப்பெருந்துறையில் ஆன்மநாதக் கடவுளைப் பூசிப்பவர்கள் முந்நூறு மறையோர். இவர்கள் தில்லை மூவாயிரவர்களைப் போன்றவர்கள். இவர்தம் வரலாற்றைத் திருப்பெருந்துறைப் புராணத்தில் பெருந்துறைப் படலத்தில் கூறக் காணலாம். இம்முந்நூற்று வரை வீரவனப் புராணத்தில் பெருமான் பொரிசோறு நிவேதனஞ் செய்த படலத்தில் கூறுவர் இந்நூலாசிரியர்.

இவ்வாறு அமையும் பகுதிகள் பலவும் வெவ்வேறு தலபுராணங்களை ஒப்பிட்டு ஆராயும்போது புலனாகும்.

## கதைகளில் ஊர்ப்பெயர்க் காரணங்கள் கூறு

குறிப்பிட்ட தலங்களுக்குரிய பெயர்க்காரணங்கள் பற்றி ஒவ்வொரு தலபுராணமும் விளக்கக் காணலாம். இது அத்தலபுராணம் கூறும் இறைவன், இறைவி இவர்களுக்கேற்பவும் பொருத்தமாக அமைத்துப்பாடுவதே மரபாக உள்ளது. காட்டாக, திருமயிலை என்னும் மயிலாப்பூரின் பெயர்க் காரணத்தைச் சைவ புராணம் ஒரு விதமாகவும், வைணவ புராணம் ஒரு விதமாகவும் கூறுவது நோக்கத்தக்கதாகும்.

அமுர்தலிங்கத் தம்பிரான் இயற்றிய திருமயிலைத் தலபுராணம் திருமயிலைக்குரிய பெயர்க்காரணத்தைப் பின்வருமாறு கூறுகிறது.

ஒரு காலத்தில் சிவபெருமான், உமையம்மையாருடன் திருக்கைலாயத்தில் வீற்றிருந்தார். அப்போது அம்மையாரின் வேண்டுகோளுக்கிணங்க ஐந்தெழுத்தின் பெருமையையும், திருநீற்றின் பெருமையையும் பற்றிப் பெருமான் விளக்கம் செய்து கொண்டிருக்கும்

போது ஒரு மயில் தன் தோகையை விரித்தாடியது. அதன் அழகை உற்று நோக்கிய அம்மையார்' அதன் ஆட்டத்தில் தமது கவனத்தைச் செலுத்தினார். இதைக் கண்ணுற்ற சிவபெருமானன், 'நீ பூதலத்தில் மயில் உருப்பெற்றிடுவாய்' என்பதாக ஆணையிட்டார். இந்நிலைக்கு வருந்திய தேவியார், இத்தகு தலத்தை வேண்டியபோது இறைவன் தொண்டை நாட்டிற்குச் செல்லுமாறு பணித்தார். அவ்வாறே இறைவியும் இப்போதுள்ள மயிலை நகரில் புன்னை மரத்தடியின் கீழ்ச் சிவலிங்கம் அமைத்துப் பூசித்து வந்தார். இறைவியின் தவத்துக்கு மெச்சிய சிவபெருமான் தேவியின் முன் தோன்றி, 'மயிலாய் இருந்த பழி உன்னை விட்டகன்றது. இனிக் கற்பகவல்லி என்பதான பெயர் உனக்காகுக' என வரமும் ஈந்தனர். தேவியாரும் பரமனை வணங்கி, இத்தலத்திற்கு 'மயிலை' என்னும் பெயர் ஓங்க வேண்டும் என்றும், இத்தலத்தை வழிபடுவோருக்கு அருள்புரிய வேண்டுமென்றும் வேண்டிக் கொண்டார். அதன்படியே இறைவனும் அருள் புரிந்தார்." (திருமயிலைத் தலபுராணம், சருக்கங்கள் 6-7) இதன் காரணமாகத்தான் இவ்வூர் மயிலை எனப் பெயர் பெற்றதாக இப்புராணம் கூறுகிறது.

> 'புன்னாகவனத் தெழில்சேர் கயிலை மலையுமை மயிலாய்ப் பூசை செய்யும்
> நன்னா மத்தான் மயிலையென விளங்கு மூதூர்'
>
> (நகரச் சருக்கம், பா. 2)

எனவரும் பாடலடிகளும் இதனை விளக்கும்.

இதையே வைணவ புராணம் ஒன்று வேறுவிதமாக விளக்கு வதையும் இவண் ஒப்பு நோக்கலாம்.

ஸ்ரீகருட புராணத்தில் பிருந்தாரண்ய க்ஷேத்திர மகாத்மியத்தின் இரண்டாம் அத்தியாயத்தில் மயூரபுரி மகாத்மியம் விளக்கப்படுகின்றது. ஸ்கந்தனுடைய வாகனமான மயில், தான் ஸ்கந்தனைச் சுமப்பது குறித்து ஒரு சமயம் கர்வமடைந்தது. எனவே ஸ்கந்தன் அதைத் துரத்தி விட்டான். அந்த மயில் இந்த இடத்தில் இருந்து பிரம்மாவைக் குறித்துத் தவம் இருந்து அவனுடைய அருளினால் மீண்டும் தன் பதவியைப் பெற்றதினால் அன்று முதல் இந்தத் தலம் மயூரபுரி, மயூரநகரி என்று பெயர் பெற்று விளங்கியது. நாளடைவில் அது திரிந்து 'மயிலை' என்றும் 'மயிலாப்பூர்' என்றும் வழங்கப்பட்டு வருகிறது என்றும் அங்குப் பிறந்த திருமகளுக்கு மயூரவல்லித் தாயார் என்றும் பெயரிடப்பட்டது என்றும் திரு. சி. ஆர். ஸ்ரீநிவாசய்யங்கார் தாம் இயற்றிய பேயாழ்வார் கோயில் தலபுராணத்தில் (ப. 142) குறிப்பிடக் காணலாம்.

இவ்வாறு சைவ, வைணவ மரபுக்கேற்பக் கதைகளை ஆசிரியர்கள் அமைத்துக் கூறியதாகக் கொள்ளலாம்.

மயிலாப்பு என்பதற்குப் பொருள் 'மயிலாதல்' என்பதாகும். இறைவி (உமை) மயிலாக ஆகிய செயல் காரணமாகவே 'மயிலாப்பு' என்னும் பெயர் பெற்றது என்பர்.[1]

---

1. அ. மு. பரமசிவானந்தம், சமயக் கலைமலர், திருமயிலைக் கபாலீச்சரம், சென்னை, 1965, ப. 103.

மயில்களின் ஆரவாரத்தினால் இவ்வூருக்கு மயில் ஆர்ப்பு ஊர் என்று பெயர் ஏற்பட்டது என்றும், இதுவே நாளடைவில் மயிலாப்பூர் என்று வழங்கப்பட்டது என்றும் கூறுவர்.[1]

மேற்கூறிய இரண்டு காரணங்களுமே பொருத்தமுடையனவாகத் தோன்றுகின்றன. புராண காலத்தில் இறைவியே இத்தலத்தில் மயிலாக அவதரித்ததினால் பிற்காலத்தில் இத்தலத்திலுள்ளோர் மயில்களை மிகுதியாக வளர்த்தும் பூசித்தும் வழிபட்டிருக்கலாம். அதனால் இத்தலத்தில் மயில்களின் ஆர்ப்புக் காரணமாகவும் இவ்வாறு பெயர் பெற்றிருக்கலாம். எப்படியும் மயில்கள் இங்கு தங்கியதற்கான மூலக் கருத்தினை புராண வரலாறுகளைத் தலபுராணக் கதைகளே அளிக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## ஒரே தலத்தின் சிறப்பைப் பலதலபுராணங்களிலும் எடுத்துக் கூறல்

பொதுவாக, சிறப்புடைய தலங்களின் பெருமைகளை எல்லாத் தலபுராணங்களும் அங்கங்கே குறிப்பிடக் காணலாம். குறிப்பாகச் சோழ நாடு, பாண்டிய நாடு என்று வரும்பொழுது, ஆங்கு எழுந்துள்ள எல்லாத் தலபுராணங்களும் குறிப்பிட்டதொரு தலத்தைச் சிறப்பித்துக் கூறுவதையும் காண்கின்றோம். அத்தலம் ஆண்டாண்டுக் காலமாகப் பெற்ற சிறப்பும், மக்கள் பெரிதும் போற்றி வணங்குவதுமாக இருப்பின் அது தவறாது குறிப்பிடப் பெற வேண்டுமென்பதை இப்புராண ஆசிரியர்தம் கொள்கையாகக் கொண்டிருந்தனர் என்றே தெரிகின்றது. வெகுவாகப் புகழ்பெற்ற திருத்தலங்கள் சில எல்லாப் புராணங்களிலும் குறிப்பிடப் பெறும் சிறப்பினைப் பெற்றுள்ளன. காட்டாக, திருக்காளத்திக்கு இரண்டு சிறந்த தலபுராணங்கள் உள்ளன. இருப்பினும், இத்தலச் சிறப்பை வெவ்வேறு தலபுராணங்கள் வெவ்வேறு படலங்களில் பலவாறாகப் போற்றியுரைப்பதைக் காணலாம்.

திருக்காளத்தியின் சிறப்பைப் பற்றித் தேவாரப் பதிகங்களிலும் பெரியபுராணம், கந்தபுராணம், சூத சங்கிதை போன்ற பல நூல்களிலும் பரக்கக் கூறக் காணலாம். இத்தலத்தைப் பற்றி வெவ்வேறு தலபுராணங்களில் குறிப்பிடும் பகுதிகள் அறிந்தின்புறத் தக்கன. அவை வருமாறு :

| | |
|---|---|
| கோயிற் புராணம்– | இரணியவன்மச் சருக்கம், 17 |
| சிதம்பர புராணம் | திருச்சிற்றம்பலச் சருக்கம், 75 |
| திருவெண்காட்டுப் புராணம் | சுவேதவனச் சருக்கம் |
| சீகாழித் தலபுராணம்– | சண்பையானவத்தியாயம், 27 |
| புள்ளிருக்கு வேளூர்ப்புராணம் | —வாலாம்பிகை அருச்சனைசெய் சருக்கம், 11, 12 |
| திருவானொளி புற்றூர்ப்புராணம் | வானொளிபுற்றூர்ப் படலம், 8 |

1 பாலூர் கண்ணப்ப முதலியார், சமயக் கலைமலர், திருமயிலைக் கபாலீச்சரம் சென்னை, 1965, ப 121

| | | |
|---|---|---|
| ஆற்றூர்ப் புராணம் | - | தலவிசேடம் தேவிக்குணர்த்திய படலம், 38 |
| உறையூர்ப் புராணம் | - | உதங்கமுனி பொலிவடைந்த படலம், 81, வேடன் முத்தியடைந்த படலம், 64 |
| செவ்வந்திப் புராணம் | - | திருமலைச் சருக்கம், 47, 48 |
| திருநல்லூர்ப் புராணம் | - | சத்தசாகரம் வரவழைத்த சருக்கம், 19 கோவிதாரத்துவசச் சருக்கம், 6 |
| திருக்குடந்தைப் புராணம் | - | தலவிசேடப் படலம், 2 |
| மருதவனப் புராணம் | - | திருநாட்டுச் சிறப்பு, 6 தல விசேடச்சுருக்கம், 12, 13 |
| திருத்துருத்திப் புராணம் | - | சுந்தரதீர்த்தப் படலம், 180 |
| மாயூரப் புராணம் | - | திலீபன் முத்தியடைந்த படலம், 2 |
| திருவம்பர்ப் புராணம் | - | நந்தன் வழிபடு படலம், 51 |
| திருநாகைக்காரோணப் புராணம் | - | தலவிசேடப் படலம், 24 நரபாகன் முத்தியடைந்த படலம், 9 |
| திருவாரூர்ப் புராணம் | - | ஆனந்தேச்சுரச் சருக்கம், 29 |
| திருவாரூர்த் தியாகராசலீலை | - | திருநாட்டுப் படலம், 28 |
| வேதாரணிய புராணம் (அகோர முனிவர்) | - | வரன்முறைச் சருக்கம், 65 |
| வேதாரணிய புராணம் (பரஞ்சோதி முனிவர்) | - | தலவிசிட்டச் சருக்கம், 13 |
| திருவிளையாடற் புராணம் | - | தல விசேடம், 3, 4, தருமிக்குப் பொற்கிழியளித்த படலம், 105 கீரனைக் கரையேற்றிய படலம், 13, 14 அருச்சனைப் படலம், 13 |
| திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் | - | கடவுள் வாழ்த்து, 11 கிழியறுத்த திருவிளையாடல், 29 நக்கீரனைக் கரையேற்றின திருவிளையாடல், 5 |
| கடம்பவன புராணம் | - | வேதாகமங்கள் நீபவனமான சருக்கம், 37, 38 தேவியறம் வளர்த்த அத்தியாயம், 14 இலீலா சங்கிரக வத்தியாயம், 82, 83 |
| திருவாப்பனூர்ப் புராணம் | - | அரிச்சந்திரன் தீர்த்த யாத்திரைச் சருக்கம், 17 |

| | | |
|---|---|---|
| திருப்பூவணப் புராணம் | - | சுச்சோதி தீர்த்த யாத்திரைச் சருக்கம், 22 |
| திருக்குற்றாலத் தலபுராணம் | - | அவையடக்கம், திருக்குற்றாலத் தல மகிமைச் சருக்கம், திருநடச் சருக்கம் 30 |
| பாவநாசத் தலபுராணம் | - | சிவதல விசிட்டச் சருக்கம், 6 |
| திருப்பெருந்துறைப் புராணம் | - | திருநாட்டுப் படலம், 4 நைமிச முனிவர் பெருந்துறையடைந்து பூசித்த படலம், 8 |
| வீரவனப் புராணம் | - | வீரசேகரர் திருமுடித்தழும்புற்ற படலம், 33, 34 |
| வீரைத் தலபுராணம் | - | சித்திரசேனச் சருக்கம், 14 |
| அருணாசலப் புராணம் | - | திருநகரச் சருக்கம், 8, 15 |
| வில்லைப் புராணம் | - | சகலாங்கசௌந்தரி சருக்கம், 46, 47, 57 |
| காஞ்சிப்புராணம் | - | திருநாட்டுப் படலம், 50 தல விசேடப் படலம், 16, 17 |
| திருக்கூவப் புராணம் | - | திருத்தலச் சருக்கம், 58 |
| திருவாலங்காட்டுப்புராணம் | - | கந்தர் உபதேசச் சருக்கம், 38 |
| திருப்பாதூர்ப் புராணம் | - | நாட்டுச் சிறப்பு, 1 |
| திருவொற்றியூர்ப் புராணம் | - | திருத்தலச் சருக்கம், 15 |
| திருவேற்காட்டுப் புராணம் | - | வேதவனச் சருக்கம், 50 |
| திருக்கழுக்குன்றப்புராணம் | - | நாட்டுச் சருக்கம், 5, 6, 9 உருத்திர கோடிச் சருக்கம் தீர்த்தச் சருக்கம், 10 தலவிசிட்டச் சருக்கம், 4, 5, |

இவ்வாறு பல தலபுராணங்களிலும் குறிக்கப்பெற்ற பெருஞ் சிறப்புடையது திருக்காளத்தி ஆகும். இவ்வாறு அமையும் பிற தலங்களின் சிறப்பை வெவ்வேறு தலபுராணங்களிலும் காணலாம்.

## வருவது உரைக்கும் வழக்குகள் சில

இந்த இருபதாம் நூற்றாண்டில் எத்தனையோ புதிய புதிய வழக்குகள் மக்கள் வாழ்க்கையில் இடம் பெறத்தொடங்குகின்றன. இவற்றுள் பலவற்றைப் புராண ஆசிரியர் நேரில் கண்டது போல நான்கு நூற்றாண்டுகளுக்கு முன்னே பாடியிருப்பது பெருவியப்புக் குரியது.

இக்காலக் கொடுமைகள் சிலவற்றைப் புராணங்கள், கலியுக தருமம் அல்லது கலியுகத்தியற்கை என்று கூறுகின்றன. சென்ற உலக யுத்தத்தின்போது பெரு நகரங்களில் மண்ணுக்குக் கீழ் நிலவறைகள்

கட்டி, விமானக் குண்டுவீச்சிலிருந்து தப்ப மக்கள் அங்குப் பல மணிநேரம் தங்கி வாழ நேர்ந்திருக்கிறது. ஈரான், ஈராக் போர், வியட்நாம் போர், ஈழம்போர் போன்ற அண்மைக்காலப் போர்களிலும் இத்தகைய பதுங்கு குழிகள் அமைக்கப் பெற்றதை அறிவோம். இதை 'வங்குபுக்கு வாழ்தல்' என்று ஒரு தலபுராண ஆசிரியர் கூறுகிறார்.

திருவாரூர்ப்புராணம் பாடிய அளகைச் சம்பந்தமுனிவர் தம் நூலில் கலியுகச் சருக்கத்தில் (57) மக்கள் 'வலியும் குன்றித்-தரைபடு வங்குபுக்குச் சார்ந்து புள் விலங்கு பாம்பங்கு-இரையெனக் கவர மாழ்கி இன்னுயிரிழப்பர் யாரும்' என்று கூறுவர். இருபதாம் நூற்றாண்டில் அறிவியல் முதிர்ச்சியினால் பேரரசுகள் அணுக் குண்டும் பிறவும் செய்து மக்களை இலட்சக்கணக்கில் அழிக்கத் துணியவும், குண்டுக்குப் பயந்து நிலவறையிலுள்ள 'வங்கு' களில் ஒளிந்து உயிர் வாழவும் நேர்ந்துள்ள நிலையை எண்ணிப் பார்க்கும் போது, இந்நூலாசிரியர் வருவதுவரைக்கும் ஞானக் கண்ணோடு பதினாறாம் நூற்றாண்டிலேயே இவ்விதம் கூறினாரோ என்று வியக்கத் தோன்றுகிறது.

## கலிகாலக் கொடுமைகள்

அளகைச் சம்பந்த முனிவர் இயற்றிய திருவாரூர்ப் புராணத்துள் ஒன்று 109 ஆம் சருக்கமாகிய கலியுகச் சருக்கம் என்பது. இது 75 பாடல்கள் கொண்டது. சனற்குமாரன் முதலான முனிவர் கலியின் கொடுமைகளுக்கு அஞ்சிப் பிரமன் சொல்லியபடி திருவாரூரில் வந்து பூசித்துத் தவம் புரிந்தார்கள் என்பது இங்குச் சொல்லப்படுகிறது. முதல் மூன்று யுகங்களிலும் வாழ்ந்த மக்களின் சிறப்பையும் தருமத்தின் சிறப்பையும் சொல்லிய பிறகு, கலியுகத்தில் மக்களும் இறக்கிறார்கள், தருமங்களும் அழிகின்றன என்று நூல் விரித்துச் சொல்லுகிறது. மக்களுக்கு வயது பல ஆயிரம் என்று இருந்த நிலை மாறி, நூறு வருடமாகக் குறையும்; பெரியோரிடத்து மரியாதையும் தெய்வ பக்தியும் குன்றும்; தரும வழி நிற்பவரே துன்பமடைவர்; மணம் செய்யும் கருமம் அகலும். இளம் பருவத்திலேயே பெண்டிர் கருவுயிர்ப்பார்கள் என்பதான செய்திகள் இப்பகுதியில் கூறக்காணலாம். காட்டாக,

"இந்தவெங் கலியுகத் தியற்கையை யிசைப்ப தென்னே?
தந்தைதாய் மாற்றங் கேளார், அன்னவர் தாளிற் றாழார்
மைந்தர்தாம் மூத்தோர் தம்மை வணங்கிடார் இளையர் வாட்கண்
பைந்தொடி மகளிர் கேள்வர் பணிந்தவ ருரையின் நில்லார்".

"தேசிகர்ப் போற்றல் செய்யார், சிவபிரான் செம்பொற் றாள்கள்
பூசனை புரிதல் செய்யார், கண்டிகை புனைதல் செய்யார்,
ஆசிலந் நீறணிதல் செய்யார் , அஞ்செழுத் தியம்பல் செய்யார்,
ஈசனா லயம்வ லம்கொண் டிறைஞ்சுதல் செய்யார் என்றும்".

"பாணர் மங்கலஞ் செயாமு னிளஞ்சிறு மகளிர் காம
வேணவா வுற்று மாழ்கி மெலிவர்பன் னிரண்டி யாண்டிற்
பூணிழை மங்கை மாதா புதல்வரைப் பெறுவர், பொய்தீர்
நாணமே யாதி நான்கினன் கொரீஇ நவையி னிற்பார்".

என இவ்வாறு விளக்கும் இந்நூலாசிரியர், நீதி குன்றாது வாழ்பவரே துன்புமடைவார்கள் என்றும், வீதியெல்லாம் கள்ளும் ஊனும் அட்டுகாய் கனிபோல விற்கும் என்றும் கூறுவர்.

"தருமமே பொருளென் றெண்ணிச் சத்தியந் தவறா தோம்பி
விரதமே பயின்று நித்தம் நியமங்கள் விதியிற் பேணி
அருள்புரிந் துதவி யாற்றி யனைவர்க்கு மிதமே செய்யும்
பெரியவர் தமக்கே துன்பம் பெரிதுவந் தடையு மன்றே".

"பூதல மெங்கும் நோயுங் காப்புமே பொருந்திக் கள்ளுண்
வீதிதோ றடகு காய்தீங் கனியென விற்கு மன்றே".

என அமையும் இத்தகைய கருத்துக்கள் இன்று நம் நாட்டினை நேரே கண்ணால் கண்டு பாடியதுபோல் அமைந்துள்ளன. இந்நூல் பாடிய காலம் 1592. அதாவது 400 ஆண்டுகளுக்கு முன் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

கலியுக மக்களின் இந்த இழிநிலையை எண்ணியே இத்தலபுராண ஆசிரியர்கள் தலவழிபாட்டின் சிறப்பைப் பல கதைகளால் மக்களுக்கு எடுத்துக்கூறி அவர்களை நல்வழிப்படுத்த முயன்றனர் எனலாம்.

மற்ற இலக்கியங்களைப் போன்றே இவையும் உவமை, சிலேடை, போன்ற நயங்களைப் பெற்று விளங்கினாலும், பொருள்நோக்கில் சமயக்கருத்துக்களுடன் அறக்கருத்துக்களை இணைத்து சிறந்த மக்கள் இலக்கியமாக அமைந்துள்ளமை அனைவரும் அறியத்தக்கதாகும்.

## நூற்பயன் கூறல்

தலபுராணங்களை மக்கள் அனைவருமே படித்தல் வேண்டும் என்பதே இந்நூலாசிரியரின் தலையாய கொள்கை. எனவே, இந்நூலைப் படிப்பதாலுண்டாகும் பயனை முதலிலும் இடையிலும் இறுதியிலும் தவறாது குறிப்பிடுவர். கடவுள் வணக்கம் கூறும் தொடக்கப் பகுதியிலேயே நூற்பயன் கூறுவது பல ஆசிரியர்களின் பழக்கமாக உள்ளது.

"திருவிளங் கியமா நிலந்தனிற் புகழ்சேர் செழித்திடு வயித்திய நாதன்
அருமையாந் தலநன் மகிமையைக் கேட்போர் அளப்பருஞ் செல்வரா குவர்மேல்
வரும்பெரும் பகையை வெல்குவர் கல்வி மகப்பெறு குவர்பிணி யெய்தார்
நிருமல னான சிவன்மலர்ப் பாத நிலைமைபெற் றினிதுவாழ்ந் திருப்பார்".

(புள்ளிருக்கு வேளூர்ப் புராணம், கடவுள் வணக்கம், பா. 16)

என இவ்வாறு நூலின் தொடக்கத்திலேயே கூறுவர். இந்நூலைப் படிப்போரும் கேட்போரும் செல்வம் பல பெற்று, பகைவரை வென்று, கல்வியில் மேம்பட்டு, மக்கட்பேறும் பெற்று, நோயற்ற வாழ்வு வாழ்குவர் என்று இம்மைப் பேறுகளையே குறிப்பிட்டுச் சொல்வதால் எல்லாத் தரப்பு மக்களும் இந்நூலைக் கேட்பதில் ஆர்வங் கொள்வர் என்பதே நூலாசிரியர் நோக்கமாகும்.

கமலை வைத்தியநாததேசிகர் தாம் பாடிய திருநல்லூர்ப் புராணத்தின் ஒவ்வொரு சருக்கத்தின் இறுதியிலும் 'இச்சருக்கத்தினைப் படிப்பவர், கேட்பவர், எழுதுநர், எழுதுவிப்போர் ஆகியோர் சிவன் பதத்தை அடைவர்' என்பதாக இறுதிப் பாடலை அமைத்திருப்பது ஒரு புதுமையாகும்.

## புராணம் கேட்ட பயன்-தலை எழுத்து நீங்கும்

"பழுதறச் செம்பு தீர்த்தம் படிந்துஅமு தேசன் தன்னைத்
தொழுதுநல் லஞ்செ ழுத்தும் சொல்லுதல் வல்லோர் தம்பால்
முழுதுற முண்ட கத்தோன் முண்டகத் தீமை யாக
எழுதிய எழுத்துஅ னைத்தும் இமைப்பினில் அழிவு மன்றே".

(தந்திவனப் புராணம், தலமகிமைச் சருக்கம், 99)

திருவானைக்காவிலுள்ள தீர்த்தமாடி, இறைவனைக் கண்டு, பஞ்சாட்சரம் செபித்ததும் பிரமன் எழுதிய தலைஎழுத்தாம் தீவினைப் பயன் உடனே நீங்கும் என்பர். முண்டகம்-தலை. முண்டகத்தோன்-பிரமன் என இவ்வாறு நூலினிடையே தலமகிமை கூறும் சருக்கங்களிலும் நூற்பயனைக் கூறுவர்.

## புராணங்கேட்கு மகிமைச் சருக்கம்

திருவாரூர்ப் புராணத்தின் இறுதிச் சருக்கமாகிய இதில் இப்புராணம் கேட்பதாலுண்டாகும் பயனைப் பதினான்கு பாடல்களில் கூறக் காணலாம். காட்டாகச் சில பாடல்கள் வருமாறு :

"ஆதலா லாரூர்க் காதையிற் சிலையா மறிந்தவா றறைந்தன மிப்பால்
ஏதமில் சிறப்பினிப் பெரும்பு ராணம் எழுதுவோ ரெழுதிடப் பணிப்போர்
ஓதுவோர் கேட்போ ரோதுவோர்க் குதவி யுகந்தினி தாற்றுவோ ரெய்துந்
தீதுதீர் பலனிற் சிறிதியா மெடுத்துச் செப்புதுஞ் செப்பருந் தவத்தீர்"

(5)

" பூதமோ ரைந்தும் விண்ணோர் தொகுதியும் புரைதீர் காட்சி
மாதவர் கணமு முய்ய வன்மீகத் தெழுந்த முக்கண்
ஆதிதன் சத்தி பீட மாகிய வாரூர்க் காதை
ஓதுமிப் புராண மோர்கா லோதிடி லுகந்து கேட்கில்".

(6)

"மணியினான் மந்தி ரத்தான் மருந்தினான் மாய்ந்தி டாத
பிணிகளு மாயு மாயாப் பெரும்புகழ் சிறப்பு வாய்மை
குணமிகு நெறிமெய்ஞ் ஞான குருமொழி யறமொ முக்கம்
உணர்வுசால் கல்வி செல்வம் ஒழிந்திடா வாயு ளுண்டாம்".

(7)

"தினற்பொருட் டுயிர்வதைத்த பாவமுஞ் சிதையும் வேறு
மனைப்பொருட் டார்வம் வைத்த பாவமு மடியுஞ் சொன்றி
புனற்பகர் பாவந் தானும் பொன்றிடு மகளின் வாசி
தனைப்பகர் பாவந் தானுந் தழற்படு பஞ்சின மாயும்"

(8)

"பரமனை வணங்கல் செய்யாப பாவமும் பரமற கணபாம
பெரியவர் தமையிகழ்ந்த பாவமும பீடு சானற
திருவெ ணீற ணிதல்செய்யாப பாவமுஞ் சிவன துணமை
அரியவஞ் செழுத்துக் கூறாப் பாவமு மகலு மம்மா".

(9)

*இவ்வாறு, இப்புராணம் மக்களுக்கு எவ்வெவ்வாறு நலம் பயக்கும் என்பதை மிகத் தெளிவாக உரைப்பதைத் தம் கடமையாகவே கருதுகின்றனர் இத்தலபுராண ஆசிரியர்கள்.*

## *புராணம் படிக்க வேண்டிய முறையைக் கூறல்*

*திருப்பரங்கிரிப்புராண ஆசிரியராகிய நிரம்ப அழகிய தேசிகர் தம் நூலிறுதியில் வாழ்த்துக் கூறுமிடத்துப் புராணம் படிக்க வேண்டிய முறையினையும் குறிப்பாகச் சுட்டுவர்.*

*இப்புராணத்தைச் சிவாலயத்திலாவது, பூக்கள் நிறைந்த வாசனை தங்கிய சோலையினிடத்தாவது, பிரகாசந்தங்கிய மடத்திலாவது, நதிக்கரையிலாவது, சுத்தமாகிய இடத்திலிருந்து படித்தவர்களும் அதை அன்புடன் கேட்போர்களும் அவரவர்கள் இச்சித்த தருமம், பொருள், இன்பங்களைப் பெற்று முடிவிலே வீடுபேறு அடைவார்கள் என்பர்.*

"திருப்பரங் கிரியின காதை சிவாலய மதனிற் பூவின
மருப்பொழி லதனிற சோதி மடத்தினி னதிதீ ரத்தில
உருப்பொலி தலத்தில் வைகி யுரைத்துளோர் விழைநது கேட்டோர்
விருப்பெழு பொருளை யெய்தி முடிவினில வீடு சேவார"

*என்பது பாடல்.*

*துறைசைப்புராணம் போன்ற பிற தலபுராண ஆசிரியர்களும் இவ்வாறே புராணம் படிக்க வேண்டிய முறையை மிகத் தெளிவாகவும் விரிவாகவும் எடுத்துரைக்கின்றனர்.*

## *வாழ்த்து*

*நூல் தொடங்கும் முன் வாழ்த்து கூறுவதும் நூலின் இறுதியில் வாழ்த்து கூறுவதும் தலபுராணங்களில் காணும் மங்கல மரபாகும். இவ்வாழ்த்துப் பாடல்கள் அனைத்தும் ஒரே வகையில் அமையினும் சில*

நூலாசிரியர்கள் தம் சமயத்திற்கேற்பவும், காலத்திற்கேற்பவும் மரபு வழுவாது இவற்றைப் பாடக் காணலாம்.

"வான்வளஞ் சுரந்து பெய்க மன்னவன் செங்கோல் வாழ்க
நான்மறை யவர்கள் வேள்வி நன்னெறி வழாது செய்க
நூன்முறை யுணர்ந்த கல்வி நுண்ணறி வுடையோர் சூழ்க
மேன்மையாஞ் சைவ மோங்கி விளங்குக வுலக மெல்லாம்".

(புள்ளிருக்கு வேளூர்ப்புராணம், கடவுள் வணக்கம், 15)

"வாழிமா மழைகள் வாழி வையமன் னுயிர்க ளெல்லாம்
வாழிமா மன்னர் செங்கோல் வாழிமா மறைகள் நாளும்
வாழிமா மூல நாதர் மகிமைசேர் புராண மென்றும்
வாழிய ரிந்நூல் கேட்டார் வகுத்துளார் வகுப்பித் தாரே".

(திருமூல நகரப் புராணம், பாயிரம், 7)

"வானம் வாழி பயிர்வாழி வளங்கள் சிறக்கப் பயன்சொரியும்
ஆனும் வாழி அறம்வாழி அறஞ்சேர் அரசும் நனிவாழி
தேனும் பாலும் எனச்சொல்லும் தெளிதீந் தமிழும் மிகவாழி
மானுந் துடியுங் கரத்தேந்தும் மழைபோற் களத்த னருளாலே".

(அரசிலிக்காதை, பாயிரம், 10)

என இவ்வாறு அமையும் வாழ்த்துப் பாடல்களில் மழையை வாழ்த்தாத புலவர்களே இல்லையெனலாம். உயிர்களின் நிலைபேற்றிற்கு அடிப்படையானது நீர். அந்நீரை வழங்குவது வானம். அவ்வானம் பெய்யாது உலகும் இல்லை மன்னரும் மக்களும் இல்லை. எனவே எல்லாக் கவிஞரும் முதலில் வானுக்கு வாழ்த்துப் பாடுகின்றனர். பிறகு நாடாளும் மன்னருக்கும், நான்மறைகள், வேதவேள்விகள், சைவ நெறிகள் இவை ஓங்குவதற்கும் வாழ்த்து கூறுவது மரபாக அமையக் காண்கிறோம்.

திருத்துடிசைப்புராணத்தில் வாழ்த்துச் சருக்கம் என்றே ஒரு சருக்கம் அமைகின்றது. அதில்,

"துடிசைநெடுங் கதையிதனைச் சொலக்கேட்போர் வாசிப்போர்
படியினுணர்ந் தெழுதிவைப்போர் பாடமுற்றோ ருரைபகர்வோர்
மிடிதவறும்படி துதித்தோர் மிகவாழி யகனுலகில்
வடிவுபெறு குலோத்துங்கன் வாழிசெங்கோல் வாழியவே".

என வரும் பாடல்கள் குறிப்பிடத்தக்கன.

இவ்வாறு தலபுராணம் சொல்லக் கேட்டோர், படிப்போர், ஏட்டில் எழுதிவைத்தோர், உரைபகர்வோர், துன்பம் நீங்கும்படி துதித்தோர் ஆகியோர் வாழ்க எனக் கூறுவது நூலாசிரியர் கடமையாக அமைகிறது. இதனால் இந்நூல்கள் பலரால் போற்றுப்பெற்றும் காக்கப்பெற்றும் வந்துள்ளன.

## பதிப்பித்தோர் வாழி

தலபுராணங்கள் அச்சில் வெளியிடத் தொடங்கியதும் அறிஞர் பலர் சுவடியிலுள்ள பிழைகளைக் களைந்தும் புதுக்கியும் அச்சிட்டனர். இதற்குக் காரணமாக இருந்தோருக்கும் வாழ்த்து கூறுவதைச் சில பதிப்புகளில் காணலாம். காட்டாக,

"பழனியின் தலப்புராணம் பதிப்பிக்க நினைவை யூட்டு
பழனிய குருக்கள் பாலன் பண்புள குப்பு சாமி
கிழக்கிலக் குப்பு சாமி நாகப்ப குருக்கள் கீர்த்தி
வழங்கவும் வம்ச நாளும் வர்த்திக்க வாழி வாழி"
ஆண்டவா வாழி யன்ப ரமகிழ வடைய வாழி
மாண்டல மெங்கு மாரி வழங்கி யுயர்ந்திடவே வாழி
தாண்டவ ராயன் கந்த சாமியென் சைவர் வாழி
ஈண்டிது திருத்து மீரோட் டெழிதண்ட பாணி வாழி

என்பன பழனித் தலபுராணப் பதிப்பிலுள்ள இறுதிப் பாடல்கள் ஆகும்.

பாலசுப்பிரமணியக் கவிராயரவர்களால் இயற்றப்பெற்ற இப்புராணத்தைக் கீரநத்தம் ஈஸ்வரய்யரவர்கள் தமது வித்தியாபாலு அச்சுயந்திர சாலையில் பதிப்பித்துள்ளார். இதற்குத் தூண்டுகோலாக இருந்தவர்கள் நால்வர், அவர்கள், ப. குப்புசாமி குருக்கள், கீ. குப்புசாமி குருக்கள், நாகப்ப குருக்கள், தளிமடம் கந்தசாமி பிள்ளையவர்கள் ஆகியோராவர். இவர்களின் வேண்டுகோளின் பேரில் ஈரோடு தண்டபாணி சுவாமிகள் இந்நூலின் பிழை திருத்தம் பார்த்தளித் துள்ளார். இவர்கள் அனைவருக்கும் வாழ்த்து பாடியிருப்பதால் இத்தல புராணப் பதிப்பு வரலாறும் நமக்குப் புலப்படுகின்றது. இவ்வாறு பலவற்றைச் சுட்டலாம்.

## புராணம் பாடுதல்

மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றின் சிறப்பும் ஒருங்கே கூறும் இத்தல புராணங்களைத் திருக்கோயில்களிலும், திருமடங்களிலும் படிப்பதும், கேட்பதும் முறையாக நடந்து வந்துள்ளன. மாணாக்கர் களுக்குப் பாடம் போதிக்கும் பெரும்புலவர்கள் பலரும் புராணம் பாடும் சிறந்த புராணிகர் என்று போற்றப் பெற்றனர்.

## புராணச் சொற்பொழிவு

வடமொழி மரபின்படி, புராணப் பிரவசனமானது (புராணச் சொற்பொழிவு) யாகங்கள் செய்யப் பெறுந்தோறும் ஒரு குறிப்பிட்ட நாளில் நிகழ்ந்து வந்தது என்பர். புராணப் பிரசங்கம் செய்தவர் சூதர் எனப்பட்டார். சூதர் பழைய புராணச் செய்திகளையும், புதிதாய்ச் சேர்க்க வேண்டியவற்றையும் சேர்த்துச் சொற்பொழிவு செய்வார். இத்தகைய புராணச் சொற் பொழிவுகள் தமிழகத்தில் பல நூறு

ஆண்டுகளாக நிகழ்ந்து வந்துள்ளன. வடமொழிப் புராணப் பிரசங்கத்திற்காகச் சோழமன்னர் புராணவிருத்தி என்ற பெயரில் பிரசங்கிகளுக்கு நிலங்களை இறையிலியாக வழங்கினார்கள் என்பதைக் கல்வெட்டுச் சான்றுகளால் அறிகிறோம்.

"அந்நாளில் பார்ப்பனர்கள் வேதங்களிலும் சாத்திரங்களிலும் வல்லுநராயிருந்தமையோடு இரவில் அம்பலங்களிலாதல் திருக்கோயில் மண்டபங்களிலாதல் அமர்ந்து வடமொழியிலுள்ள மாபாரதம், பதினெண்புராணங்கள் முதலானவற்றைப் படித்துப் பொதுமக்கள் உணர்ந்து கொள்ளுமாறு பொருள் விளக்கம் செய்தும் வாழ்ந்து வந்தனரென்று தெரிகிறது. அவர்களுடைய வடமொழிப் புலமையையும் சீலத்தையும் கண்டு மகிழ்வெய்திய பொதுமக்கள், அன்னோரின் நல்வாழ்வின் பொருட்டு ஊர்ப்பொது நிலங்களுள் சிலவற்றை வேதவிருத்தி, பட்டவிருத்தி, பாரதவிருத்தி, புராணவிருத்தி என்ற பெயர்களோடு இறையிலி நிலங்களாக அவர்கட்கு வழங்கிப் பெரிதும் ஆதரித்து வந்தனர்"[1] என்பர் கல்வெட்டு ஆய்வாளர். இத்தகைய நிலக்கொடைகள் 'புராணம்', 'புராண மானியம்' என்றும் வழங்கப்பட்டன.

தமிழகத்தில் வடமொழிப் புராணச் சொற்பொழிவுகளுக்குச் சோழமன்னர்கள் நிலக்கொடை வழங்கியது போன்றே தமிழ்ப் புராணச் சொற்பொழிவு செய்வோருக்கும் வழங்கினார்கள் எனத் தெரிகின்றது. அந்நாளில் புராணச் சொற்பொழிவுக்குப் 'புராணம் வக்காணித்தல்' என்று பெயர் வழங்கி வந்துள்ளது. சோழ மன்னர் பல புராணங்களை வக்காணிப்போருக்கும் அவையிலிருந்து கேட்போருக்கும் இடவசதிக்காகப் பல நிபந்தங்கள் அமைத்திருந்தனர். திருவாரூரிலும் திருபுவனத்திலும் புராண மண்டபம் என்ற பெயராலேயே மண்டபம் அமைக்கப்பட்டிருந்தது. இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் அவனது ஒன்பதாம் ஆட்சியாண்டில் (கி. பி. 1172) திருவொற்றியூரில் பங்குனி உத்தரப் பெருவிழா நடைபெற்றது. அதற்குச் சோழவேந்தனும் வந்திருந்தான். ஆறாம் திருநாளன்று திருவொற்றியூர் இறைவனான படம்பக்கநாயக தேவர் திருமகிழின் கீழ்த் திருவோலக்கம் செய்தருளினார். அப்பொழுது ஆளுடை நம்பிகள் புராணம் (பெரிய புராணத்துள் சுந்தர மூர்த்தி நாயனார் சரிதம் கூறும் பகுதி) விரிவுரை செய்யப்பட்டது. அதனை அங்கிருந்து வேந்தனுடன் ஒருங்கு கேட்டு இன்புற்றோருள் சதுரானன பண்டிதரும் வாகீச பண்டிதரும் சிறந்து விளங்கினர். வாகீச பண்டிதரே அப்புராணத்தை விரிவுரை செய்தார் என்றும் கூறுவர்.[2]

சேக்கிழார் புராணம் பாடியதிலிருந்து சுமார் முப்பது ஆண்டு களுக்குள்ளேயே அப்புராணம் புராண மண்டபங்களில் பிரசங்கமாக விரிவுரை செய்யப்பெற்றது என்பதும் இதனால் புலனாகும்.

இவ்வாறு புராணச் சொற்பொழிவு நடந்து வந்த புராண மண்டபங்களில் தலபுராணங்களும் அவ்வப்போது அரங்கேற்றம் செய்தும், தொடராகவும் நிகழ்ந்து வந்துள்ளன.

1. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, 3ம் பகுதி, பக். 94.
2. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 16 ம் நூ. ப. 33.

## பஞ்சபுராணம் பாடுதல்

தமிழகச் சிவாலயங்களில் சந்நிதியில் திருமுறை ஓதும் வழக்கம் நாயன்மார் காலத்திலிருந்து இருந்து வருகிறது. பன்னிரு திருமுறைகளிலும் திருமுறைக்கு ஒரு பாடலாகப் பாடுவதற்கு மாறாக, இப்பன்னிரண்டைச் சுருக்கி ஐந்து பாடல் பாடும் வழக்கமே இன்று பஞ்சபுராணம் பாடுதல் எனப்படுகிறது. தேவார அடங்கன் முறையே முழுவதிலுமிருந்து ஒரு பாடல், திருவாசகம் ஒன்று, திருவிசைப்பா ஒன்று, திருப்பல்லாண்டு ஒன்று, பெரியபுராணம் ஒன்று என வரும் ஐந்துமே பஞ்சபுராணம் எனப்படுகிறது.

புராணப் பிரவசனம் கோயில்களில் இருந்தமையால், அங்குப் பாடும் பதிகங்களுக்கும் 'புராணம் பாடுதல்' என்ற பெயர் பின்னும் பெருமைதரும் என்ற எண்ணத்தில் பஞ்சபுராணம் பாடுதல் என்ற சொல்லாட்சி சுமார் நூறு ஆண்டுகட்கு முன்பு தமிழகத்தில் தோன்றியிருக்கக் கூடும் என்பர் திரு. மு. அருணாசலம் அவர்கள். சிவாலயங்களில் பஞ்சபுராணம் பாடுவது என்பது தொடர்ந்து நடைபெற்றுவரினும், தலபுராணம் பாடுவது என்பது மிகமிக அருகி விட்டதையே காண்கிறோம். சில குறிப்பிட்ட தலங்களில் சைவர்கள் சிலர் மட்டுமே தலபுராணங்களைப் படித்து வருகின்றனர். ஆன்மீகப் பற்றுடையோர் அனைவரும் இத்தலபுராணங்களைப் படித்தும், சொல்லியும் பலருக்கும் தெரிவித்தல் மிகவும் நலம் பயக்கும்.



# சைவ புராணங்களும் வைணவ புராணங்களும்

பிறப்பும் இறப்பும் உடையவர்கள் பசுக்கள்; பசுக்கள் எண்ணில்லாதவர்கள்; பசுக்களாவார், தேவர்கள் முதலாகக் கிருமிகள் ஈறாகவுள்ள சீவர்கள்.

பிறப்பும் இறப்பும் இல்லாதவர் பதி; பதி ஒருவரே; அந்தப் பதி சிவபெருமான். சிவபெருமானுக்குப் பசுக்களெல்லாம் என்றும் அடிமைகள்; சிவபெருமான் அந்தப் பசுக்கள் தோறும் நிறைந்து நின்று அவர்களையெல்லாம் ஆளுந் தலைவர். ஆதலாற் சிவபெருமான் ஒருவரே பசுபதி. பசுக்களுக்குப் பதி; ஆன்மாக்களுக்குத் தலைவன்.

இந்த உண்மையைக் கடை பிடித்துச் சிவபெருமானை வழிபடுகிற வழியே சைவ சமயம் ஆகும். சிவபெருமானது திருவடிப் புணையை அடைதற்கு ஏற்ற வழிமுறைகளைக் காட்டும் உண்மைச் சமயமாக இச்சைவசமயம் விளங்குவதை ஆன்றோர் சுட்டுவர்.

"வாழ்வெனு மையல் விட்டு வறுமையாஞ் சிறுமை தப்பித்
தாழ்வெனுந் தன்மை யோடுஞ் சைவமாஞ் சமயஞ் சாரு
மூழ்பெற லரிது சால வுயர்சிவ ஞானத் தாலே
போழிள மதியி னானைப் போற்றுவா ரருள்பெற் றாரே".

எனச் சிவஞான சித்தியாரும்,

"சைவ சமய மேசமயஞ் சமயா தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளி காட்டு மிந்தக் கருத்தைவிட்டுப்
பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டா முத்திதருந்
தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாருஞ் சகத்தீரே."

எனத் தாயுமான சுவாமிகளும் அழைப்பர்.

இச்சைவ சமயத்திலே முத்தி அடையத்தக்க வழிகள் நான்கினைக் குறிப்பிடுவர். அவை, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இவை நான்கும் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையன. முத்தியடைய விரும்பினோர் இந்நால் வழிகளையும் கொண்டு புறத்தும் அகத்துஞ் சிவபெருமானை வழிபடல் மிகமிகத் தேவை என்பர். சிவபெருமான் புறத்தே திருத்தலங்களிலுள்ள ஆலயங்களில் இருக்கும் சிவலிங்கம் முதலிய திருமூர்த்தங்களையும் மெய்யடியாரது திருவேடங்களையும் ஆதாரமாகக்கொண்டு நின்றும், அகத்தே உயிர் இடமாகக் கொண்டு நின்றும், இவ்வுலகத்தாராற் செய்யப்படும் வழிபாட்டை ஏற்றருள் செய்வார் என்பது சைவ சமயிகள் துணிபு.

"தாபர சங்க மங்க ளென்றிரண் டுருவி னின்று
மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்ப
னீபரன் தன்னை நெஞ்சி னினைவையே னிறைந்த பூசை
யாய்பரம் பொருளை நாளு மரச்சிநீ யன்பு செய்தே".

என்பார் சிவஞான சித்தியார்.

## ஆன்மாக்கள் உய்யும் பொருட்டே தலம், தீர்த்தம், மூர்த்தி எனும் மூன்று வடிவாய் நின்றார் என்பது

சிவபெருமான் இம்மண்ணுலகத்திலே நால்வகை யோனியிலும், எழுவகைப் பிறப்பிலும், எண்பத்து நான்கு லக்கம் யோனி பேதங்களிலும், அளவின்றி வினை வயத்தாற் பிறந்திறந்துழலும் ஆன்மாக்களை, அவற்றினின்றும் எடுக்கும் நிமித்தத்தானன்றோ, இவ்விரிந்த உலகத்திலே தலம், தீர்த்தம், மூர்த்தியென்னும் மூன்று வடிவாய் விளங்கினர் என்பர்.

"ஈண்டுநாற் பிறப்பி னெழுவகைத் தோற்றத் தெண்பத்து நான்கெனு மிலக்க
மாண்டபல் பவத்திற் பன்முறை வினையான் மறிதரு முயிர்களை யெடுப்ப
வாண்டரு ளமல னநாதியி னுலக மாக்குழி யருந்தலந் தீர்த்தங்
காண்டகு மூர்த்தி யென்னமூன் றுருவாய்க் கண்ணக னுலகெலாங் கிடித்து".

(தணிகைப் புராணம்: நந்தியுபதேசப்படலம். 117)

என்பர் கச்சியப்ப முனிவர்.

தலம், தீர்த்தம், மூர்த்தி என்னும் இம் மூன்றனையுஞ் சிவபெருமானாகவே எண்ண வேண்டும். இவ்வாறு இவற்றை முறையாக வணங்குவோர் பரமஞானாசாரியரால் உண்மை விளங்கப்பெற்று முத்தியடைவார்கள் என்பது சைவ சமயக் கோட்பாடாகும். இவற்றை மக்கள் அனைவரும் அறியும் வண்ணம் தெளிவுறுத்தவே சைவ புராணங்கள் பல எழுந்துள்ளன.

சைவ புராணங்கள் ஒவ்வொன்றிலும் பசுபதிபாச விளக்கம், திருவைந்தெழுத்து, சிவன் திருப்பெயர், சிவநோன்பு, சிவபுராணம், சிவச்சின்னங்கள், சிவக்குற்றம், சிவன் கோயில் திருவிழாக்கள் என இவ்வாறு இச்சமயம் தொடர்பாக மக்கள் அறிய வேண்டிய அத்துணைச் செய்திகளையும் ஒருங்கே திரட்டியளிக்கக் காணலாம். இயல்பாகவே சைவர்கள் மிகுந்த தமிழ்நாட்டில் சைவக் கோயில்களும் மிகுதியாக இருக்க, அவற்றிற்கான புராணங்களும் மிகுந்திருக்கக் காண்கிறோம்.

நம் பாரத நாட்டில் தோன்றி வளர்ந்த ஆறு சமயங்களுள், திருமாலை (விஷ்ணுவை) முழுமுதற் பொருளாகக்கொண்டு வழிபடுபவர்கள் வைஷ்ணவர்கள் எனப் பெற்றனர். வைணவ சமயம் மிகவும் தொன்மையானதாகவும் கருதப்பெறுகிறது.

வைணவக் கோட்பாட்டிற்கு அடிப்படையானது வேதங்களாகும். இதனுள் இருக்கு வேதத்திலுள்ள 'புருஷ ஸுக்தம்' இன்றியமையாத பகுதியாகும். இவையன்றிப் பிரஸ்தானத்ரயம் எனக் குறிக்கப்பெறும்

உபநிடதங்கள், பிரம்ம சூத்ரம், பகவத்கீதை, இம்மதத்திற்கே உரிய ஆகமங்களான வைகானஸம், பாஞ்சராத்திரம் எனும் இவையும், பதினெண் புராணங்களுள் விஷ்ணு புராணம், பாகவதம், நாரதீயம், காருடம் ஆகிய நான்கும், இதிகாசங்களில் பாரதமும், இராமாயணமும், தோத்திர நூலாகிய விஷ்ணு சகஸ்ரநாமமும், இவற்றோடு பன்னிரண்டு ஆழ்வார்கள் அருளிச் செய்த நாலாயிர திவ்யபிரபந்தமும், இதனை விளக்க வந்த உரை நூல்களும் சிறப்புடைய வைணவ நூல்களாகக் கருதப் பெறுகின்றன.

வேதத்தின் சாரமாக விளங்குவன நம்மாழ்வாரின் திருப் பாசுரங்கள், அவற்றுள், திருவிருத்தம் - இருக்கு வேத சாரம் எனவும், திருவாசிரியம் - யசுர் வேத சாரம் எனவும், பெரிய திருவந்தாதி - அதர்வண வேத சாரம் எனவும், திருவாய்மொழி - சாம வேத சாரம் எனவும் போற்றுவர்.

தமிழில் ஆறாம் நூற்றாண்டு தொடங்கி ஒன்பதாம் நூற்றாண்டில் நம்மாழ்வார் முடிய உள்ள கால இடைவெளியில் திருமாலையே பரம்பொருளாகப் போற்றும் நூல்கள் பல எழுந்தன. இவை தமிழில் வைணவ நெறியைத் தனிப்பெரு நெறியாக அமைத்தன.

ஒன்பதாம் நூற்றாண்டில் நாதமுனிகள் தொடங்கிப் பின்னால் இராமானுசர் வரையில் வைணவ ஆசாரிய பரம்பரை பிறந்து வளர்ந்தது. இப்பரம்பரை புதியதொரு நெறியைப் பழக்கிக் கொண்டது. இந்த நெறியில் ஆழ்வார் பாடல்களைப் போலத் தமிழில் கால்கொள்ளாமல் வடமொழியையே ஆதாரமாகக் கொண்டு நூல்கள் இயற்றப்பெற்றன. வடமொழியும் தமிழும் கலந்த மணிப்பிரவாள நடையை மேற்கொண்டு வியாக்கியான நூல்கள் பெருகின. இந்நிலை பதினாறாம் நூற்றாண்டு வரையில் தொடர்ந்தது. இந்த இடைப்பட்ட காலத்தில் வைணவப் பெருநூல்கள் எதையும் செய்தளிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பதினாறாம் நூற்றாண்டில் ஏற்பட்ட சமய எழுச்சியால் சில பெரு நூல்கள் வைணவத்தில் தோன்றலாயின. இரண்டு பாகவதங்கள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கன. கூடற்புராணமும் திருக்குருகை மான்மியமும் தலபுராணங்களாகத் தோன்றின. இவற்றை அடுத்து வைணவத்தில் தோன்றிய தலபுராணங்கள் மிக மிகக் குறைவே.

## வைணவபுராணங்கள் மிகுதியாக இல்லாமைக்கான காரணம்

தமிழில் சைவ புராணங்கள் நூற்றுக்கணக்கில் உள்ளன. ஆயின், வைணவ புராணங்கள் மிக மிகக் குறைவாக உள்ளமை சிந்திக்கத்தக்கது. தமிழ்நாட்டில் பல்லாயிரக்கணக்கான சிவாலயங்கள் தோன்றிய நிலையில் வைணவ ஆலயங்கள் நூற்றுக்கணக்கிலேயே உள்ளன. இவ்வாறு சிவாலயங்கள் மிகுதியின் காரணமாகவே சைவ புராண நூல்களும் மிகுதியாக உள்ளன எனலாம்.

சைவ சமயம் மற்ற எல்லாச் சமயக் கருத்துக்களையும் உள்ளடக்கி யிருந்ததாலும், முதலில் சிவ வழிபாடே இருந்ததாலும் சைவ புராணங்கள் தமிழில் மிகுதியாகத் தோன்றின என்பர். ஆதியில் தமிழ் நாட்டில் இருந்தது ஒரே சமயம், ஒரே தெய்வ வழிபாடு. இவற்றிலிருந்து கிளைத்தனவே பிற யாவும். குறிஞ்சித் தெய்வமான முருகனும் முல்லைத்

தெய்வமான திருமாலும் சைவர் அனைவராலும் வணங்கப்பட்டனர். காலப் போக்கில், முருக வழிபாடு சிவ வழிபாட்டோடு ஒன்றிவிடவே, தனித்து நின்ற திருமால் வழிபாடு, தனிச் சமயமாக ஆயிற்று; தனியே திருமால் ஆலயங்கள் தோன்றலாயின. அவையும் நூற்றுக்கணக்கில் தான் இருந்து வருகின்றன. இவ்வாறு வைணவக் கோயில்கள் மிகப் பிற்காலத்தில் தோன்றி வளர்ந்ததால் அத்தலங்கள் பற்றிய புராண நூல்களும் மிகக் குறைவாகவே தோன்றின என்பது புலப்படும்.

மேலும், பதினாறாம் நூற்றாண்டில் வைணவர்கள் தங்கள் கூட்டத்தைப் பெருக்குவதிலும், கோயில்களை அமைப்பதிலும், வழிபாட்டை நெறிப்படுத்துவதிலும் சாத்திரங்களை விளக்குவதிலுமே தங்கள் முழுக் கவனத்தைச் செலுத்தினார்கள். நாலாயிரதிவ்வியப் பிரபந்தங்களின் பெருமையும் சாத்திரங்கள் வியாக்கியானங்களின் பெருமையும் போற்றிய அளவிற்கு இவர்கள் தலங்களின் பெருமையை மிகுதியாகப் போற்றவில்லை என்பதே உண்மை. இதன் காரணமாகவும் வைணவத் தலபுராணங்கள் மிகுதியாகத் தோன்றவில்லை எனலாம்.

அக்காலங்களில், தமிழ்நாட்டில் சமய அனுட்டானம் என்பது மூன்று பிரிவாக இருந்தது. அதில் ஒன்று சைவ சமயம்; இது சிவாலய வழிபாடு, திருமுறை ஓதுதல் என்ற நெறியில் சென்றது. இரண்டாவது வைணவ சமயம்; இது திருமால் ஆலய வழிபாடு, நாலாயிரம் ஓதுதல், ஆசாரியர் வியாக்கியானங்களை ஓதுதல் என்ற நெறியில் சென்றது. இவர்கள் அனைவரும் ஸ்ரீவைஷ்ணவர்கள்; பிராமணர்கள்; சாத்தின முதலிகள்; இவர்களிடையே சாத்தாத முதலிகளான பிராமணர் அல்லாதாருக்கு எந்த இடமும் இல்லை. மூன்றாவது சங்கர அத்வைத நெறி; ஒன்பதாம் நூற்றாண்டில் சங்கரர் தோன்றி அத்வைத நெறியை எடுத்துக் காட்டிய பின்னர், முன் சிவ வேதியராயிருந்த தமிழ்ப் பிராமணர் அனைவரும், ஸ்மார்த்த அத்வைதிகளாயினர். இவர்களுக்கு ஆலய வழிபாடு முக்கியமல்ல. ஆகவே கோயில் வழிபாடு என்று கூறும்போது, பொதுவாக, பிராமணர் அல்லாத மக்கள், சைவர்கள், கோயில் ஈடுபாடு கொண்டவர்களாய், தலபுராணம் பாடினார்கள். ஸ்மார்த்தப் பிராமணர்கள் சங்கர பாஷ்யங்களையே பற்றிக் கொண்டவர்களாய், கோயில் நெறியினின்றும் விலகி நின்றார்கள். இதே போல் ஸ்ரீவைஷ்ணவர்களாகிய பிராமணர்களும் தங்கள் வடமொழி நூல்களையே பற்றிக் கொண்டு, நாலாயிரம் தவிர வேறு தமிழ்ப் பாடல்கள் தொடர்பு அற்றவர்களாக வாழ்ந்தார்கள். ஆகவே தலபுராணம் செய்யும் சூழ்நிலை வந்தபோது, சைவர் பெருவாரியாக நூல் செய்தார்கள், பிராமணர் செய்யவில்லை. ஆகவே சைவத் தலபுராணங்கள் மிகுதியாகத் தோன்றின. பிராமணரே ஆதிக்கம் வகித்த வைணவத்தில் தலபுராணங்கள் தோன்றவில்லை. தலபுராணம் பாடவல்ல பிராமணரல்லாத வைணவர் அக்காலத்தில் குறைவு என்னும் அறிஞர்[1] கருத்தும் இவண் சிந்திக்கத்தக்கது.

எண்ணிக்கையில் குறைவாயினும் கிடைக்கும் வைணவ புராணங்கள் உள்ளடக்கத்தில் மிகச் சிறந்தனவாக அமைந்துள்ளன. பல தலங்களுக்கு உரைநடையில் புராணங்கள் பிற்காலத்தில் எழுதப்

1. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 16 ஆம் நூ. பக். 327, 328.

பெற்றுள்ளன. இவற்றுக்கு மூலமாகப் பழைய புராணங்களே எடுத்தாளப் பெற்றுள்ளன.

சைவம், வைணவம் என்னும் இரண்டு பிரிவுகளிலான தல புராணங்களில் பலர் நினைப்பது போன்று, சமயக் காழ்ப்புணர்ச்சி யைக் காண்பது அரிதாக உள்ளது. தாம் சொல்ல வந்த தலத்தின் பெருமையை மிகுத்துச் சொல்கின்றார்களேயன்றி, மற்ற சமயத்தைத் தாழ்த்திச் சொல்லுதல் என்பதை இப்புராண ஆசிரியர்கள் எவ்விடத்தும் செய்யவில்லை. பிற்காலத்தில் வந்த சிலரும் சமயக் காழ்ப்புணர்ச்சி மிக்கோரும் சில வேறுபாடுகளைக் கற்பித்தார்கள் என்பதற்காக எல்லாப் புராணங்களும் இத்தன்மையன என நாம் கொள்வதற்கில்லை. பொதுநிலையில், சமய நோக்கில் இவை ஒன்றுபட்டே நிலைத்து நிற்கின்றன.

தமிழ்நாட்டுத் திருத்தலங்கள் பலவற்றில் சைவ வைணவப் பிணைப்பைப் பார்க்கலாம். சிதம்பரத்திலும் கச்சி ஏகம்பத்திலும் காமாட்சியம்மன் கோயிலிலும் மூன்று திருப்பதிகளும் சிவத் தலங்களும் இணைந்துள்ளன.

கரம்பனூர் உத்தமர் கோயில், திருக்கோட்டியூர், திருக்குறுங்குடி, வித்துவக்கோடு ஆகிய வைணவக் கோயில்களில் சிவ சந்நிதிகள் உள்ளன.

இதே போல, சிக்கல், திருப்பழனம், திருவோத்தூர், திருநணா, கொடிமாடச் செங்குன்றூர், திருநாவலூர், திருப்பாண்டிக் கொடுமுடி, திருவக்கரை, திருவண்ணாமலை, இராமேச்சுரம், திருஉத்திரகோச மங்கை, திருநெல்வேலி, திருச்செந்தூர், திருக்குற்றாலம், ஆத்தூர், சுசீந்தரம் போன்ற சிவத்தலக் கோயில்களில் திருமால் சந்நிதிகள் உள்ளன.

மலை நாட்டில் பெரும்பாலான கோவில்களில் சிவன் திருமால் அம்பிகை சந்நிதிகள் கலந்தே இருக்கக் காணலாம்.

எனவே, கோயில்களை அமைத்தவர்களும் தலபுராணம் பாடியவர்களும் சமயப் பிரிவினையை ஏற்படுத்தினார்கள் என்று கூறுவதற்கே இடமில்லை. இவற்றை நன்கு உணர்ந்து போற்றுவதே நலம் பயக்கும்.



# தமிழ்த் தலபுராணங்களும் வடமொழிப் புராணங்களும்

தமிழில் பெரியபுராணம் போன்ற ஒருசிலவற்றைத் தவிர பிற புராணங்கள் யாவும் பெரும்பாலும் வடமொழி மூலக்குறிப்புகளிலிருந்து பெயர்த்து உருவாக்கப் பெற்றதாகக் கூறுகின்றனர். தமிழிலுள்ள தலபுராணங்களுக்கு மூலம் வடமொழியிலுள்ள காந்த புராணம், பிரமாண்ட புராணம் போன்ற புராணங்களே என்றும், அவற்றில் கூறப்பட்டிருக்கும் செய்திகளை மூலமாகக் கொண்டே தாம் புராணம் இயற்றியுள்ளதாகவும் பல தமிழ்ப் புராண ஆசிரியர்கள் சுட்டக் காணலாம்.[1] இதற்குச் சான்றாக வடமொழி மூலங்களை நூலின் முன்னே தருவதும் அவற்றின் தமிழ் மொழிபெயர்ப்பைத் தருவதும் இத்தலபுராண ஆசிரியர்கள் மற்றும் பதிப்பாசிரியர்களின் பழக்கமாக அமைந்துள்ளது. தமிழ்த் தலபுராணங்கள் யாவும் வடமொழி நூலின் மொழிபெயர்ப்பு என்பது பற்றி விரிவாக ஆராய வேண்டியுள்ளோம்.

## வடமொழிப் புராணங்களில் தலக்குறிப்புகள்

வடமொழிப் புராணங்களில் முதலாவதாகக் குறிக்கப் பெறுவது பிரமபுராணம். இது ஆதிபுராணம் எனவும் கூறப்பெறும். இது பிரமனால் தக்கனுக்குக் கூறப்பட்டது. இன்று ஒரிசா என வழங்கும் உத்கலைப் பிரதேசத்திலுள்ள மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பவற்றைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இப்புராணம் ஆறு காண்டங்களையுடையது. சிருட்டி காண்டத்திலே உலகின் தோற்றம், அரசரின் பரம்பரை என்பன கூறப்படுகின்றன. பூமி காண்டத்திலே பூமியின் பகுதிகளைப் பற்றியும் புண்ணிய தலங்களைப் பற்றியும் கூறப்படுகிறது. சுவர்க்க காண்டம் சுவர்க்கத்தைப் பற்றிக் கூறுகிறது. பாதாள காண்டத்திலே பாதாள உலகைப் பற்றிக் கூறப்படுகிறது.

முருகக்கடவுளின் தோற்றம், பராக்கிரமம் என்பவற்றைக் கூறுவது காந்தபுராணம். இப்புராணத்தில் சைவ சமயக் கோட்பாடுகள், தத்துவங்கள் ஆராயப்படுவதுடன் சிவத்தலங்கள் பலவற்றையும் விவரமாக வருணிக்கக் காணலாம்.

விட்டுணுவின் அவதாரங்களைக் கூறும் வராக, கூர்ம, மச்ச, வாமன புராணங்களில் இயமநியமங்கள், விரதானுட்டானங்கள் கூறப் பெறுவதுடன் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பனவும் விளக்கக் காணலாம்.

இவ்வாறு பதினெண் புராணங்களில் கூறப்பெற்றுள்ள தலங் களைப் பற்றிய குறிப்புகளை விரித்துப் பின்னாளில் சில இயற்றப்

---

1. தமிழிலுள்ள சில தலபுராணங்களும் அவற்றின் வடமொழி மூலங்களும் பற்றிய அட்டவணையைப் பின்னிணைப்பில் காண்க.

பெற்றுள்ளன. இவை ஒவ்வொன்றிலும் இவை மகாபுராணத்திலோ அல்லது உபபுராணத்திலோ அடங்கியிருப்பதாக எழுதுவது ஒரு மரபு. இருப்பினும், இவை அந்தந்தத் தலங்களின் அருமையை விளக்க ஆங்காங்கு இருந்தவர்களால் புதிதாக இயற்றப்பெற்றது என்பதால், வடமொழி அறிஞர் பலரும் இவற்றை அவ்வளவாகப் போற்றுவ தில்லை. பதினெண் புராணங்களைப் போற்றுவதைப் போன்று இவ்வடமொழிப் புராணங்களை அவர்கள் சிறப்பித்துக் கூறாதது இவண் குறிப்பிடத்தக்கதாகும்.

இந்நிலையில், தமிழகத்திலுள்ள பல தலங்களுக்கு எவ்வாறு வடமொழியில் புராணங்கள் தோன்றின என்பது ஆராயத்தக்கது. தமிழ கத்திலுள்ள பல புண்ணியத்தலங்கள் பலநூறு ஆண்டுகட்கு முன்பே சிறப்புற்றிருந்தன என்பதற்கு வடமொழியிலும் பல நூல்கள் சான்றாக அமைந்துள்ளன. வேத காலத்திலும் அதற்குப் பின்பும் இத்தலங்கள் பெற்றிருந்த சிறப்புக்களை இந்நூல்களால் நாம் நன்கு அறியலாம் என்பர்.[1]

## வேதத்தில் கூறப்பெறும் தலங்கள்

கோயில் என்னும் சிதம்பரத் தலச் சிறப்பு வேதத்திலுள்ள தர்சனோபநிஷத்திலே கூறப்பட்டுள்ளது. இதில், சிதம்பரம் இருதய மத்தியிலுள்ளது என்று சொல்லப்பட்டுள்ளது.

இராமேசுவரம் என்னும் சேதுவின் சிறப்பு, ரிக்வேதசம்மிதை மண்டலம் 10, சூக்தம் 115.3 இல் கூறப்பெற்றுள்ளது. இந்தச் சேதுவைத் தரிசிப்பவர் சம்சாரத்தைக் கடக்கின்றனர் என்று யஜுர் வேதம் தைத்ரீய சம்மிதை (3-2-2-2) கூறுகிறது. அறிஞர்கள் விஷ்ணுவின் உயர்ந்த அமிசமாகச் சேதுத்தலத்தைக் காண்கின்றனர் என்றும் இது (1-3-6-12-13) கூறுகிறது.

வேதாரண்யம், வில்வாரண்யம், கோடம்பூர், திருக்காட்டுப்பள்ளி போன்றன ஸ்ரீருத்ரத்தில் வரும் அரண்யம் என்ற சொல்லால் விளங்கும் தலங்களாகும்.

ஔஷதீனாம்பதி என்ற சொல்லால் விளங்கும் மருந்து மரங்களும் தலங்களுமாவன, மருதமரம் - திருவிடைமருதூர்; புன்கமரம்- திருப்புன்கூர்; கடுக்காய் - திருக்குறுக்கை; வேம்பு - புள்ளிருக்குவேளூர் என்பன.

## இதிகாசத்தில் கூறப்பெறும் தலங்கள்

திருவெண்காடு என்னும் சுவேதாரண்ய க்ஷேத்திரத்தில் இராமன் விடுத்த பாணத்தால் கரன் விழுந்து இறந்தான் என்பதை வால்மீகி ராமாயணம் ஆரண்ய காண்டம் 30 ஆம் சருக்கத்தில் கூறப்பட்டுள்ளது.

இராமேசுவரத்தின் சிறப்பை ராமன் சீதைக்கு உரைப்பதாக வால்மீகி ராமாயணம் யுத்த காண்டத்தில் கூறப்பெற்றுள்ளது.

1. திருத்தலங்கள் வரலாறு, பக். ix - xiii.

## சிவரகசியத்தில் கூறப்பெறும் தலங்கள்

திருக்காளத்தி, காஞ்சி, அருணாசலம், விருத்தாசலம், வாட்போக்கி, திரிசிராப்பள்ளி, மதுரை, திருவானைக்கா, திருவையாறு, கும்பகோணம், திருவிடைமருதூர், மாயூரம், திருவெண்காடு, சாய்க்காடு, திருவீழிமிழலை, திருக்கடவூர், சீகாழி, புள்ளிருக்கு வேளூர், திருமறைக்காடு, கமலாலயம் என்னும் திருவாரூர் ஆகிய தலங்கள் இந்நூலில் கூறப்பெறுகின்றன.

## பதினெண்புராணங்களில் கூறப்பெறும் தலங்கள்

### 1. ஸ்காந்தம்

திருக்காளத்தி, திருவாலங்காடு, காஞ்சிபுரம், திருவண்ணாமலை, திருவெண்ணெய்நல்லூர், விருத்தாசலம், சிதம்பரம், மாயூரம், திருச்சேய்ஞலூர், சீகாழி, திருப்பரங்குன்றம், திருக்குற்றாலம், திருச்செங்காட்டங்குடி, திருவாரூர், திருவிடைமருதூர் ஆகிய தலங்கள் ஸ்காந்தத்தில் குறிப்பிடப்பெற்றுள்ளன.

### 2. சிவமகாபுராணம்

இராமேசுவரம், திருவாரூர் ஆகியன கூறப்பட்டுள்ளன.

### 3. கூர்மபுராணம்

திருவையாற்றில் ஐப்யேசலிங்கம் தோன்றிய வரலாறு கூறப்படுகிறது.

### 4. பாகவதம்

பலராமர் காஞ்சிபுரம் போன்ற தலங்களுக்குச் சென்று தரிசித்ததாக இதில் கூறப்படுகிறது.

இவ்வாறு தேவர்களும் முனிவர்களும் பிறரும் சிவத்தலங்களுக்கும் திருமால் தலங்களுக்கும் வந்து வழிபட்டதாக இப் பதினெண் புராணங்களில் குறிப்புக்கள் உள்ளன.

இத்தகைய தலங்கள் பல சங்க இலக்கியங்களிலும் குறிப்பிடப் பெறுகின்றன என்பது சுட்டத்தக்கது. பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, சிலப்பதிகாரம், திருமந்திரம் போன்ற பழமையான தமிழ் நூல்களிலும் இவற்றின் சிறப்பு கருதி குறிக்கப்பெற்றுள்ளன.

## தமிழ்நாட்டுத் தலங்களுக்கு வடமொழியில் புராணங்கள்

தமிழ்நாட்டிலுள்ள பல திருத்தலங்களும் ஒவ்வொரு வகையில் சிறப்புப் பெற்றன. ஒரு திருக்கோயிலைப் பற்றிப் பல கதைகள் தோன்றி வளர்ந்தன. புலமை படைத்தவர்கள் அக்கதைகளையெல்லாம் தொகுத்துப் புராணமாகப் பாடினார்கள். அக்காலத்தில் எதுவும் வட மொழியில் இருந்தால்தான் சிறப்பு என்ற எண்ணம் இருந்தது. எனவே, ஆங்காங்கு இருந்த வடமொழிவாணர், சிறப்பாக சிவாசாரியரும், புரோகிதரும், தத்தம் ஆற்றலுக்கு ஏற்பக் கதைகளைப் புராணமாக வட மொழியில் பாடி வைத்துக் கொண்டனர். இவ்வகையில் பிராமணரே

புராணம் பாடினார்கள் என்றும் கூறவியலவில்லை. அக்காலத்தில் கல்வி கற்ற சைவ வைணவர் அனைவருமே வடமொழியை நன்கு கற்றிருந்தனர். இவர்களில் பலர் வடமொழியில் புராணம் செய்துள்ளனர். ஒருதலத்தில், இந்திரன் முதலான தேவர், பிரமன் முதலான மூர்த்திகள், இலக்குமி முதலான சக்திகள், அகத்தியர் முதலான முனிவர்கள் சூரியன் முதலான கோள்கள் ஆகிய பலரும் வந்திருந்து வழிபட்டுப் பேறு பெற்றார்கள் என்ற பல செய்திகளை இந்த வடமொழிப் புராண ஆசிரியர்கள் தம் நூல்களில் புனைந்து பாடினர். இத்தகைய நூல்களை மொழிபெயர்த்தே தமிழில் தலபுராணங்கள் இயற்றப்பெற்றதாகக் கூறுகின்றனர்.

## தலபுராணங்கள் - மொழிபெயர்ப்புகள்

இலக்கியம் முதலிய நூல்களைத் தம்நாட்டு ஒழுக்கம் முதலியன பற்றித் தம் தாய்மொழியில் இயற்றுதலும், அவற்றைப் பிறமொழியில் இயற்றிப் பிற நாட்டினருக்குக் கொடுத்தலும், பிறமொழியில் ஆக்கப் பட்டுள்ள நூல்களைத் தமது தாய் மொழியில் மொழிபெயர்த்தலும் மொழி வளர்ச்சிக்கு இன்றியமையாதனவாகும். அவைகளுள், மொழி பெயர்த்தல் இரண்டு வகைப்படும். ஒன்று பிறநாட்டினர் அவர் ஒழுக்கம் முதலியன பற்றி அவர் மொழியில் ஆக்கியவற்றை மொழிபெயர்த்தல்; மற்றொன்று யாதானும் ஒரு காரணம் பற்றித் தம் நாட்டினர் தமது ஒழுக்கம் முதலியன பற்றிப் பிற மொழியில் ஆக்கியவற்றை மொழிபெயர்த்தல். இவ்வெல்லா வகையிலும் தமிழ்ப் பெரியார்கள் முற்போக்குடையராய் இருந்தனர். பெரும்பான்மையான தலபுராணங்கள் தமிழ்நாட்டு இடங்களையும் தமிழ் நாட்டு ஒழுக்கங் களையுமே பெரிதும் சிறப்பித்துக் கூறுதலால், அவை இரண்டாவதாகக் கூறிய மொழிபெயர்ப்பு வகையைச் சார்ந்தனவே என ஊகித்தற்கு இடமுண்டு. ஆயினும், அவற்றில் வேற்றுநாட்டு ஒழுக்கம் முதலி யனவும் கலவாமற் போகவில்லை. அதற்குக் காரணம் மொழிச் சார்பே போலும் என்பாரின் கூற்றும்[1] இவண் கருத்தில் கொள்ளத் தக்கது.

## வடமொழியிலிருந்து வந்ததா?

தமிழிலுள்ள பெரும்பாலான தலபுராணங்கள் வடமொழி யிலிருந்து பெயர்த்தெழுதப் பெற்றது என்றே கூறப்பெறும். சில அவ்வாறு பெயர்த்தெழுதப் பெற்றிருப்பினும் எல்லா நூலும் இவ்வாறு அமைந்தனவா என்பது ஆய்வுக்குரியதே. வடமொழிப் புராணங்கள் பல பிற்காலத்தே தோன்றியவை எனக் கூறும் திரு. மு. அருணாசலம் அவர்கள் இதற்கான காரணத்தையும் விளக்குவர்.[2]

"தலபுராணம் எழுதியவர்கள் சிறந்த மனோதத்துவ நிபுணர்கள் என்றே சொல்ல வேண்டும். வெறுங்கதையாகப் புனைந்தால் மக்களுக்குப் பற்றுதலும் நம்பிக்கையும் மனநிறைவும் ஏற்பட மாட்டா; ஆகவே வடமொழியில் பிரமாண்டத்தில் அல்லது ஸ்காந்தத்தில் அல்லது பவிஷ்யோத்தர புராணத்தில் இது உள்ளது என்று சொல்லி வைத் தார்கள். அங்கு இருக்கிறதா என்று யாரும் பார்த்ததில்லை. பார்க்கவும்

1. சி. அருணைவடிவேல், காஞ்சிப்புராணம், முன்னுரை பக்.11.
2. தமிழ் இலக்கிய வரலாறு 16ம் நூ. பக். xix, xx.

, முடியாது; இருந்தாலல்லவா பார்ப்பதற்கு? இல்லாததனால் பொய் என்று சொல்வதும் பொருந்தாது. மக்களுக்கு ஈடுபாடு வந்து, அதன்மூலம் அவர்கள் உயர்வதானால், உயர்ந்தவல்ல ஒரு கதையைப் புனைவது பொய்யாகாது. பிற்காலத்தில் இவர்கள் மிகவும் சாமர்த்தியமாகக் கதைகளை வடமொழியில் எழுதி வைத்தார்கள்; இதற்கு உதாரணமாகத் தென்குடித்திட்டை என்ற பாடல் பெற்ற தலத்தின் புராணத்தைக் குறிப்பிடலாம். 2170 சுலோகங்கள் 40 அத்தியாயங்களாக இதில் உள்ளன. இது சனற்குமார சம்மிதையின் சஹ்யஜா காண்டத்தில் இருப்பதாகச் சொல்லப்பட்டது. இந்தப் புராணத்தின் முக்கிய நோக்கம் 120 வகைப்பட்ட பஞ்சாட்சர மந்திரத்தையும் அவற்றுக்குரிய யந்திரம் மூர்த்திகள் சிவபெருமானுடைய உறுப்புக்கள் முதலிய செய்திகளையும் சொல்வ தாகும். இது செய்யப்பெற்ற காலம் 14 ஆம் நூற்றாண்டுக்குப் பிறகுதான் இருக்கும். எனவே பிற்காலத்தில்தான் வடமொழித் தலபுராணங்கள் பெரும்பகுதி எழுதப்பட்டன என்பதற்கு இது சான்றாகும்" என்பர்.

வடமொழியில் இயற்றப்பட்டிருக்கும் தலபுராணங்கள் சிலவற்றில் ஊரின் பெயர் முதலியன விளங்காத இடத்தில் தமக்குப் புரிந்த அளவில் பெயரை வடமொழியில் மொழிபெயர்த்து எழுதப்பட்டுள்ளன. அதற்குத் தக்கவாறு கதைகளையும் மாறுபட எழுதியுள்ளனர். எறும்பியூர்-மலையுள்ள நாடு என்று பொருள் உள்ள இந்த ஊர் எறும்பு ஊர்ந்தபுரி என்று பொருள்படும்படி பிபீலிகாபுரம் என்று எழுதப்பட்டிருக்கிறது என்பர் வேதாந்த சிரோமணி பிரம்மஸ்ரீ கே. இராஜகோபால சாஸ்திரிகள் அவர்கள்.[1]

மேலும், தமிழ்த் தலபுராணங்கள் வடமொழியிலிருந்தே மொழி பெயர்க்கப்பட்டன என்பதில் காணும் சில ஐயங்களை ஆய்வாளர் சுட்டுவதும் இவண் குறிப்பிடத்தக்கது.[2]

1. தமிழகத்தில் சிறப்புற்றிருக்கும் நூற்றிற்கும் மேற்பட்ட ஊர்கள் வடமொழிப் புராணங்களில் மிக விரிவாக, அவற்றைவிடச் சிறந்த தலம் ஏதும் தரணியில் இல்லை என்ற அளவிற்குப் போற்றியிருக்கையில் வடநாட்டுத் தலங்கள் ஏன் அந்த அளவிற்குப் பாராட்டப்படவில்லை?

2. தம்முடைய மொழியில் நூலியற்றும் பொழுது மிகத் தொலைவில் உள்ள இடங்களை, பிற இனத்தவர் வாழும் இடங்களை, தமக்குரியனவற்றை விட உயர்ந்ததாகச் சிறப்பித்துப் போற்றுதல் இயலுமா?

3. வடநாட்டுப் பகுதிகளைவிடத் தென்னாட்டுத் தலங்கள்தான் இறைவனுக்கு உகந்த இடங்கள் என்பதை ஏற்றுக் கொள்கிறார்களா? அவ்வாறாயின் இன்றும் அம்மனநிலை தொடர்கின்றதா?

4. தலபுராணங்கள் தம் மூலமாகக் கொள்ளும் பத்மபுராணம், பிரமாண்ட புராணம் போன்றன திருமாலைச் சிறப்பிப்பதாக அமைகின்றன. ஆனால் அவை உரைக்கும் தமிழ்த் தலபுராணங்கள்

---

1. ஞானசம்பந்தம், வெள்ளி விழா மலர், பக். 76-78.
2. டாக்டர் ச. சிவகாமி, நோக்கமும் பயனும்-தலபுராணம் கட்டுரை, தமிழிலக்கியக் கொள்கைக் கருத்தரங்கு-120, 5.9.1984, பக்.2.

சிவன் பெருமை நவில்வதாக அமைகின்றன, வைணவத் தலங்களைச் சிறப்பிக்கவில்லை? இதுவும் ஐயத்திற்குரியதே.

இவ்வாறு பல ஐயங்கள் இம்மொழிபெயர்ப்புப் பற்றி எழுகின்றன. வடமொழி, தமிழ்மொழி நூல்களின் அமைப்பு, மரபு போன்றவற்றில் காணும் சில முக்கிய வேறுபாடுகளை ஆராயின் இத்தகைய ஐயங்கள் பல தெளிவாகும்.

## தமிழ்த் தலபுராணங்களுக்கும் வடமொழித் தலபுராணங்களுக்குமுள்ள வேறுபாடு

தமிழ்த் தலபுராணங்களுக்கும் வடமொழியிலுள்ள தலபுராணங்களுக்கும் முக்கிய வேறுபாடுகள் பல உள்ளன. வடமொழியில் பலியிடுதல் போன்ற கீழ்நிலைச் செயல்கள் கூறப்பெற்றுள்ளதை அறிகிறோம். ஆயின், தமிழ்த் தலபுராணங்கள் எதிலும் இத்தகைய செயல்கள் கூறப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இதற்கான காரணங்களை, இந்திய தத்துவ சாத்திர வரலாறு எழுதிய திரு. சுரேந்திரநாததாஸ் குப்தா அவர்களின் மேற்கோளுடன் பின்வருமாறு எடுத்துக் காட்டுகிறார் திரு. மு. அருணாசலம் அவர்கள்.

வடநாட்டில் சிவ வழிபாடு இருந்துங்கூட, அங்கு காபாலிகம், காளாமுகம் போன்ற சைவ சமயப் பிரிவுகள் இருந்தன. இப்பிரிவுகளில் வேதவிரோதமான ஒழுக்கங்களும் மிகுதியாக நிலவின. உயிர்ப்பலி, கட்குடி முதலியன அதிகம். நரபலியும் நடந்தது. தேவாரத்தில் சீபர்ப்பதம் என்று புகழ்ந்து தேவாரம் பாடியுள்ள தலமாகிய ஸ்ரீசைலம் என்னும் மல்லிகார்ச்சுனத்திலும் நரபலி நடந்ததென்று அறிஞர் ஆராய்ந்து சொல்லியிருக்கின்றனர். வடநாட்டிலிருந்து தென்னாடு வந்த பிராமணர் அத்தலத்தைத் தாங்கள் மேற்கொண்ட போது, முன் இருந்த மக்களோடு ஒன்றி, தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்ட எண்ணி இப்பலி முதலியவற்றுக்கும் இடங்கொடுத்து இங்குள்ளாரை வசப்படுத்திக் கொண்டார்கள் என்பர். அத்தலத்திற்குரிய தல மகாத்மியங்கள் பலி முதலியன கூறுகின்றன. திருநீறு பூசுதல் என்ற வழக்கம் தமிழ்நாட்டுக்கும் வடநாட்டுக்கும் பொதுவாயினும், அவர்களுடைய கீழான ஆசாரங்கள் தமிழ்நாட்டுக்குத் தொடர்பில்லை. மாரி, பிடாரி, திரௌபதி முதலான கோயில்களில் மிருகபலி இருந்திருக்கலாம். புலால் மறுத்தலை முதல் கொள்கையாகக் கொண்ட சிவாலயங்களில் எந்த உயிர்ப்பலி பற்றிய பேச்சும் எழவியலாது. உயிர்ப்பலி காரணமாக வடக்கெல்லாம், சிவாசாரியர்களையல்லாமல், பிற பூசாரிகளும் ஆலயங்களில் பூசை செய்வதுண்டு. தமிழ்நாட்டில் மட்டும் அன்று தொட்டு இன்றுவரை சிவாசாரியரே பூசை செய்யும் வழக்கம் அகலாதிருக்கிறது. வடமொழிப் புலமையைப் பெற்றிருந்த சங்கரர், இதுவே சைவம் என்று பாசுபதத்தைப் பெரிதும் கண்டிக்கிறார்; இராமானுசர் வேத விரோதம் என்று சொல்லிக் காபாலிகத்தையும் காளா முகத்தையும் கண்டிக்கிறார். இவற்றுக்கும் தமிழருடைய சைவத்துக்கும் சம்பந்தமில்லை. தலபுராணங்கள் . பாடுகின்ற சிவாலயங்கள்யாவும், இந்தக் கீழ்நிலையை அறியாத உயர்ந்த சைவ

சித்தாந்தத்தையே பேசுகின்றன என இவ்வாறு இவர் விளக்குவர்.[1] இந்நிலையும் சிந்திக்கத்தக்கதே.

புராண மரபு வடமொழிக்கும் தென்மொழிக்கும் பொது வாயினும் வெளிப்பாட்டு முறையில் சில வேறுபாடுகளும் உள்ளன. வடமொழியில் பெரும்பாலும் தெய்வங்களைப் பற்றிய வரலாற்றுச் செய்திகளே மிகுதி. தென்மொழியில் தெய்வங்களைப் பற்றிய வரலாறுகள் யாவும் காவியச் சுவையும் வருணனைப் பகுதிகளும் நிறைந்து யாக்கப்பெற்றுள்ளன.

## தலபுராணம்-தமிழுக்கே உரியது

குறிப்பிட்ட ஓர் இடத்தினைச் சிறப்பித்துரைத்தல் என்பது தமிழரிடம் தொன்று தொட்டு வழங்கி வரும் ஒரு மரபு ஆகும். சங்க காலத்திலேயே புலவரையும் புரவலரையும் ஊர்ச்சிறப்புடன் குறிக்கக் காண்கிறோம். தலைவியின் நலனைப் பெருமைப்படுத்த புகழ்பெற்ற ஊரினை உவமையாகக் கூறும் சிறப்பும் சங்க இலக்கியங்களிலேயே உண்டு.

"பகல்கொள் விளக்கொடு இராநாள் அறியா
வெல்போர்ச் *சோழர் ஆமூர்* அன்ன இவள்
நலம் பெறும் சுடர்நுதல்".

(ஐங்குறுநூறு 56 : 2-4)

என்பது ஐங்குறுநூற்றில் வரும் ஒரு தலைவி பற்றிய வருணனை ஆகும்.

காப்பியங்களில் தலைவன் தலைவியரின் இருப்பிடத்தைப் போற்றும் வகையில் நாட்டுவளம், நகர்வளம், நீர்வளம் பற்றிப் பாடு வதையும் காணலாம். அரசனின் பத்து அங்களுள் ஒன்றாக ஊரும் அமைதலை இலக்கண நூல்களும் (வெண்பாப் பாட்டியல், செய்யுளியல்-19) விளக்கக் காணலாம்.

பக்தியிலக்கியத்தின் தோற்றுவாய்களுள் ஒன்றாக அமையும் திருமுருகாற்றுப்படை மற்றும் பரிபாடலில் அமையும் செவ்வேள் பாடல்கள் திருமுருகனின் உறைவிடங்களையும் அடியவர் அவனருள் பெற்று உய்தலையும் காட்டுகின்றன. புரவலரையும், வீரரையும் போற்றிய சங்க மரபு, இறைவனையும் அவன் அடியாரையும் போற்றும் மரபாக மாறி வளர்ந்ததைப் பக்தி இலக்கியங்களில் காண்கிறோம். இறைவனைப் பாடுங்கால், அவன் எழுந்தருளியிருக்கும் தலம், அவன் சிறப்பு, அவன் அடியாருக்கு அருளிய தன்மை என்பனவற்றைப் பாடு பொருளாக அமைத்து இலக்கியங்களைப் படைக்க முற்பட்டனர். காரைக்காலம்மையார் முதலாக வந்த திருப்பதிகங்கள் பல இவ்வாறு அமைக்கப்பெற்றன. மூவர் முதலிகள் இதில் சிறப்பிடம் வகிக்கின்றனர். இப்பதிகங்களுடன் அந்தாதி, மாலை, கோவை, பிள்ளைத் தமிழ், உலா போன்று பல்வேறு இலக்கிய வகைகளிலும் ஒரு குறிப்பிட்ட ஊர்ச்சிறப்பைக் கூறும் பாங்கு தொடர்ந்து காணப்படுகிறது.

1. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு 16 ம் நூ. ப. 20.

பாட்டுடைத் தலைவனின் ஊரைச் சிறப்பித்துக் கூறும் நூல்களை ஊரின்னிசை, ஊர்நேரிசை என்றே பாட்டியல் நூல்கள் காட்டுகின்றன. ஊர்வெண்பா போன்றவை ஊர்ச்சிறப்பினை மட்டுமே விளக்கு வனவாக அமைகின்றன. இவ்வாறு தலச்சிறப்பினைப் பாடும் மரபு தமிழில் தொன்றுதொட்டு வளர்ந்து வந்துள்ளதைக் காணலாம்.

'நீரின்றியமையாது உலகு' என்பது தமிழர்தம் தலையாயக் கொள்கை. எனவே பாட்டுடைத் தலைவனைச் சிறப்பிக்கும்பொழுது அவன் நாட்டின் நீர்வளத்தைத் தவறாது குறிப்பதும் மரபாகும். சுனை, ஆறு, கடல், குளம் போன்றவற்றில் நீராடுதலைச் சிறப்பித்துக் கூறாத நூல்கள் தமிழில் குறைவு. பல இலக்கியங்களில் புலவர்கள் நீராடும் காட்சிகளை வருணிப்பர். பல நீர்நிலைகளை வழிபாட்டிற் குரியதாகக் கொண்டிருத்தலைப் பரிபாடலிலும் (11:134-140), சிலப்பதிகாரத்திலும் (9:57-61) காண்கிறோம்.

இவ்வாறு, மூர்த்தி, தலம், தீர்த்தம் எனப் பின்னாளில் கூறப்பெற்ற நிலை மிக முற்காலத்திலிருந்தே தமிழில் தோன்றி வளர்ந்து வந்தது அறியத் தக்கதாகும்.

மேலும், தலபுராணம் என்னும் இலக்கியத்தை அறியாத, பாமர மக்கள் அனைவரும் ஒரு குறிப்பிட்ட தலத்தின் பழைய வரலாறுகளை வழிவழியே கூறி வருவது வியப்புக்குரியதாகும். தலங்கள் பற்றிய பழைய கதைகளில் இங்குள்ளோர் நம்பிக்கை கொண்டு போற்றி வருவதும் மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். சிறந்த தலங்களில் குறிப்பிட்ட நாள்களில் சிறப்பு வழிபாடுகளை (கார்த்திகை நாள், திருவண்ணாமலை தீபம், கும்பகோண மாசிமக நீராடல் போன்றன) மேற்கொள்ளுதல், நேர்த்திக்கடன் செலுத்துதல் போன்றவை தமிழரிடையே என்று தோன்றியது என்றே அறுதியிட்டுக் கூற இயலவில்லை. இந்நிலையில் பன்னெடுங்காலமாக வழிவழியே தோன்றி வளர்ந்த இப்பத்தி நிலைகளே தலபுராண இலக்கியங்களுக்கு அடிப்படையாயின என்பதே உண்மை.

இருப்பினும், தமிழ்த் தலபுராணங்கள் வடமொழியிலிருந்தே தோன்றின என்று சிலர் கூறுவதற்கு அக்காலச் சூழ்நிலைகளே காரணம் என்று கூறலாம்.

தலமான்மியங்களைப் பதினெண் புராணங்களில் ஒன்றினோடு இயைத்துரைப்பது அவற்றின் பெருமையை மிகுத்துக் காட்ட வேண்டு மென்னும் கருத்தினாலாம். . . . . . . . . . . யாதானும் ஒரு தமிழ் நூல் ஆரியத்தினின்று மொழி பெயர்க்கப்பட்டதனால் மட்டும் யாவரும் ஒத்துக் கொள்ளத்தக்க பெருமையுடைதாம். அதுவும் வேத ஆகம புராண இதிகாசங்களில் ஒன்றைச் சார்ந்ததாகவும் பின் நிகழப் போகிற வரலாறுகளை முன்னரே கூறி வைத்ததாகவும் இருக்கவேண்டும் என்றும் இத்தகைய போலிக் கொள்கைகள் பிறருடைய பழக்கங் காரணமாகவே சென்ற சில நூற்றாண்டுகளிலிருந்து மக்களிடையே

தோன்றின. அக்காலத் தமிழ்ப்புலவர் வடமொழியிலும் புலமை பெற்றிருந்தனர். எனவே தமிழகத்தில் நிலவிய தமிழர் எண்ணங்களுக்கு வடமொழி திறம்புசி அவற்றை வடமொழி மூலம் என மக்களை நம்பச்செய்து தமிழ் நூல்களை அவற்றின் மொழிபெயர்ப்பாகக் கொண்டனர் என்பர்.[1] இவற்றினின்றும் ஒருசில விதி விலக்குகள் உண்மையிலேயே வடமொழியாளர்களால் தோற்றுவிக்கப்பட்டதாக இருக்கலாம். அவற்றை நீக்கிய நிலையில் பொதுநிலை எண்ணமாகவே இக்கருத்து உரைக்கப்படுகிறது.

எனவே, தமிழிலுள்ள தலபுராணங்கள் பெரும்பான்மை தமிழ் மரபோடு தமிழர்களால் இயற்றப் பெற்றவை என்பதும், ஒருசில நூல்கள் மட்டும் தமிழகத்திலிருந்த வடமொழி நூல்களின் தழுவல் என்பதும் தெளிவாகிறது. தலபுராணங்களின் விரிந்த பரப்பையும், செய்யுள்களின் எண்ணிக்கைப் பெருக்கத்தையும் நோக்குமிடத்து இவை தமிழுக்கே உரியன என்பதில் எவ்வித ஐயமுமில்லை.



1. ந. மு. வேங்கடசாமி நாட்டார், பரஞ்சோதி முனிவரும் திருவிளையாடலும், செந்தமிழ்ச் செல்வி, தொகுதி-5, 1927-28, பக். 16, 17.

# தலபுராண நூலாசிரியர்கள்

ஒரு நாட்டின் பெருமைக்கும் புகழுக்கும் காரணமாவன பலவற்றுள் அந்நாட்டில் தோன்றும் புலவர் பெருமக்களின் சிறப்பும் ஒன்றாகும்.

பெருங்கவிஞர் ஹோமர் வாழ்நத பண்டைக் கிரேக்க அரசியலுலகம் அழிந்துபட்டதாயினும், அவர்தம் கவிதை இன்றும் உயிர்ப்புடன் உலவி வருகிறது. உரோம நாட்டின் பழம்பெருஞ் சிறப் பெல்லாம் மறைந்து போயிற்றெனினும், வர்ஜில் என்பவரின் கவிதை கள் இந்நாளிலும் வாழ்ந்து கொண்டிருக்கின்றன. எந்த உஜ்ஜயினி மாநகரம் காளிதாசர் பெருமானால் அணிசெய்யப் பெற்றதோ, அந்த உஜ்ஜயினி மாநகரம், தன் நினைவைக் காளிதாசர்பால் ஒப்படைத்து விட்டு நிலை குலைந்து தளர்ந்தது. ஆனால் காளிதாசர் கண்ட கவிதைக் கற்பனைக் கனவுகள், உயிருடைய ஒருவனின் குரலொலியைப் போல, இன்றும் நம்மைக் கவர்ந்து இயக்கி நிற்கின்றன. இடைக்காலப் பெருவேந்தர்கள் பலரும் இறந்து போனார்கள். ஆனால் தாந்தேயின் கவிதைகள் இன்றும் விரும்பிப் பயிலப் பெறுகின்றன. ஆங்கில அரசாட்சிகள் நிலைகுலைந்து போனாலும் ஷேக்ஸ்பியர் காரணமாக, எலிசபெத் அரசியாரின் காலம் ஆங்கில மொழி நிலைத்துள்ள அளவும் பாங்குற நினைத்துப் பாராட்டப்பெறும். இவ்வாறு ஒரு மொழியில் வல்ல நூலாசிரியரின் அழியாத் தன்மையைப் போற்றியுரைப்பர் அறிஞர் டாக்டர். எஸ். ராதாகிருஷ்ணன் அவர்கள்.

இந்நிலையில் தமிழ்மொழியில் தோன்றிய நூலாசிரியர்கள் பலரும் நினைக்கத்தக்கவர்கள். காலந்தோறும் ஆட்சி செலுத்திய அரசர்கள் பெயர்களெல்லாம் நிலைத்து நிற்பதில்லை. ஆனால், சங்க நூலாசிரியர்களும், வள்ளுவரும், இளங்கோவும், கம்பரும், காலந் தோறும் நினைக்கத்தக்கவர்களாக உள்ளனர். இவ்வாறே பிற்காலப் புலவர்கள் பலரும் போற்றத்தக்கவராவர்.

இவ்வகையில் தமிழ்த்தலபுராணங்களை இயற்றியளித்துள்ள ஆசிரியர்கள் இவண் குறிப்பிடத்தக்கவர்களாவர். இன்று கிடைக்கக்கூடிய செய்யுள் நடையிலான தலபுராணங்கள் சிலவற்றிற்கு ஆசிரியர் பெயர் தெரியவில்லையாயினும், இருநூறுக்கும் மேற்பட்ட தலபுராண ஆசிரியர்களைப் பற்றி நாம் அறிய முடிகின்றது. தமிழ் நாட்டில் தலங்கள் உள்ள வரையில், அத்தலங்களில் கோயில்கள் உள்ள வரையில், தலங்களும் கோயில்களும் பற்றிய இலக்கியங்கள் உள்ள வரையில், அவ்விலக்கியங்களைக் கற்றுச் சுவைத்து மகிழ்ந்து போற்றும் மனமுடைய மக்கள் உள்ள வரையில் இந்தத் தலபுராண ஆசிரியர்கள் நினைக்கப் பெறுவர்.

## பன்னிரண்டாம் நூற்றாண்டு முதல் இன்று வரை

முதல் தமிழ்த் தலபுராணமாக நாம் அறிவது கன்னிவன புராணம். இதன் ஆசிரியர் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த வீரைத் தலைவன் பரசமயக்கோளரி. இவர் முதல் குலோத்துங்கன் காலத்தவர் என்பதைக் கல்வெட்டுச் செய்தியால் அறிகிறோம். இந்நூல் இன்று கிடைக்கவில்லை.

திருவாலவாயுடையார் திருவிளையாடல் என்னும் நூலே இன்று நமக்குக் கிடைக்கும் பழமையான தலபுராண நூலாகும். இதன் ஆசிரியர் கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த பெரும்பற்றப்புலியூர் நம்பி ஆவார்.

கோயிற் புராணம் என்னும் சிதம்பர புராணம் கி. பி. பதினான்காம் நூற்றாண்டில் இயற்றப்பெற்றது. இதன் ஆசிரியர் கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியர் ஆவார். இவரே பின்னால் வந்த தலபுராண ஆசிரியர்கட்குச் சிறந்த வழிகாட்டியாக விளங்குகிறார்.

பதினாறாம் நூற்றாண்டு, தமிழ்ப் புராண வரலாற்றில் சிறப்பான இடம் பெறுகிறது. இக்காலத்தில் இருபத்திரண்டு ஆசிரியர் செய்த நாற்பத்தொரு புராணங்கள் தோன்றியுள்ளன. இவற்றுள் 36 சைவ புராணங்கள், 5 வைணவப் புராணங்கள். இவற்றுள், வைணவ தலபுராணங்கள் 2, சைவ தலபுராணங்கள் 26. இந் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றியவை அனைத்தும் தலபுராணங்களே என்பது குறிப்பிடத்தக்கது.

பதினேழாம் நூற்றாண்டில் சைவ எல்லப்ப நாவலரும், சிவப்பிரகாச சுவாமிகளும், பரஞ்சோதி முனிவரும் சிறப்பிடம் பெறுகின்றனர். பதினெட்டாம் நூற்றாண்டில் தலபுராண வளர்ச்சிக்கு பெருங்காரணமாகத் திகழ்ந்தவர்கள் சிவஞான முனிவரும், கச்சியப்ப முனிவரும் ஆவர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் தனிப்பெரும் புலவராக விளங்கித் தமிழ்த் தலபுராண வரலாற்றிலேயே மிகுதியான எண்ணிக்கையில் தலபுராணங்களை இயற்றி, சாதனை புரிந்தவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்.

சுமார் நானூறு ஆண்டுகளாக வளர்ந்து வந்த தலபுராண ஆசிரியர் எண்ணிக்கையானது பலவிதமான காரணங்களால் வெகுவாகக் குறையலாயிற்று. இருப்பினும், இந்த இருபதாம் நூற்றாண்டிலும் தலபுராணம் பாடும் புலவர் உளர் என்பதை மெய்ப்பிக்கும் வகையில் சிலர் நூல்களை இயற்றியளித்துள்ளனர்.

## ஒரே ஆசிரியர் பல தலபுராணங்களைப் படைத்தல்

பெரும்பாலான ஆசிரியர்களின் பெயரில் ஒவ்வொரு தலபுராணங்களே கிடைக்கின்றன. ஆயினும் ஒருவரே ஒன்றுக்கு மேற்பட்ட தலபுராணங்களை இயற்றியுள்ளமையையும் நாம் அறிய முடிகின்றது. எடுத்துக் காட்டாகச் சிலரைக் குறிப்பிடலாம்.

## இரண்டு தலபுராணங்களை இயற்றியவர்கள்

அப்பாவையர், அரிகர ஐயர், அருணாசலக் கவிராயர், இளையான் கவிராயர், கந்தசாமி சாமிகள், கந்தசாமிப் புலவர்,

கருமுத்துப் பிள்ளை, கிருபானந்த வாரியார், கோவிந்த பிள்ளை, சுப்பிரமணியக் கவிராச மூர்த்திகள், ஞானக் கூத்தர், ஞானப்பிரகாசர், திருமலை வேற்கவிராயர், பரஞ்சோதி முனிவர், புராணத் திருமலைநாதர், மறைஞானசம்பந்தர், முத்துதாசர், மெய்ஞ்ஞான முனிவர், வடுகநாத தேசிகர், வாசுதேவ முதலியார், வேலைய சுவாமிகள், வைத்தியநாத தேசிகர் போன்றோர் ஒவ்வொருவரும் இரண்டிரண்டு தலபுராணங்களை இயற்றியளித்துள்ளனர்.

## மூன்று தலபுராணங்களை இயற்றியவர்கள்

அகோர தேவர், அம்பலவாண தேசிகர், இராமானுச நாவலர், இரேவண சித்தர், கலியாண சுந்தர முதலியார், சிவக்கொழுந்து தேசிகர் போன்றோர் மூன்று தலபுராணங்களை இயற்றியவர்களாவர்.

## நான்கு தலபுராணங்களை இயற்றியவர்கள்

சொக்கலிங்கஞ் செட்டியார், நிரம்ப அழகிய தேசிகர், பொன்னாயிரங் கவிராய மூர்த்திகள் என்னும் சிந்தாமணிப் பிள்ளை ஆகியோர் நான்கு தலபுராணங்களை இயற்றியவர்களாவர்.

## ஐந்து தலபுராணங்களை இயற்றியவர்கள்

ஆதியப்பனார், கச்சியப்ப முனிவர், கனகசபைக் கவிராயர் ஆகியோர் ஐந்து தலபுராணங்களைப் பாடியவர்களாவர்.

## ஏழு தலபுராணங்களை இயற்றியவர்

ஏழு தலபுராணங்களைப் பாடிய பெரும்புலவர் சைவ எல்லப்ப நாவலர் ஆவார்.

## ஒன்பது தலபுராணங்களை இயற்றியவர்

தஞ்சை சுப்பிரமணிய ஐயர் என்பவர் ஒன்பது தலபுராணங் களைப் பாடிய பெருமைக்குரியவராகிறார்.

## இருபத்திரண்டு தலபுராணங்கள்ள இயற்றியவர்

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இருபத்திரண்டு தலபுராணங்களைப் பாடிப் புராண உலகில் பெரும் பெயர் பெற்றவராவார்.

## ஒரு தலபுராணத்தை இருவர் அல்லது மூவர் இயற்றிமுடித்தல்

ஒரே தலத்திற்கு வெவ்வேறு ஆசிரியர்கள் தலபுராணங்கள் இயற்றியிருப்பது ஒரு நிலை. ஆயின், ஒரு தலத்திற்குரிய ஒரு புராண நூலை ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர்கள் இயற்றி முடித்திருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

காஞ்சிப் புராணத்தின் முதற்காண்டத்தைச் சிவஞான முனிவரும், இரண்டாங் காண்டத்தைக் கச்சியப்ப முனிவரும் இயற்றியுள்ளனர்.

சங்கர நாராயண சுவாமி கோயிற் புராணத்தைச் சிவலமாற பாண்டியனும், முத்து வீரப்பக் கவிராயரும் பாடியுள்ளனர்.

திருப்பாதூர்ப் புராணம், கச்சியப்ப ஞானப்பிரகாசரும் அவர் மாணவரும் இணைந்து இயற்றியதாகும். இவ்வாறே, திருவிடைமூர்ப் புராணத்தை அசலாம்பிகையம்மாளும் குழந்தைவேலுப் பிள்ளையும் பாடி முடித்துள்ளனர்.

திருக்கருவைத் தலபுராணம் பாடிய சொ. வீரப்ப முதலியாரும் ச. திருமலை வேற்கவிராயரும் மேலும் ஒரு புதுமையைச் செய்துள்ளனர். இந்நூலின் பாயிரம் முதல் இறுதி வரையில் இருவரும் மாறி மாறிப் பாடியுள்ளனர். வீரப்ப முதலியாரவர்களாற் சொல்லப்பட்ட சருக்கங்கட்கும் சில பாக்களுக்கும் அவற்றின் முதலில் வீ-எனவும், திருமலைவேற் கவிராயரவர்களாற் சொல்லப்பட்ட சருக்கங்கட்கும் சில பாக்களுக்கும் அவற்றின் முதலில் தி-எனவும் குறியிடப்பட்டுப் பதிப்பிக்கப் பெற்றிருப்பது சுட்டத்தக்கதாகும்.

சீகாளத்திப் புராணம் மட்டும் மூவரால் பாடப்பெற்றதாகும். முதலில் கருணைப் பிரகாசரும் பிறகு சிவப்பிரகாசரும், பிறகு வேலையருமாகப் பாடி இந்நூலை நிறைவு செய்துள்ளனர். உடன் பிறந்த இம் மூவரும் ஒருவர் மறைவுக்குப் பின் ஒருவர் பாடி முடித்திருப்பது குறிக்கத்தக்கது. முதலில் தோன்றிய தலபுராணம் குறையாக இருத்தல் கூடாது என எண்ணிய அவர்தம் எண்ணம் மிகவும் போற்றத்தக்கதாகும்.

இத்தலபுராண ஆசிரியர்கள் அனைவருமே இருமொழி வல்லவர்கள். பல்துறை அறிஞர்கள், பல நூல்களைப் படைத்தவர்கள். தேவார திருவாசகங்களில் ஈடுபாடு மிக்கவர்கள். சைவ சமய சாத்திரம், வைணவக் கோட்பாடுகள், பிற சமயக் கருத்துக்கள், தத்துவக் கருத்துக்களைத் தெளிந்தவர்கள். வித்தாரக் கவிஞர்கள், சித்திரக் கவிஞர்கள், நால்வகைப் புலமைத்திறம் மிக்கவர்கள். இவர்களைப் பற்றி அறிய வேண்டின், பழைய புலவர் வரலாறுகளில் சிலருடைய முழு வரலாறுகள் கிடைக்கும். ஆயின், பலருடைய முழு வரலாறுகளும், அவர்கள் இயற்றிய பிற நூல்கள் ஆகியன பற்றியும் அறிய இயலவில்லை. இவ்வாசிரியர்கள் பலர் தம்மைப் பற்றிய அறிமுகத்தை அதிகமாக எழுதிச் செல்லாததே இதற்குக் காரணமாகும்.

இங்கு அறியப் பெறும் தலபுராண நூலாசிரியர்களைப் பற்றிச் சுருக்கமாகப் பின்வருமாறு காணலாம்.

***அகோர தேவர் (17 நூ.):*** இவர் அந்தணர் என்றும், மறவர் என்றும் கூறுவர். காளையார்கோயிற் புராணமும் வேதாரணிய புராணமும் இயற்றியுள்ளார்.

கும்பகோணப் புராணம் ஒன்றும் இவரால் இயற்றப்பெற்றதாகத் தெரிகிறது.

***அசலாம்பிகையம்மாள் (19 நூ.)*** : நடுநாட்டில் உள்ள திருவிடைமூர்த் தலபுராணத்தை இவர் பாடியுள்ளார். இதன் இரண்டாம் பாகத்தைக் குழந்தைவேலுப் பிள்ளை என்பவர் பாடி முடித்துள்ளார்.

***அட்டாவதானம் சொக்கலிங்கப் புலவர் (19 நூ.)***. சேலம் நகரத்திலே வேளாண் குலத்திலே சுமார் நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்பு தோன்றியவர். கல்வியை நன்கு கற்று எண்வகை அவதானமுஞ் செய்யும் ஆற்றலும் பெற்றவர். இவருடைய வடமொழிப்

புலமையால், வடமொழியிலிருந்த சேலம் பாவநாசத் தலபுராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடினார். இப்புராணத்தைத் தவிரத் 'திருவள்ளுவர் புராணம்' என்னும் நூலையும் இவர் பாடியுள்ளார்.

*அடிகளாசிரியர் (20 நூ.)*: தமிழ் இலக்கண இலக்கியங்களில் மிகுந்த பயிற்சியும் ஈடுபாடும் கொண்ட இவர் தொல்காப்பிய உரை வளம் கண்டவர். பல நூல்களையும் இயற்றியவர். மயிலம் சிவஞான பாலய சுவாமிகளிடம் ஈடுபாடு கொண்ட இவர் திருஅரசிலிக் காதை என்னும் தலபுராணத்தை இயற்றியளித்துள்ளார்.

*அதிவீரராம பாண்டியர் (16 நூ.)*: பாண்டிய நாட்டில் தென் காசிப் பகுதி நகரத்தில் சிற்றரசராக இருந்த இவர் பழந்தமிழ் நூல்களில் ஆழ்ந்த புலமையுடையவர்.

நைடதம், வெற்றிவேற்கை, கொக்கோகம் போன்ற நூல்களை இயற்றிய இவர், காசிகாண்டம், கூர்ம புராணம் ஆகிய புராண நூல்களையும் இயற்றியுள்ளார்.

*அந்தகக்கவி வீரராகவ முதலியார் (18 நூ.)*: தொண்டை மண்டலத்தில் உள்ள உழலூர் என்னும் ஊரில் பரம்பரைச் சைவ வேளாளர் குலத்தில் பிறந்தவர். பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பாதியில் வாழ்ந்த இவர் புறக்கண் இல்லாதவர். இளமையிலேயே கம்பராமாயணம், பெரியபுராணம் போன்ற நூல்களில் ஈடுபாடு கொண்டவர். பல தல வரலாறுகளை அறிந்து சிவபெருமானுடைய திருவிளையாடல்களைப் போற்றியுணர்ந்தவர்.

உலா, பிள்ளைத்தமிழ், கோவை எனப் பல பிரபந்தங்களைப் பாடியுள்ள இவர், அக்காலத்தில் தொண்டை நாட்டில் அரசு அதிகாரி யாகயிருந்த திம்மைய அப்பையனென்பவருடைய வேண்டுகோளின் படி திருக்கழுக்குன்றத்திற்குரிய வடமொழிப் புராணத்தை ஆராய்ந்து அதைத் தமிழ்ச் செய்யுளால் இயற்றியுள்ளார்.

*அப்துல் காதிறு நாவலர் (19 நூ.)*: தமிழ் நூல்கள் பலவற்றை இயற்றிய இவர் கோட்டாற்றுப் புராணமும் இயற்றினார் என்பர்.

*அப்பாவையர். க (20 நூ.)*: தென்னார்க்காடு மாவட்டம் பண்ணுருட்டி என்னும் ஊரில் இருந்தவர் இவர். திருநாவுக்கரசரிடத்தில் பேரன்புகொண்டிருந்தமையால் இவர் பெயர் 'வாகீச பக்த நாவலர்' எனவும் வழங்கப்பெறும். இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த இவருடைய தந்தையார் பெயர் மணி ஐயர். அப்பாவையர் காலக் கணிதத்திலும் சிறந்த புலமையுடையவர். இவருடைய காலக் கணித நூலுக்குத் தாண்டவ மாலை என்று பெயர். துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகள் மீது பிள்ளைத்தமிழ் நூலொன்றும் பாடியுள்ளார்.

இவர், புட்பாசல புராணம், திருவதிகைப் புராணம் போன்ற புராணங்களையும் இயற்றியுள்ளார்.

*அம்பலவாணக் கவிராயர் (19 நூ.)*: இவர், காங்கேயம் அருகிலுள்ள சிவன்மலைப் புராணத்தை இயற்றியளித்துள்ளார்.

***அம்பலவாண நாவலர், யாழ்ப்பாணம்:*** ஆராவமுதாசாரியர் பாடிய திருச்சுழியற் புராணத்தின் பிற்பகுதியில் சுந்தரர் வரலாற்றை இவர் எழுதிச் சேர்த்துப் பதிப்பித்துள்ளார்.

***அம்பலவாண தேசிகர், திருவிடைமருதூர்:*** சோழ நாட்டிலுள்ள திருக்கருப்பறியலூர்ப் புராணத்தை இவர் இயற்றியளித்துள்ளார். இது ஆதித்தபுரிப் புராணம் என்றும் அழைக்கப் பெறும்.

திருச்சோற்றுத்துறைப் புராணம் பாடியவரும் இவரே யாவார்.

***அம்பலவாண முனிவர் (16 நூ.):*** இவர், தில்லை வளாகத்தைச் சேர்ந்த சாம்பவானோடை என்னும் ஊரினர். திருவுசாத்தானப் புராணம் ஒன்றை இவர் இயற்றியுள்ளார். இவருடைய ஊரில் இவருக்குக் கற்சிலையும் கோயிலும் வைத்துப் பூசித்து வருகின்றனர்.

***அம்மையப்பர் (19 நூ.):*** கொங்குவள நாட்டில் கருணீகர் குலத்தில் தோன்றிய இவர் தென்சேரிகிரிப் புராணம் என்னும் நூலை இயற்றியுள்ளார்.

***அமிர்தலிங்கத் தம்பிரான் (19 நூ.)*** இவர், திருக்கயிலாய பரம்பரை திருவண்ணாமலை ஆதீனத்தில் இருந்தவர். திருமயிலைத் தலபுராணம் இயற்றியவர். இந்நூல் காஞ்சிபுரம் சபாபதி முதலியாரால் உரையெழுதப்பட்டு வெளிவந்துள்ளது.

***அரங்கசாமி ஐயங்கார் (அரங்காச்சாரி) (20 நூ.)*** இவர் சோழவள நாட்டில் திருவரத்துறை என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். இந்நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த இவர் காலக் கணிதத்திலும் தமிழ்ப் புலமையிலும் புகழ் பெற்றவர். அன்பர் சிலர் வேண்டுகோளின் படி இவர் திருவரத்துறைப் புராணம் என்னும் நூலைப் பாடியுள்ளார்.

***அரங்கநாதனார். கு. ஆ. (20 நூ.)*** கொங்கு நாட்டிலுள்ள சொக்கநாதர்மலைத் தலபுராணம் இவரால் பாடப்பெற்றதாகும்.

***அரிகர ஐயர். இரா. (அரிகர பாரதி) (20நூ.):*** இவர் பண்டிவள நாட்டிலே அரிகேச நல்லூரிலே அந்தணர் குலத்திலே தோன்றி, தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுப் புலமையடைந்தவர். இவர் அம்பாசமுத்திரம் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றியவர். அவ்வூரிலுள்ள சிவன்கோயில் தருமகருத்தா தெய்வநாயகம்பிள்ளை என்பவர் கேட்டுக் கொண்டதற்கிணங்கி அம்பாசமுத்திர புராணம் என்னும் அம்மைத் தலபுராணத்தைப் பாடியுள்ளார்.

மொத்தம் 1221 செய்யுட்கள் அடங்கிய இப்புராணத்தில், சருப்பதோபத்திரம், நான்காரைச் சக்கரம், அட்டநாக பந்தம், உபயநாக பந்தம், கோமூத்திரி, முரச பந்தம், ஏக பந்தம், மாலை மாற்று முதலிய சித்திரக் கவிகளும் உள்ளன.

இவர், திருமூலநகரப் புராணமும் மேலும் பல நூல்களையும் இயற்றியுள்ளார்.

***அருணாசலக் கவிராயர் (19 நூ.):*** சீகாழித் தலபுராணத்தை இவர் பாடியுள்ளார்.

***அருணாசலக் கவிராயர். மு. ரா. (19 நூ.):*** இவர் சிவகாசித் தலபுராணம் இயற்றியுள்ளார்.

***அனதாரியப்பர் (16 நூ.):*** தொண்டை மண்டலத்துச் செங்காட்டுக் கோட்டப் பகுதியில் சேயாற்றின் அருகிலுள்ள வாயற்பதி என்ற வயலூரில் வேளாள மரபில் தோன்றியவர் இவர். இளமையில் சோழ நாட்டிலுள்ள ஒரு வேதியரிடம் பயின்றார். திருவாரூருக்கு அருகிலுள்ள கன்றாப்பூர் சிங்கராயன் என்ற வள்ளல் இவருடைய புலமையை அறிந்து தம்முடன் இருக்கச் செய்து போற்றினார் எனத் தொண்டை மண்டல சதகம் கூறும். பின்பு இவர் திருச்சிராப்பள்ளி யருகில் கல்லூர்மன்றை (மன்றச்சநல்லூர்) என்ற ஊர்களில் தலைவனா யிருந்த திருவிருந்தான் என்ற வள்ளலுடைய ஆதரவைப் பெற்று வாழ்ந்து வந்தவர். திருவிருந்தானுடைய அவைப் புலவராய் இருந்த போது, வடமொழியிலுள்ள சுந்தர பாண்டியத்தைத் தமிழிற் பாடுமாறு கேட்கவும், இவர் பாடியதாகவும் இவரே கூறுவர்.

இவருடைய காலம் பதினாறாம் நூற்றாண்டின் இடைப்பகுதி யாகும் (1550 - 1575)

***ஆதியப்பனார், களந்தை ( 18 நூ.):*** இவர் களந்தை என்னும் பொன்விளைந்த களத்தூரினர். தஞ்சைப் புராணம், திருக்களர்ப் புராணம், திருக்கொள்ளம்பூதூர்ப் புராணம், மாயூரப் புராணம் (பழையது), பரிதிவனப் புராணம் ஆகிய தலபுராணங்களை இயற்றியுள்ளார்.

***ஆராவமுதாசாரியர் (19 நூ.):*** இவர் பாண்டிவள நாட்டிலே திருக்கானப்பேருக்கு அருகிலுள்ள திருச்சுழியல் என்னும் ஊரில் வாழ்ந்தவர். இவர்தம் ஊர்ச்சிறப்பைக் கூறுவதாகிய திருச்சுழியற் புராணம் என்னும் நூல் இவரால் இயற்றப்பெற்றது.

சுழிகைப் புலவர் என்றும் இவருக்குப் பெயர்.

***ஆறுமுக நாவலர்:*** தேவகோட்டைத் தலபுராணம் இவர் இயற்றியதாகும்.

***ஆனந்தக் கூத்தர் (16 நூ.):*** பாண்டி நாட்டில் பொருநை நதிக்கரையிலுள்ள வீரவநல்லூர் என்ற ஊரில் பிறந்தவர். இவர், கமலை ஞானப் பிரகாசர் (சத்திய ஞானி) அவர்களின் மாணவர். திருவாரூரில் தம் குருவிடம் பூசையும் ஞானோபதேசமும் பெற்றபின் தலயாத்திரை செய்து கொண்டு காளத்தியை அடைந்தபோது அங்குள்ள அன்பர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க அவ்வூருக்குத் தலபுராணம் பாடினார்.

இவர் பாடிய திருக்காளத்திப் புராணம் மிகவும் விரிவான புராணம், அழகிய நடைச்சிறப்பும் கொண்டது. இவர் செய்யுளின் சிறப்பையறிந்த பெரியோர் இவரைப் 'பரிமள கவிராசன்' என்றே புகழ்ந்தனர். காளத்தியிலிருந்த இவர் இறுதியில் காசியை யடைந்து

அங்கேயே முத்தியடைந்தார். காலம் பதினாறாம் நூற்றாண்டின் இடைப்பகுதியாகும். (1575-1600).

**இராசப்ப கவிராயர் (19 நூ.):** திருவெண்ணெய்நல்லூரில் வாழ்ந்திருந்த இவர் இராசப்ப நாவலர் என்றும் அழைக்கப்பெறுவார் இருநாவலூர்ப் புராணத்தை இவர் இயற்றியளித்துள்ளார்.

**இராமகவிராயர் (18 நூ.):** தொண்டை நாட்டிலே பிறந்த இவர், சென்னை, புதுவை போன்றவிடங்களிலே வாழ்ந்தவர். புதுவை ஆனந்தரங்கப்பிள்ளை ஆகியோர் இவரைப் போற்றி ஆதரித்தனர். இவர் திருவாய்ப்பாடிப் புராணம் இயற்றியளித்ததுடன் பல தனிப் பாடல்களையும் இயற்றியுள்ளார்.

**இராமநாத பிள்ளை (19 நூ.):** இவர் திருமந்திரகுடி என்னும் தூத்துக்குடியில் வாழ்ந்திருந்தவர். மருத்துவம், மந்திரம், சோதிடம் ஆகியவற்றில் வல்லவரான இவர் தூத்துக்குடித் தலபுராணம், திருமந்திரநகர்த் தலபுராண சங்கிரக வெண்பா முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

**இராமாநுச நாவலர் (20 நூ.):** கொங்கு வளநாட்டில் கரடிபாவி என்னுஞ் சிற்றூரில் வேங்கடரங்கப்பிரசங்கியார் என்பவருக்கு மூத்த மகனாகத் தோன்றியவர். இருபத்தைந்து வயதிற்குப் பிறகே கல்வி கற்க முற்பட்டார். பின், இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழையும் நன்கு கற்று 'நாவலர்' என்னும் பட்டமும் பெற்றவர். காரமடை தலபுராணம் இயற்றியளித்துள்ள இவர் சத்திரிய புராணம், சத்தியோபாய் சரித்திரம், சடாசனநியமனம் என்ற நூல்களையும் இயற்றியளித்துள்ளார்.

**இராமானுச நாவலர் (19 நூ.):** சோழநாட்டிலுள்ள ஸ்ரீமுஷ்ணப் புராணம், சுதர்சனகிரி புராணம், திருச்சித்திர கூடல் புராணம் ஆகியவற்றை இயற்றியவராவார்.

**இராமைய அடிகள் (இராமைய சுவாமி நாவலர்) (19 நூ.) :** சோழ வள நாட்டில் மாயூரத்தில் அந்தணர் குலத்தில் தோன்றிய இவர் வடமொழியிலுந் தென்மொழியிலும் வல்லவர். நாகூர்ப் புராணத்தை வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்த்துப் பாடியுள்ளார்.

**இரேவண சித்தர் (16 நூ.):** சிதம்பரத்தில் வாழ்ந்திருந்தவர். அகராதி நிகண்டு என்ற சிறப்புடைய ஒரு நிகண்டும் சிவஞான தீபம் என்ற சித்தாந்த சாத்திர நூல் ஒன்றும் செய்த இவர் மூன்று தலபுராணங் களையும் இயற்றியுள்ளார். திருப்பட்டீச்சரம், திருவலஞ்சுழி, திருமேற்றளி ஆகிய மூன்று தலங்களுக்கும் இவர் புராணம் பாடியதாக இவரே அகராதி நிகண்டு இறுதியில் கூறுவர். (3, 5, 7 ஆம் தொகை)

> "திருப்பட்டீச்சரம் செழுந்தமிழ்ப் புராணம் தெரிந்துநற் சிதம்பர ரேவண சித்தன்;"
> "வலமிகு வலஞ்சுழி வாணர்தம் புராணம் உரைதரும் சிதம்பர ரேவணன்; "
> "திருமேற் றளிக்குச் செழுந்தமிழ்ப் புராணம் தெரிதரு சிதம்பர ரேவணன்"

இம்மூன்று தலபுராணங்களும் இன்று கிடைக்கவில்லை. இவருடைய காலம் 1575-1600 ஆகும்.

**இலக்கணம் சிதம்பரநாத முனிவர் (18 நூ.):** சிவஞான முனிவரின் மாணவர் பன்னிருவருள் ஒருவரான இவர் திருப்பாதிரிப் புலியூர்ப் புராணம் பாடியுள்ளார்.

**இளமுருகனார். சோ. நாவாலியூர் (20 நூ.)** : ஈழ நாட்டில் நாவாலியூர்ச் சோமசுந்தரப் புலவர் மைந்தர் புலவர்மணி பண்டிதர் இளமுருகனார். தமிழ்ப்பற்றும் சைவப்பற்றும் மிக்கவர். கிலக வைகாசியிற் பிறந்தவர். இவர் ஈழத்துச் சிதம்பர புராணம் இயற்றியுள்ளார்.

செந்தமிழ்ச் செல்வம், பூரணன்கதை, இலக்கணச் சூறாவளி, தொல்காப்பிய முதனூற் சூத்திரவிருத்தி, செந்தமிழ் வழக்கு, அரங்கேற்று வைபவம், வேனில் விழா, கப்பற்பாட்டு, கவிதையியல், சொற்கலை, கயநோய்ச்சிந்து, சுருக்கெழுத்துச் சூத்திரம் முதலியன இவருடைய ஆக்கங்கள்.

தமயந்தி திருமணம், கமலேசன் என்பன சில நாடகங்கள், இலங்கை மாதேவி திருப்பள்ளியெழுச்சி, அறப்போர்க்கு அறைகூவல், திருமலை யாத்திரை இவற்றுடன் பத்துப் பாட்டு நூல்களுக்கும் உரை எழுதியுள்ளார்.

**இளையபெருமாள் பிள்ளை. சொ. (19 நூ.)** : இவர் விட்டிலாபுரத் தலபுராணம் பாடியுள்ளார்.

**இளையான் கவிராயர் (19 நூ.):** கொங்கு நாட்டிலே தாராபுரம் தாலுக்காவில் பிறந்தவர். இயற்பெயர் சுப்பிரமணியன். காரணப் பெயர்கள் பல. இளையான், இளையநாயகம், இளைச்சி பிள்ளை, நாவலர் என்பன. இவர் தமிழிலும் வடமொழியிலும் வல்லவர். கணிதம், சோதிடம், மாந்திரீகம் முதலிய கலைகளிலும் வல்லவர். சைவசித்தாந்த அத்வைத நூல்களையும் நன்கு பயின்றவர். திருஞானசம்பந்தரிடம் மிகுந்த பேரன்பு கொண்டவர்.

இவர் இயற்றிய புராணங்கள், திருஅவிநாசிப் புராணம், திருஅப்பரமேசர் புராணம் முதலியன.

இவர் பாடிய பிரபந்தங்கள், சீட்டுக்கவி, தனிப்பாடல்கள் பல உள. கணக்கதிகாரம் என்ற நூலையும் இவர் தமிழில் பாடியுள்ளார்.

இவருடைய திருவுருவச்சிலையொன்று தாராபுரம்-நரவபாளையம் - அப்பரமேசர் சந்நிதியில் உள்ள பதினாறுகால் மண்டபத்தில் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது.

**ஈசான தேசிகர். துறைசை:** திருவாவடுதுறை ஆதீனத்திலிருந்த இவர் திருக்கடம்பநாத புராணம் என்னும் புராணத்தைப் பாடியுள்ளார்.

**உமாபதி சிவாசாரியார் (14 நூ.)** : தில்லைவாழந்தணர் திருமரபிலே தோன்றியவர் இவர். அருணந்திதேவ நாயனாரை ஞானாசாரியராகப் பெற்றவர். சிதம்பரத்துக்கு அண்மையில் உள்ள கொற்றவன் குடியிலே திருமடம் கொண்டு எழுந்தருளியிருந்தவர். கோயிற்புராணம் என்னும் சிறப்புடைய தலபுராணம் இயற்றியவர்.

சேக்கிழார் நாயனார் புராணம், திருத்தொண்டர் புராண சாரம், திருமுறை கண்ட புராணம், திருப்பதிக்கோவை, சிவப்பிரகாசம், திருவருட்பயன், நெஞ்சுவிடுதூது, உண்மை நெறி விளக்கம், கொடிக்கவி, வினாவெண்பா, சங்கற்ப நிராகரணம் போன்ற பல நூல்களையும் இயற்றியளித்துள்ளார்.

***எல்லப்ப முதலியார், க. (20 நூ.):*** தொண்டை வள நாட்டில், பனைப்பாக்கம் என்னும் ஊரில் செங்குந்தர் குலத்தில் கண்டி முதலியார் என்பவருக்கு மகனாகத் தோன்றியவர் இவர். பலரும் விரும்பியவாறு தாம் பிறந்த ஊரின் (பனைப்பாக்கம்) புராணத்தை இவரும் அ. நாராயணசாமி முதலியார் என்பவரும் சேர்ந்து இனிய செய்யுட்களாகப் பாடி முடித்துள்ளனர். நூலில் சித்திரக் கவிகளும் அமைந்துள்ளன.

***ஐயாச்சாமி ஐயர், நா. (19 நூ.):*** இவர் கோமல் என்னும் ஊரினர். தமிழாசிரியராகத் தொழில் புரிந்தவர். திருவெயனேச்சுரத் தலபுராணத்தைத் திருத்தியும் விளக்கியும் கூட்டியும் செப்பனிட்டு வெளியிட்டுள்ளார்.

***ஒப்பிலாமணிப் புலவர் (18 நூ.):*** இவர் கும்பகோணத் தலபுராணம் ஒன்றினை இயற்றியுள்ளார்.

***கச்சாலைத் தேசிகர், ஆளவந்தார் ஆதீனம்:*** பழைய காஞ்சிப் புராணம் (கம்பர் புராணம்) இயற்றியவர். கச்சாலை அகவங்கர், பூரண லட்சண கச்சாலை போதகர் என்றும் பெயர்.

பாரதத்தையும் கச்சிக்கோவையும் இவர் பாடியுள்ளதாகத் தெரிகிறது. இவை கிடைக்கவில்லை. இவருடைய காலமும் தெரியவில்லை.

***கச்சியப்ப முனிவர் (18 நூ.):*** திருத்தணிகையில் பிறந்த இவர் திருவாவடுதுறை ஆதீனத்துப் பின் வேலப்ப தேசிகரிடம் தீட்சை பெற்று, சிவஞான முனிவரிடம் கல்வி பயின்றவர்.

காஞ்சிப் புராணம் இரண்டாங் காண்டம், தணிகைப் புராணம், திருஆனைக்காப் புராணம், பூவாளூர்ப் புராணம், பேரூர்ப் புராணம் ஆகிய ஐந்து தலபுராணங்களை இவர் இயற்றியுள்ளார்.

மேலும், விநாயகபுராணம், ஆனந்த ருத்திரேசர் வண்டுவிடு தூது, தணிகையாற்றுப்படை, கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிற்றுப்பத்தந்தாதி, சென்னை விநாயகர் பிள்ளைத்தமிழ், திருத்தணிகைப் பதிற்றுப்பத்தந்தாதி, பஞ்சாட்சர அந்தாதி போன்ற நூல்களையும் பாடியளித்துள்ளார்.

***கணேச பண்டிதர் (18 நூ.):*** ஈழ வள நாட்டிலே வண்ணார் பண்ணையிலே இருந்தவர். மறையவர் குலத்தினர். வடமொழி தென்மொழி எனுமிரு மொழியிலும் சிறந்த புலமை பெற்றவர். இவர் இளையாற்றங்குடிப் புராணத்தைத் தன வணிகர்களின் வேண்டுகோளின்படி இயற்றியுள்ளார்.

***கந்தசாமிக் கவிராயர். மு. ரா. (19 நூ.):*** அரிமழத் தலபுராணம் இயற்றியுள்ளார்.

**கந்தசாமி சுவாமிகள். சிரவை. (19 நூ.):** சிரவணபுரம் கௌமாரமடாலயம் தவத்திரு இராமானந்த சுவாமிகளின் மாணாக்கராகிய இவர் பல தமிழ் நூல்களை இயற்றியவர். அன்னியூர்த் தலபுராணமும், கோயிற்பாளையம் என வழங்கும் கௌசைப் புராணமும் காரமடைத் தலபுராணமும் இயற்றியுள்ளார்.

**கந்தசாமிப்புலவர், திருப்பூவணம் (17 நூ.):** திருப்பூவணம் என்னும் ஊரைச் சேர்ந்த இவர் திருவாப்பனூர்ப் புராணம் இயற்றி யுள்ளார். உருத்திரகணிகையின் மகனாகத் தோன்றியவர். சிவகங்கை யில் அரசராக இருந்த முத்துவடுகநாத துரையவர்களின் காலத்தவர்.

பூவணநாதருலா, புட்பவனநாதர் வண்ணம், திருப்பூவணத்தல வகுப்பு, தீர்த்த வகுப்பு, மூர்த்தி வகுப்பு போன்ற நூல்களையும் இயற்றியுள்ளார்.

திருப்பூவணவாயிற் புராணமும் இவரே இயற்றியளித்தார் என்பர்.

**கந்தசாமி முதலியார். உ. (19 நூ.):** பொங்குமா புகழார் கொங்குமா நாட்டில், மருவூர் பொழின்மிகு கருவூர் தன்னில் 1838 ஆம் ஆண்டில் தொண்டை மண்டலம் கொண்டை கட்டி வேளாளர் மரபிலே மாங்காடு நாட்டு நெல்லிளையார் குடியிலே பிறந்தவர் இவர். தந்தையார் உலகநாத முதலியாருக்கும் தாயார் பார்வதியம்மையாருக்கும் அருந்தவப் புதல்வராகப் பிறந்த கந்தசாமி முதலியார் இளமையில் திருத்தணிகை சரவணப் பெருமாளையரிடம் கல்வி கற்றுச் சிறந்து விளங்கிய சந்திரசேகரப்பிள்ளை என்பரிடம் தமிழ் நூல்களை முறையாகக் கற்றவர்.

அக்காலத்திய அறிஞர்களாகிய யாழ்பாணம் ஆறுமுக நாவலர், சபாபதி நாவலர், திரிசிரபுரம் பெரும்புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலிய பெருமக்களோடு பெருநட்பு கொண்டிருந்தவர் இவர்.

கொங்குநாட்டுச் சிவப்பதிகளான திருப்பேரூர், அவிநாசி, திருமுருகன்பூண்டி, திருக்கருவூர், பவானி என்னும் திருநணா ஆகியவற்றின் தலபுராணங்களை ஆராய்ந்து அச்சிற் பதிப்பித்து வெளிவரச் செய்த இவர், கொடுமுடிப் புராணத்தைத் தொகுத்துச் சில பகுதிகள் பாடினார். பிறகு இப்புராணம் இவருடைய மாணாக்கர் வேங்கடரமண தாசர் என்பவரால் இயற்றி நிறைவு செய்யப்பெற்றது.

சைவ சமயத்தில் பெருவிருப்புடன் வாழ்ந்த இவர்தம அருமை மகனாரே பெரியபுராண உரையாசிரியரான சிவக்கவிமணி, திருமுறை ஞானபானு சி.கே. சுப்பிரமணிய முதலியாராவர்.

**கந்தசாமி முதலியார், சே. (20 நூ.):** இவர் தொண்டை மண்டலத்தில் கைவண்டூரில் வாழ்ந்திருந்தவர். இலக்கண இலக்கியப் பயிற்சியில் சிறந்து விளங்கிய இவரே திருப்பாச்சூர்ப் புராணம் இயற்றியுள்ளார்.

**கந்தப்பையர் (18 நூ.):** திருத்தணிகையில வாழ்ந்திருந்த இவா சிறந்த வீரசைவர். கந்தப்ப தேசிகர், கந்தப்ப முனி என்றும் வழங்குவர். சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர் ஆகியோரின் மாணாக்கர்.

தணிகாசல புராணம் இயற்றியவர். திருத்தணிகைச் சந்நிதி முறையையும் இயற்றியுள்ளார்.

விசாகப்பெருமாளையர், சரவணப் பெருமாளையர் ஆகிய இருவரும் கந்தப்பையரின் புதல்வர்களாவர்.

**கருணாகரக் கவிராயர் (18 நூ.):** இவர் தொண்டை வள நாட்டில் வாழ்ந்திருந்தவர். செய்யாறு என்னும் திருவோத்தூர்ப் புராணத்தை இயற்றியவர்.

**கருணைச் சிவப்பிரகாசர் (17 நூ.):** சிவப்பிரகாச சுவாமிகளின் இரண்டாம் இளவலாகிய இவர் சீகாளத்திப் புராணத்தின் முதல் ஐந்து சருக்கங்களை இயற்றியவர். சோணசைல மாலை யுரையும் இயற்றியுள்ளார்.

**கருமுத்துப் பிள்ளை, ஆ. எட்டையபுரம் (19 நூ.):** பாண்டி நாட்டில், நயினார்கோயில் (மருதூர்) என்னும் வில்வவனப் புராணத்தையும் திரிபுவனப் புராணத்தையும் இவர் இயற்றியுள்ளார்.

**கலியாணசுந்தர முதலியார், பூவை. (19 நூ.):** இவர் சிந்தாமணித் தலபுராணம், திருவான்மியூர்ப் புராணம், திருவூறல் தலபுராணம் (தக்கோலம்) இயற்றியளித்துள்ளார்.

**கவிராச நாயகம் பிள்ளை ( 20 நூ.):** இவர் எல்லப்ப நாவலருடைய பரம்பரையிற் பிறந்தவர் என்பர். காவிரிப் பூம்பட்டினத்தைச் சேர்ந்த இராதாநல்லூரினர். இவர் வடபாதி மங்கலத்து முதலியார் ஒருவர் கேட்டுக் கொண்டதற்கிணங்க, சாயாவனப் புராணம் இயற்றி அளித்துள்ளார்.

**கவிராச பண்டிதர் (19 நூ.):** கொங்கு வளநாட்டில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். தந்தையார் பெயர் சங்கரநாராயண ஐயர். இவருக்கு இடப்பெற்ற பிள்ளைப்பெயர் சிற்றம்பலம் என்பதாகும். இவருடைய பாடும் வல்லமையால் கவிராச பண்டிதர் என்ற பெயரே நிலைபெற்று விட்டது. (பாண்டி வளநாட்டில் இருந்த வீரைக் கவிராச பண்டிதர் வேறு) கவிராச பண்டிதர் திருச்செங்கோட்டுத் தலபுராணத்தை இயற்றி அளித்தவராவார்.

**களந்தைக் குமரன் (17 நூ.):** தொண்டை வளநாட்டிலே பொன்விளைந்த களத்தூரிலே சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றியவர் இவர். கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கிய இவர் சோழ நாட்டிலிருந்த திருவாஞ்சியம் அழகவேள் என்னும் செல்வந்தர் ஒருவரின் தூண்டுதலால் 'திருவாஞ்சிய புராணம்' இயற்றியுள்ளார். குமரனார் அவ்வூரைப்பற்றி வழங்கிய பழைய செய்திகளையெல்லாம் முதியவர்களிடம் நன்கு கேட்டறிந்து கொண்டு இத்தலபுராண நூலை இயற்றினார் என்பர். இப்புராணம் சாலியவாகன சகாப்தம் 1538க்குச் சரியான கி. பி. 1616இல் அரங்கேற்றம் செய்யப்பெற்றது.

**கனகசபாபதி ஐயர் (19 நூ.):** சோழ நாட்டிலுள்ள திருக்கடக நகர்ப் புராணத்தை இவர் இயற்றியளித்துள்ளார்.

*கனகசபை ஐயர், சாமிமலை. (19 நூ.):* இவர், பினாகி என்னும் பெண்ணைநதிப் புராணம் பாடியுள்ளார்.

*கனகசபைக் கவிராயர், உடையார்பாளையம் (19 நூ.):* இவர் குழூர்ப் புராணம், திருக்களர் புராணம், திருப்புன்கூர்ப் புராணம், உடையார்பாளையம் புராணம், கங்கைகொண்ட சோழபுரம் புராணம் ஆகியவற்றை இயற்றியளித்துள்ளார்.

*காசிநாடன் (16 நூ.):* திருக்குற்றாலப் புராணம் என்னும் பழைய புராணத்தை இவர் இயற்றியுள்ளார்.

*காளியண்ணப் புலவர் (19 நூ.):* கொங்கு நாட்டில், பூந்துறைப் புராணம் இவர் இயற்றியதாகும். மண்டகப் பாளையத்தில் பிறந்தவர். கருணீகர் மரபைச் சேர்ந்தவர். திருஞானசம்பந்தபுரத்தில் வாழ்ந்திருந்தவர்.

*கிருட்டிணப்ப செட்டியார் (குளத்தூர்) (19 நூ.)* இவர் குளத்தூர் கோவில் என்னுமிடத்தில் வாழ்ந்திருந்தவர். வரகவியான இவர் செல்வக்கந்தநாதர் தலபுராணம் பாடியுள்ளார்.

*கிருபானந்தவாரியார் ( 20. நூ.):* இந்த நூற்றாண்டின் தலை சிறந்த தமிழ் பக்தி இலக்கியச் சொற்பொழிவாளரும் அறிஞரும் ஆவார். தமிழிலும் வடமொழியிலும் வல்லவர். திருப்புகழ் மற்றும் பல நூல்களுக்கு உரை கண்டவர். பல செய்யுள் நூல்களையும் உரை நூல்களையும் உருவாக்கியவர். இவர் பிறந்த ஊரான காங்கேயநல்லூருக்கு ஒரு புராணமும், வேலூர் ஜலகண்டேசுவரர் கோயிற் புராணமும் இவர் இயற்றியதாக அறிகிறோம். அவை இன்னும் அச்சில் வெளிவரவில்லை.

*குமாரகவிராய தேசிகர் (19 நூ.):* இவர் தில்லைகண்ட குலசேகர பாண்டியன் தென்காசியில் நிலைநிறுத்திய சந்திரசேகர குரு பரம்பரையில் நாற்பத்திரண்டாவது தலைமுறையில் வந்தவர். காலம் பத்தொன்பதாம் நூற்றாண்டு, இவர் அழகிய திருச்சிற்றம்பல தேசிகர் எனவும் அழைக்கப் பெறுவார். சைவசமயச் சான்றோர் பலர் தென்காசிப் புராணத்தைத் தமிழில் பாடித்தர வேண்டும் என்று இவரை வேண்டிக் கொள்ள இவர் அப்புராணத்தைப் பாடி முடித்துள்ளார்.

*குமாரசாமிப் பண்டிதர். ஆ. க. (19 நூ.):* வடார்க்காடு மாவட்டம் திருப்பத்தூரில் இருந்தவர். திருப்பத்தூர் 'சொரூபாநந்த சபையில் புலவராக இருந்த இவர் குடியேற்றநல்லூர்ப் புராணம் பாடியுள்ளார்.

*குமாரசாமிப் பிள்ளை (19 நூ.):* தஞ்சை மாவட்டத்திலேயுள்ள மருதவனம் என்னும் ஊரில் பிறந்த இவர் அதிவீரராமன்பட்டினத்திலிருந்த புலிக்குட்டிக் கவிராயர் என்பவரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றவர். மருதவன புராணம் இவரால் இயற்றப்பட்டதாகும்.

*குமாரசாமி முதலியார் (19. நூ.):* இவர் திருப்பத்தூரில் செங்குந்தர் மரபில் தோன்றியவர். தம்முடைய ஊரின் சிறப்பை எடுத்துக் கூறித் திருப்பத்தூர்ப் புராணம் பாடியுள்ளார்.

**குமாரசாமி முதலியார், பழூர் (20 நூ.):** இவர் திருத்தவத் துறைப் புராணம் பாடியுள்ளார். இத்தலம் இன்று லால்குடி என அழைக்கப்பெறுகிறது. தொண்டை மண்டலத்திலிருந்த இவர் வடமொழியிலும் வல்லவரென்று தெரிகிறது.

**குமாரமலை மருந்தன்:** நடு நாட்டிலுள்ள திருத்திணைநகர்ப் புராணம் இவர் இயற்றியதாகும்.

**குரவை லிங்கன்:** சோழ நாட்டில், திருவிடைக்கழிப் புராணம் பாடியவர் இவர்.

**குருசாமி தேசிகர், கீழ்வேளூர்:** கீழ்வேளூர் சுப்பிரமணிய தேசிகருடைய தந்தை இவர். நாகப்பட்டினப் புராணம் பாடியவர். ஒருதுறைக் கோவை, பல்லக்கு நாடகம் போன்ற நூல்களையும் இயற்றியுள்ளார்.

**குருசாமி முதலியார் (19 நூ.):** இவர் கொரட்டைத் தல மான்மியம் (திருப்பத்தூர்) இயற்றியவராவார்.

**குலாம் காதிறு நாவலர் (19 நூ.):** இவர் நாகூர்ப் புராணம் பாடியவர். இவர் வாப்பு மரைக்காயரின் புதல்வர். தர்கா வித்துவான். பன்னூலாசிரியர், ஆரிபு நாயகம், முகாஷபா மாலை, குவாலீர் கலம்பகம், மதுரைக் கோவை முதலிய பல நூல்களை இயற்றியவர். தமிழில் மிகுதியான இஸ்லாமிய நூல்களைப் பாடியவரும் இவரே.

**குழந்தைவேல் பிள்ளை:** கொங்கு நாட்டில், வெண்ணெய்மலைத் தலபுராணம் இவரால் இயற்றப்பெற்றதாகும்.

**குழந்தைவேலுப் பிள்ளை (20 நூ.):** இவர், நடு நாட்டில் விழுப்புரத்தில் வேளாண்குடியில் தோன்றியவர். பண்டிதை அசலாம் பிகையம்மையார் பாடத் தொடங்கிய திருவிடையூர்ப் புராணத்தின் இரண்டாங் காண்டத்தை இவர் பாடி முடித்துள்ளார். இப்புராணத்திற்குச் சுப்பிரமணியத் தம்பிரான் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார்.

**கைலாசநாத தேசிகர் (19 நூ.):** களந்தை நகர்ப்புலியூர் மாநிபதியாக இருந்தவர் இவர். திருநெல்வேலியருகேயுள்ள களக்காடு என்னும் தலம் பற்றிய திருக்களந்தைப் புராணம் இயற்றியுள்ளார்.

**கைலாசநாத பண்டாரம் (19 நூ.):** பாண்டி வள நாட்டிலே திருநெல்வேலியைச் சேர்ந்த திருப்புடை மருதூரில் வாழ்ந்திருந்தவர். சிவாசாரியர் வகுப்பைச் சேர்ந்தவர். இவர் வீரைத் தலபுராணம் பாடியுள்ளார். வீரை என்பது வீரைமாநகர் எனவும் வீரவநல்லூர் எனவும் வழங்கப்படுகின்றது. இது திருநெல்வேலிக்கு மேற்கே தாமிரபன்னியாற்றின் தெற்குப் பக்கத்தில் உள்ளது.

**கோவிந்தசாமி நாயக்கர், நா. கூறைநாடு (19 நூ.):** சோழ நாட்டில், திருவாலி திருநகரிப் புராணத்தை இயற்றியவர் இவர். புதுத்துறை என்னும் நகரில் பிறந்தவர். நாற்பதாவது வயதில் ஆச்சாரியன் திருவடியை யடைந்தவர்.

***கோவிந்தபிள்ளை, திரிசிரபுரம் (19. நூ.):*** 'வித்துவசன சேகரர்' என்னுஞ் சிறப்புப் பெயர் பெற்ற இவர், டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் இளைஞராக இருந்த காலத்தில் முதியவராக இருந்தவர். துறையூரிலே முத்துவீரப்பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றிய இவர் நாகலிங்க நாவலர் என்பவரிடம் இலக்கண இலக்கியங் கற்றுப் புலமை பெற்றவர். கம்பராமாயணம் முழுவதையும் ஆராய்ந்து அச்சிட்டதுடன், சுந்தரகாண்டத்திற்கு உரையெழுதி உரையுடன் வெளிப்படுத்தியவர்.

வைணவ நூல்களில் புலமை பெற்று விளங்கிய இவர் இயற்றியன இராசமன்னார்கோவில் தலபுராணம், நாகைப் புராணம் என்பன.

***சங்கரகுமார முனிவர்:*** தருமபுர ஆதீனம் பத்தாவது குருமூர்த்திகளிடம் அருளுரை பெற்ற இவர், தருமபுரத் தலபுராணம் இயற்றியவராவார்.

***சங்கர நாராயணன்:*** பாண்டி நாட்டிலுள்ள திருப்பத்தூர்ப் புராணம் இவரால் பாடப்பெற்றதாகும்.

***சங்கர நாவலர்:*** கன்னியாகுமரித் தலபுராணம் பாடியவர் இவர். பிற விவரங்கள் அறிய இயலவில்லை.

***சங்கரலிங்கம்பிள்ளை, க. (19 நூ.):*** இவர் பாண்டி வள நாட்டிலே மேலவீரராகவபுரம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தவர். அவர் தாமிரவர்ணி யாற்றுக்குப் புராணம் ஒன்று இயற்றிப் "பொருநை மாதாவினது தலபுராணம்" என்று பெயர் கொடுத்துள்ளார். 560 செய்யுட்களோடு கூடிய இப்புராணம் இடையிடையே உரைநடையுங் கொண்டு விளங்குகிறது.

இவர் மேலும் பல நூல்களையும் இயற்றியுள்ளார்.

***சண்முகம் பிள்ளை, திருமயிலை (19 நூ.):*** தொண்டை நாட்டிலுள்ள வடதிருமுல்லைவாயிற் புராணம் இவரால் இயற்றப் பெற்றதாகும்.

***சந்திரசேகர நாயகர் (19 நூ.):*** இவர், திருக்கூடலையாற்றூர்ப் புராணம் இயற்றியவராவார்.

***சபாபதி நாவலர், ஈழம் (19 நூ.):*** இவர் சிதம்பரம் சபாநாத புராணம் இயற்றியவராவார்.

***சபாபதி முதலியார் (19 நூ.):*** தொண்டை நாட்டினராகிய இவர், திருப்போரூர்ப் புராணம் இயற்றியவராவார்.

***சம்பந்த முனிவர், அளகை (16 நூ.):*** தென்பாண்டி நாட்டில் அளகை என்ற ஊரில் சைவ வைசியர் குலத்தில் பிறந்தவர் இவர். கல்விப் பயிற்சியில் சிறந்தவராக விளங்கிய இவர் நிரம்ப அழகிய தேசிகரிடம் சமய தீட்சையும் சந்நியாசமும் பெற்றவர். திருவாரூரில் தங்கியிருந்தபோது அங்கிருந்த சைவப் பெருமக்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க இவர் அவ்வூர்த் தலபுராணத்தைப் பாடினார்.

இவருடைய காலம் பதினாறாம் நூற்றாண்டின் இறுதி (1575-1600) எனத் தெரிகிறது.

இவர் இயற்றியதாக, திருவாரூர்ப் புராணம் ஒன்று மட்டுமே இப்பொழுது கிடைக்கின்றது.

**சரவணப் பெருமாளையர் (19 நூ.):** தொண்டை வள நாட்டில் தணிகையம்பதியில் வாழ்ந்திருந்த கந்தப்பையர் என்பவரின் மகனாகத் தோன்றியவர் இவர். இவருடன் பிறந்தவரே விசாகப்பெருமாளையர். சரவணப் பெருமாளையர் இலக்கியப் பயிற்சியிலும், விசாகப் பெருமாளையர் இலக்கணப் பயிற்சியிலும் சிறப்புற்று விளங்கினர்.

சரவணப் பெருமாளையர் களத்தூர்ப் புராணம் இயற்றி அச்சிற்பதிப்பித்து வெளியிட்டவராவார். இவரே, நாலடியார், நன்னூல், திருவள்ளுவமாலை, வெங்கைக் கோர்வை, நீதிநூல்கள், திருக்குறள், நைடதம், பிரபுலிங்கலீலை, போன்றவற்றிற்கும் தனித்தனியே உரை எழுதிப் பதிப்பித்துள்ளார்.

**சரவண முனிவர் (17 நூ.):** கொங்கு நாட்டிலுள்ள சென்னி மலைத் தலபுராணத்தை இவர் இயற்றியுள்ளார்.

**சாத்திரம் சாமிநாத முனிவர் (18 நூ.):** திருவாவடுதுறையின் பத்தாவது குருமகா சந்நிதானமாகிய ஸ்ரீ முன்வேலப்ப தேசிகர்பால் ஞான தீட்சையும் சந்நியாசமும் பெற்றவர். இவர், துறைசைப் புராண மட்டுமன்றி, திருப்பெருந்துறைப் புராணத்தையும் இயற்றியுள்ளார். தஞ்சையை ஆண்ட துளஜேந்திர மகாராஜாவின் (1763-1787) விருப்பத்திற்கிணங்க திருப்பெருந்துறைப் புராணத்தை இயற்றிய இவர், அதற்குமுன் திருப்பெருந்துறைக் கலம்பகம் ஒன்றையும் இயற்றியதாகத் தெரிகின்றது.

துறைசைப் புராணத்தை இவர் வடமொழியிலிருந்து மொழி பெயர்த்து எழுதியிருப்பதால் இம்முனிவர் வடநூற் பயிற்சியில் தேர்ந்தவரென்றும் அறியலாம்.

**சாமிநாத தேசிகர், திரு. சி.:** சோழ வளநாட்டிலே திருவாரூரிலே சிதம்பர தேசிகர் என்பருக்குப் புதல்வராகப் பிறந்த இவர் சிறந்த தமிழ்ப்புலவர். பாண்டி வளநாட்டில் காளையார் கோயிலுக்குக் கிழக்கே உள்ள தேவாரம் பெற்ற சிவத்தலமாகிய திருவாடானை என்னும் தலவரலாற்றை இவர் புராணமாகப் பாடியுள்ளார்.

**சிங்காரவேற் பிள்ளை, ப. (19 நூ.):** சோழ நாட்டிலுள்ள திருநாகேச்சுரப் புராணம் இவரால் பாடப் பெற்றதாகும்.

**சிதம்பர தேசிகர்:** தொண்டை நாட்டைச் சேர்ந்த இவர் இயற்றியதே கலித்துறை காஞ்சிப் புராணம் ஆகும்.

**சிதம்பரநாத தேசிகர் (17 நூ.)** திருவாரூரில் அபிடேகத்தர் மரபில் இலக்கண விளக்கம் இயற்றிய வைத்தியநாத தேசிகர் மகனான இவர் சுமார் முந்நூற்றைம்பது ஆண்டுகட்கு முன் வாழ்ந்திருந்தவர். வடமொழி, தென்மொழியில் புலமை மிக்க இவர் நாற்கவியிலும்

பாட வல்லவர். தசகாரியம், பதிபசு பாசப்பனுவல் உரை, சிவஞான சித்தியார் பொழிப்புரை முதலிய நூல்களை இயற்றிய இவர் வில்லிவாக்கப் புராணமும் பாடியுள்ளார்.

**சிவக்கொழுந்து தேசிகர், கொட்டையூர் (18 நூ.):** கொட்டையூர் தண்டபாணி தேசிகரின் புதல்வரான இவர், தஞ்சை சரபோசி மன்னரிடம் அரண்மனை வித்துவானாக இருந்தவர். சரபேந்திரர் வைத்திய முறைகள், சரபேந்திரர் சன்னி ரோக சிகிச்சைகள், சரபேந்திரர் வைத்தியம், கோடீச்சுரக் கோவை, கொட்டையூர் உலா போன்ற பல நூல்களையும் இயற்றியுள்ளார்.

திருவிடைமருதூர்ப் புராணம், கொட்டையூர்ப் புராணம், ஆச்சாபுரமென வழங்கும் திருப்பெருமண நல்லூர்ப் புராணம் ஆகியன இவர் இயற்றிய புராணங்களாகும்.

**சிவசிதம்பர முதலியார், க. ரா. (19 நூ.):** திருப்பாதிரிப் புலியூரில் வேளாண் குலத்தில் தோன்றிய இவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் மாணவராவார். இவர் 'கரையேறவிட்ட நகர்ப் புராணம்' என்னும் தலபுராணத்தை இயற்றியுள்ளார்.

**சிவசுப்பிரமணியக் கவிராயர் (19 நூ.):** இவர், பூவைப் புராணம் பாடியுள்ளார்.

**சிவசுப்பிரமணிய சிவாசாரியார் (20 நூ.):** ஈழ வளநாட்டில் வட்டுக்கோட்டையில் நாகராசக் குருக்குள் என்பவருக்கு புதல்வராகத் தோன்றிய இவர் திருத்தென்கோயிற் புராணம் இயற்றியுள்ளார். ஏகாதசிப் புராணம், கந்தசட்டிப் புராணம் ஆகிய நூல்களையும் இவர் பாடியுள்ளார்.

**சிவஞான ஐயர்:** துலா காவேரி புராணம் இவரால் பாடப் பெற்றதாகும்.

**சிவஞான தேசிகர் (19 நூ.):** இவர், கொங்குநாட்டிலுள்ள சேவூர்ப் புராணம் இயற்றியவராவார்.

**சிவஞானப்பரன் பிள்ளை:** திருத்துூங்கானை மாடம் எனவும் பெண்ணாகடம் எனவும் வழங்கும் திருக்கடந்தையூரின் சிறப்பினைக் கூறும் திருக்கடந்தைப் புராணம் இவரால் பாடப்பெற்றதாகும். இவர் வேளாளர் குலத்தைச் சேர்ந்தவர்.

**சிவஞானம், ஆ. மா. (19 நூ.):** இவர் காமநகர்ப் புராணம் இயற்றியுள்ளார்.

**சிவஞான முனிவர் (18 நூ.):** பாண்டி நாட்டில் திருநெல்வேலி மாவட்டம் பாபநாசத்தில் விக்கிரம சிங்கபுரத்தில் தோன்றியவர் இவர். முக்களாலிங்கர் என்பது பிள்ளைத் திருநாமம். திருவாவடுதுறை வேலப்ப தேசிகரிடம் சிவதீக்கை பெற்றுச் சிவஞான யோகிகள் எனத் தீட்சா நாமம் பெற்றவர்.

தொல்காப்பியச் சூத்திர விருத்தி, தர்க்க சங்கிரகம், சிவஞான போத பாடியம், சித்தாந்தப் பிரகாசிகை, சித்தியார் பொழிப்புரை, கம்பரந்தாதி போன்ற பல நூல்களை இயற்றிய இவர் காஞ்சிப் புராணத்தின் முதற் பகுதியை இயற்றியளித்துள்ளார்.

**சிவஞான யோகிகள், விருதை (19 நூ):** இவர், கோயிற்பட்டிப் புராணம் இயற்றியளித்துள்ளார்.

**சிவப்பிரகாச சுவாமிகள், துறைமங்கலம் (17 நூ.):** முப்பத்திரண்டு ஆண்டுகளே வாழ்ந்து, தமிழுக்கும் சைவத்திற்கும் தொண்டு புரிந்த இவர் முப்பத்துநான்கு நூல்களை இயற்றியளித்துள்ளார்.

இவர் திருக்கூவப் புராணமும் பாடியுள்ளார். இவருடைய இளவலாகிய கருணைப் பிரகாசர் இயற்றிய சீகாளத்திப் புராணத்தில் கண்ணப்பச் சருக்கம் மற்றும் நக்கீரச் சருக்கம் ஆக இரண்டுக்கும் 215 பாடல்களையும் இவர் இயற்றியளித்துள்ளார்.

இவர் இயற்றிய தலவெண்பா என்னும் நூல் கிடைக்கவில்லை.

திருவெங்கை என்னும் வெங்கனூரில் அண்ணாமலை ரெட்டியார் கோயிலில் இவருடைய திருவுருவச்சிலை உள்ளது.

**சிவப்பிரகாச பண்டிதர், ச. (19 நூ.):** சோழநாட்டைச் சேர்ந்த இவர் இந்திரகீலபுரம் என்னும் திருக்கழிப்பாலைப் புராணத்தை இயற்றியளித்துள்ளார்.

**சிவராமலிங்கம் பிள்ளை (19 நூ.):** வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் மாணாக்கராக விளங்கியவர் இவர். பாண்டி நாட்டிலுள்ள திருமலைத் தலபுராணத்தை இவர் பாடியுள்ளார்.

**சிவானந்த ஐயர் (19 நூ.):** சிதம்பரம் பற்றிய புலியூர்ப் புராணத்தை இவர் இயற்றியுள்ளார். இவர் யாழ்ப்பாணத்துத் தொல்லிப்பிழையைச் சேர்ந்தவர்.

**சிவானந்த மூர்த்தி (பொன்னையா முதலியார்) (19 நூ.):** புதுச்சேரியில் வாழ்ந்திருந்த இவர் செங்குந்த மரபினர். வடமொழியிலும் தென்மொழியிலும் வல்லவரான இவர் வல்லம் தலபுராணம் இயற்றியுள்ளார்.

இவர் இயற்றிய பிற நூல்கள்: விநாயகர் திருப்புகழ், போற்றிக் கலிவெண்பா, விநாயகர் அநுபூதி, விநாயகர் அலங்காரம், சிவாநந்தலகரி, தேவிமானத பூசை, சிற்சத்திமாபகம், முருகர் மும்மணிக்கோவை, முருகேசர் பதிகங்கள், குருதோத்திர பஞ்சகம், அருணாசலேசர் அநுபூதி, ஆத்ம சுவரூப விளக்கம், ஞானவாசிட்ட வமலராமாயணம், சொரூபலட்சணாவிருத்தி, சொரூபாநுசந்தானம் முதலியன.

**சிற்றம்பலவையர், கம்பம் (19 நூ.):** இவர் சேது நாட்டில் சிறுகம்பையூரில் இருந்தவர். கலைமகள் அருள் பெற்றவர். மருதூர்ப் புராணத்தைப் பாடி இரகுநாத சேதுபதியின் அவையிலே அரங்கேற்றஞ் செய்தார்.

***சின்னய்ய செட்டியார், வீர. லெ. (19 நூ.):*** இவர், திருவொற்றியூர்ப் புராணம் ஒன்றை இயற்றியுள்ளார். அந்நூல் இன்னும் அச்சாகவில்லை.

***சீநிவாச ஐயங்கார் (குடந்தை) (20 நூ.):*** குடந்தை நேடிவ் உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணிபுரிந்த இவர் மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் கல்வி கற்றவர். திரு. அ. சிதம்பரநாதச் செட்டியார் போன்ற பலர் இவருடைய மாணாக்கர்களாவர். இவர் திருக்குடந்தை மான்மியம் என்ற நூலை இயற்றியுள்ளார். இவர் 22-6-1957 இல் காலமானார்.

***சீநிவாச அய்யர் (யசுர்வேதி):*** 'திருவதிட்டகுடி சிவத்தல புராணம்' இயற்றிய இவரைப் பற்றிய வரலாறுகளை அறிய இயலவில்லை.

***சீநிவாச பாரதி சுவாமிகள் (19 நூ.):*** திருத்தலையூர் என்னுஞ் சிவப்பதியில் அந்தணர் குலத்தில் தோன்றிய இவர் திருத்தலையூர்த் தலபுராணம் பாடியுள்ளார்.

***சீவலமாற பாண்டியனார் (16 நூ.):*** பாண்டிய நாட்டில் தோன்றிய இவர் சங்கர நாராயணசாமி கோயிற் புராணத்தை இனிய பாக்களாகப் பாடியுள்ளார்.

***சுந்தரநாத பிள்ளை (19 நூ.):*** இவர் வயலூர்ப் புராணம் பாடியுள்ளார்.

***சுந்தர முதலியார் (19 நூ.):*** தொண்டை நாட்டைச் சேர்ந்த இவர் காமக்கோட்ட புராணம் (காமக்கூர்) இயற்றியுள்ளார்.

***சுந்தரலிங்க முனிவர் (17 நூ.):*** இவர் திருவாவடுதுறை ஆதீனம் திருச்சிற்றம்பல ஞான தேசிகருடைய மாணவர் ஆவார். திருப்பெருந்துறைப் புராணத்தை இயற்றியளித்துள்ளார்.

***சுப்பராய செட்டியார், த. க. (19 நூ.):*** பத்தொன்பதாம் நூற்றாண்டில் நடு நாட்டில் பண்ணுருட்டி என்னும் ஊரில் புலவர் திலகராய் விளங்கிய இவர் பல நூல்களை இயற்றியுள்ளார். ஆதிபுரத்தல புராணம் நூலும் இவரால் இயற்றப் பெற்றதே.

***சுப்பிரமணிய ஐயர், தஞ்சை (19 நூ.):*** இவர் இலுப்பைக்குடித் தலபுராணம், உப்பூர்ப் புராணம், இலக்குமிபுரத் தலபுராணம், காளையார்கோயிற் புராணம், கோட்டூர்ப் புராணம், திருமருகற் புராணம், திருவிரிஞ்சைப் புராணம், திருவேடகப் புராணம், மாற்றூர்ப் புராணம் ஆகிய புராணங்களை இயற்றியவராவார்.

***சுப்பிரமணியக் கவிராச மூர்த்திகள் (19 நூ.):*** தஞ்சை மாவட்டம் திருக்கடவூரிலே சுமார் நூற்றுமுப்பது ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்திருந்த இவர், திருக்கடவூர்ப் புராணம், திருநள்ளாற்றுப் புராணம் ஆகிய புராணங்களை இயற்றியுள்ளார். மயிலைக் கோவை, மயிலையந்தாதி, திருக்கடவூர் உலா என்ற நூல்களையும் இவர் எழுதியளித்துள்ளார்.

***சுப்பிரமணிய பிள்ளை, தெ.:*** சுமார் இருநூறு ஆண்டுகட்கு முன்பு மதுரையில் இவர், மருதுபாண்டியன் வேண்டுகோளின்படி வானரவீர மதுரைத் தலபுராணத்தை இயற்றினார். வானரவீர மதுரை என்பது இப்பொழுது மானாமதுரை என மருவி வழங்குகின்றது.

***சுப்பையசாமி, சி. (20 நூ.):*** இவர் சிதம்பரம் பொன்னம்பல சுவாமி மடம் சிதம்பர சுவாமிகளிடம் அருளுரை பெற்றவர். திருவண்ணாமலை ஈசானிய மடம் முதலிய இடங்களில் தங்கியிருந்தவர். இவர் சிவபுரி புராணம் இயற்றியுள்ளார்.

மேலும், வேதசார சமுத்தரணம் என்னும் தோடகவுரை, சிவமகிமை விரிவுரை, கோயிலூார்க்குசுமாஞ்சலி, தருக்க சங்கிரக அன்னப்பட்டீய தெளிபொருள் விரிவுரை, ஈசானிய ஞானதேசிகர் சரித்திரம், புருடார்த்தப் பிரகரணம், பண்டார்கர் சமஸ்க்ருத முதற் புத்தக உரை, வன்னிகுல விளக்கம், வல்லாள மகாராசன் சரித்திர விளக்கம், ஆன்மானான்ம விவேகம், சக்கந்தி கைலாச கணபதி ஆலயதுதி, விடயாநந்த விளக்கம் போன்ற நூல்களையும் இவர் எழுதி வெளிப்படுத்தினார்.

வடமொழி தென்மொழி இரண்டிலும் வல்லவரான இவர் 1956இல் காலமானார்.

***செஞ்சடை வேதிய தேசிகர்:*** இவர் திருப்பனந்தாள் தலபுராணம் இயற்றியவராவார்.

***செகராச சேகரன், ஈழம். (17 நூ.):*** இவர், ஈழநாட்டிலுள்ள திரிகோணமலை என்னும் தட்சிண கைலாச புராணம் இயற்றியவராவார்.

***செல்லம் ஐயங்கார், தேவாரம் (19 நூ.):*** தேவாரம் வீராசாமி ஐயங்காரின் தமையன் பிள்ளையான இவர் கயா மகாத்மியம் என்னும் நூலை இயற்றியுள்ளார்.

***சேங்குடி விசயக்கவி :*** இவர் வயிரவன் கோயிற் புராணம் பாடியவர்.

***சைவ எல்லப்ப நாவலர் (16 நூ.):*** தமிழ் இலக்கிய உலகில் 'சைவ' என்ற சிறப்பான அடை பெற்றவர் இவர் ஒருவரே. பதினாறாம் நூற்றாண்டில் ஏழு தலபுராணங்களைப் பாடிய ஒரே புலவர் என்ற சிறப்புடையவர். இவருடைய பாடல்களின் சிறப்பை உணர்ந்த மக்கள் இவரை நாவலர் என்றும், சைவ எல்லப்பர் என்றும், திவ்விய கவி என்றும் அழைத்தனர். சிறந்த சிவபக்தியும் முருக பக்தியும் கொண்டவர் இவர்.

தஞ்சை மாவட்டம் திருவெணகாட்டுக்கும் திருக்கடையூருக்கும் இடையிலுள்ள தாழை என வழங்கும் ஊரில் பிறந்தவர். இவரது தந்தையின் ஊர் சோழ நாட்டிலுள்ள இராதாநல்லூர் (இராகவநல்லூர்) என்பதாகும். காலிங்கராய கோத்திரத்தைச் சேர்ந்த இவருடைய பரம்பரையினர் இன்னும் இராதாநல்லூரில் வாழ்வதாகக் கூறுவர்.

பதினாறாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் (1550-1600) வாழ்ந்த இவர் பாடிய தலபுராணங்கள் ஏழு. அவை, அருணாசல புராணம், திருவிரிஞ்சைப் புராணம், தீர்த்தகிரிப் புராணம், திருவெண்காட்டுப் புராணம், திருச்செங்காட்டங்குடிப் புராணம், செவ்வந்திப் புராணம் (திரிசிராமலை), தலைச்சங்காட்டுப் புராணம் என்பன. இவற்றுள், அருணாசலம், தீர்த்தகிரி, சிராமலை இவை மலை சார்ந்தன. முதல் மூன்றும் தொண்டை நாடு. பிற மூன்று சோழ நாட்டுத் தலங்களாகும்.

திருவாரூர்க்கோவை, திருவருணைக் கலம்பகம், திருவருணை யந்தாதி, சௌந்தரியலகரி உரை ஆகியன இவர் செய்த பிற நூல்களாகும்.

இவர் எல்லப்ப நயினான் என்றும் அழைக்கப் பெறுவர். நயினான் என்ற பெயரைக் கொண்டு இவர் எல்லப்ப நாவலரினும் வேறானவர் என்றும், எல்லப்ப நயினான் என்பவரே அருணாசலப் புராணம், திருவிரிஞ்சைப் புராணம் முதலியவற்றைப் பாடியவர் என்றும் கூறுவர் இலக்கண விளக்க பரம்பரை திருவாரூர் சோமசுந்தர தேசிகர் அவர்கள்.[1] இக்கருத்தைப் பல சான்றுரைகளால் மறுத்து, சைவ எல்லப்ப நாவலரும், எல்லப்ப நயினாரும் ஒருவரே என்ற உண்மையை நிறுவுவர் அறிஞர் மு. அருணாசலம் அவர்கள்.[2]

மேற்கூறிய ஆறு புராணங்களையும் சைவ எல்லப்ப நாவலரே செய்தார் என்பதற்கான அகச் சான்றுகளையும் குறிப்பிடுவர்.

அவையடக்கம் கூறுமிடத்து, முன்னமே அருணைமாநகர்ச் சிறப்பு உரைத்தேன், இப்போது இந்தத் தலபுராணமும் கூறுகிறேன் என்று ஒரு பாடலில் இவர் கூறுகிறார்.

"உற்ற செய்யுளால் அருணைமா நகர்ச்சிறப் புரைத்தேன் ;
குற்ற மானவை குணத்தவர் பொறுத்துளங் கொண்டார் ;
இற்றை நாளுமச் செருக்கினால் இதனையும் இசைத்தேன் ;
கற்ற மாந்தருக் கனைத்தையும் பொறுப்பது கடனால்."

என்னும் இப்பாடல், திருவெண்காட்டுப் புராணம், திருவிரிஞ்சைப் புராணம், தீர்த்தகிரிப் புராணம் ஆகிய மூன்று புராணங்களிலும் காணப் பெறுகின்றது. எனவே இவை மூன்றையும் இவர் ஒருவரே செய்தார் என்பது தெளிவு.

திருவெண்காட்டுப் புராணத்திலுள்ள பல பாடல்கள் அப்படியே தீர்த்தகிரிப் புராணத்தில் எடுத்து வைக்கப்பட்டுள்ளன. பாயிரத்தின் இறுதியில் நூலில் சொல்லப்பட்ட சருக்கங்களை ஒருசேர அறிவிப்பதை ஆறு புராணங்களிலும் காணலாம்.

திருவிரிஞ்சைப் புராணத்திற்குச் சிறப்புப்பாயிரம் வழங்கிய புரசை அட்டாவதானம் சபாபதி முதலியாரவர்கள் (காஞ்சிபுரம் சபாபதி முதலியார் மாணவர்) சைவ எல்லப்ப நாவலர் செய்த புராணங்களைப் பற்றியும் கூறுகின்றார்.

---

1. சோமசுந்தர தேசிகர், தமிழ்ப் புலவர்கள் வரலாறு, பதினாறாம் நூற்றாண்டு, 1936, பக். 154-198.
2. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 16ம் நூ. பக். 205-224.

. . .    . . .    . . .    . . .

திருவிரிஞ் சைப்புரிச் சீர்கெழு மான்மியம் இருவருந் தம்மின்வே றொருவரு மிலரெனா
மாறுகொண் டேற்ற வன்மை வெந்நிட வீறிலழ லுருவாய்வள ரெந்தை
யருணைப் புராணமு மணுகுநா கொடும்பல விருளைத நூரகத மெழிறரு விருத்த
கிரிமான் மியமுங் கிளர்செல் வந்திச் சரிதமுந தீர்த்த கிரியினர் சரிதமும்
இன்னமுஞ் சிலதலத் துக்கியல் புராணமுந் தன்னிகர் தருசெந் தமிழிற் புனைந்த
அரனெறி வழாஎல் லப்பநா வலர்கோன்

. . .    . . .    . . .    . . .

வெண்காட்டில் சுவேதவனச் சருக்கத்தில் இரண்டு பாடல்களில தலப் பெயர்களைக் கூறத் தொடங்கி தீர்த்தகிரி என்று தொடங்கி விரிஞ்சிபுரம் என்றும் கூறுவர். இரண்டும் பாடல் பெறாத தலங்கள்; இவரே புராணம் பாடியவை.

வெண்காட்டில் நைமிசச் சிறப்புக் கூறுமிடம் சந்தனாடவி என்று தொடங்குகிறார். தீர்த்தகிரியில் சந்தனாசலத்து அண்ணல் என்று தொடங்குகிறார்.

புராணக் கதைகளைச் சொல்வதோடு சிவபக்தி, அடியார் பக்தி, சிவ புண்ணியச் செயல்கள், சிவ சின்னங்களின் பெருமை ஆகியவை எல்லா நூல்களிலும் பொதுவாகக் கூறப்பெற்றுள்ளன.

புராணங்கள் ஆறும் அளவில் சிறியவை. சிறியது 370 பாடல் (விரிஞ்சை); பெரியது 614 பாடல் (வெண்காடு).

மடக்கு, முரண், தொடை, சந்தம் முதலான அமைப்புக்களும், தொடர்களை மடக்கி மடக்கிச் சொல்வதும் ஆறு புராணங்களிலும் காணப்படுகின்றன.

இத்தகு காரணங்களால் இந்த ஆறு புராணங்களும் இவரே செய்தார் என்பது அறிஞர் முடிபு.

**சொக்கலிங்கஞ் செட்டியார், காரைக்குடி (19 நூ.):** இவர் சோழபுரப் புராணம், திருப்புத்தூர்ப் புராணம், திருவுசாத்தானப் புராணம் (சூதவனப் புராணம்), பெருந்தோட்டத்து அகத்தீச்சுர புராணம் போன்ற தலபுராணங்களை இயற்றியுள்ளார்.

**சொக்கலிங்கப் பிள்ளை-கர்ணம் (20 நூ.):** மகாதேவ மங்கலம் என்னும் ஊரில் கருணீகர் குலத்து வீரசைவ சமயத்தினராகிய குமரப்பிள்ளை என்பவருக்கு மகனாகத் தோன்றிய இவர், இளமை யிலேயே வடமொழியையும் தமிழ்மொழியையும் கற்றுத்தேர்ந்தார். இவர் ஊரிலிருந்த பூங்காவன அம்மன் கோயில் தருமகருத்தரும் ஆயுர்வேத பண்டிதருமான இலட்சுமண நாட்டார், அண்ணாமலை நாட்டார், ஆனையப்ப நாட்டார் என்பவர்களும் வடமொழியில் சனகு முனிவரால் இயற்றப்பெற்றுள்ள இமாசலப் புராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடித்தர வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதன்படி, இவரும் அப்புராணத்தைப் பொருள்வளம், சொல்வளம், சந்தவளம் முதலியன நன்கு அமையுமாறு பாடி முடித்துத் தாமே உரையும் எழுதி (1917 ஆம் ஆண்டில்) வெளியிட்டுள்ளார்.

***சொக்கலிங்கப் புலவர் (19 நூ.):*** கொங்கு நாட்டில், திருவெள்ளூர்ப் புராணம் இவரால் பாடப்பெற்றதாகும்.

***சௌந்தரராச உடையார் (19 நூ.):*** சோழ வளநாட்டில் சண்பகக் கொல்லை என்னும் ஊரில் தோன்றிய இவர், தெய்வீக புராணமெனை வழங்கும் திருக்கோவலூர் புராணத்தை விரித்துப் பாடி அச்சில் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.

***ஞானக்கூத்த சிவப்பிரகாச தேசிகர் (16 நூ.):*** சிவன்பாக்கம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்த இவர் இலக்கண இலக்கியங்களில் வல்ல சைவ துறவி ஆவார். விருத்தாசலம் என்னும் பழமலையின் பெருமையை விளக்குவதாகிய விருத்தாசல புராணத்தை இயற்றியுள்ளார்.

திருக்கயிலாய பரம்பரை துறையூர் சிவப்பிரகாச தேசிகர் ஆதீனத்தில் இரண்டாவது பட்டம் பெற்றிருந்த இவரே திருவிடை மருதூர்ப் பழைய புராணத்தையும் இயற்றினார் என்பர்.

திருவையாற்றுப் புராணம் என்னும் செப்பேசப் புராணம் (பஞ்சநதிப் புராணம்) பாடியவரும் இவரே. நிரம்ப அழகிய தேசிகர் மாணவர். சிவபக்தி மிக்கவர். தமிழில் சிறந்த புலமை பெற்றவர். சிவதலங்களிடத்தும் சிலபுண்ணியக் கதைகளிடத்தும் ஈடுபாடு மிக்கவர். சைவ வேளாள மரபினர். காலம் பதினாறாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியாகும்.

***ஞானப்பிரகாசர், கமலை (16 நூ.):*** திருக்கயிலாய பரம்பரையில் மெய்கண்ட சந்தானத்தில் வந்தவர் இவர். தமிழிலக்கியத் துறையிலும் சமயத்துறையிலும் தலைசிறந்த மாணாக்கர்களை உருவாக்கிய இப்பெரும் பேராசிரியர் வழி அமைந்ததே தருமபுர ஆதீனம் ஆகும். கமலை என்னும் திருவாரூரில் இவர் மரபினர் இன்னும் வாழ்கின்றனர் என்பர்.

கமலை ஞானப்பிரகாசர் இலக்கண இலக்கியங்களிலும் சமய ஒழுக்கத்திலும் வல்ல பெரும் புலவராயும் ஆசாரியராயும் திருவாரூரிலேயே வாழ்ந்து வந்த இவருடைய மாணாக்கர் பலர் பல புராணங்களையும் சாத்திரங்களையும் இயற்றியுள்ளனர். இவருடைய மாணாக்கராக வாழ்ந்த பலரும் தலபுராணங்கள் செய்துள்ளனர். நிரம்ப அழகிய தேசிகர், திருவொற்றியூர் ஞானப்பிரகாசர், அளகைச் சம்பந்தர், ஞானக்கூத்தர், ஆனந்தக் கூத்தர் போன்றோர் தலபுராணங்களை இயற்றிய மாணாக்கர்களாவர். கி. பி. 1525-1575 ஆகிய ஆண்டுகளில் வாழ்ந்திருந்ததாகக் கருதப்பெறும் இவர் இயற்றிய திருமழுவாடிப் புராணம், தந்திவனப் புராணம் ஆகியவை இன்று கிடைக்கின்றன.

மேலும் ஞானப்பிரகாசர் வரலாற்றைக் கூறும் ஞானப்பிரகாச மான்மியம் என்ற நூலும் இவர் இரண்டு தலபுராணங்கள் பாடியதாகக் குறிப்பிடுகின்றது.

"சென்றுதிரு வானைக்கா மழபா டிக்குந் திப்பியமாந் தலபுரா ணங்கள் செய்தே
அன்றுகளிப் போடுதிருக் கூட்டத் தோடும் அருந்தலங்கள் பலவுஞ் சென்றிறைஞ்சிப்
போற்றி,

குன்றுடைய காளத்தி ஒற்றி யூரும் குறைவில்லாக் கச்சியெனுந் தலத்தின் மேலி,
என்றுமுத்தி தருந்தலமென் றோது கின்ற எழிற்சோலை நற்காசி இனிதிற் சொன்னார்"

என்னும் இப்பாடலால் இவர் இரண்டு தலபுராணம் பாடினார் என்று தெரிகிறது. இவர் இயற்றிய திருவானைக்காப் புராணம், தத்திவனப் புராணம் என்ற பெயரில் சுவடியிலிருந்து அச்சிடப்பெற்றுள்ளது.

சைவானுட்டான அகவல், சிவபூசை அகவல், புட்பவிதி, பிராசாத மாலை, சிவானந்த போத சாரம், அத்துவாக் கட்டளை, சாதி நூல் போன்ற பிற நூல்களையும் இவர் இயற்றியருளியுள்ளார்.

***ஞானப்பிரகாசர், திருவொற்றியூர் (16 நூ.):*** திருஒற்றியூர்ப் புராணம் பாடியவர் இவர். கமலை ஞானப்பிரகாசரின் மாணவர். தமது ஆரூர்க் குருநாதரின் கட்டளைப்படி இவர் இப்புராணத்தைப் பாடியதாகத் தெரிகின்றது.

சித்தியார் பரபக்கவுரை, சங்கற்பநிராகரணவுரை ஆகிய நூல்களையும் இவர் இயற்றியளித்துள்ளார். இவரது காலம் பதினாறாம் நூற்றாண்டின் இடைப் பகுதியாகும். (1575-1600).

***தண்டபாணி சுவாமிகள், வண்ணச்சரபம் (19 நூ.):*** சென்ற நூற்றாண்டில் மிகுதியான தமிழிலக்கிய வகைகளில் அமைந்த மிக அதிகமான பாடல்களைப் பாடியவர் இவர். முருகதாச சுவாமிகள் என்றும், திருப்புகழ்ச்சுவாமிகள் என்றும் அழைக்கப்பெறும் இவர் வண்ணம் பாடுவதில் வல்லவர். திருநெல்வேலியில் அவதரித்த இவர் திருவாமாத்தூரில் சிவப்பேறு எய்தியவர். திருவாமாத்தூர்த் தலபுராணம் இவரால் இயற்றப்பெற்றதாகும்.

***தணிகைவேள் பாரதியார், தி. வெ. (20 நூ.):*** அருட்கவி தி. வெ. தணிகைவேள் பாரதியார் அவர்கள் அண்மைக்காலத்தில் வாழ்ந்திருந்த பெரும்புலவராவார். தமிழில் இவர் பல பிரபந்தங்களையும், தலபுராணங்களையும் இயற்றியுள்ளார். இருசமய நம்பி எனப் போற்றப்பெறும் இவர் சைவம், வைணவம் என்னும் வேறுபாடு இன்றி எல்லா வகையான புராணங்களையும் பேருரையாகவும் நிகழ்த்தி வந்தவர். இவர் இயற்றிய பல நூல்கள் இன்னும் வெளியாகவில்லை. தலபுராணங்களில் வியாசர்படி தலபுராணம் மட்டுமே உரைநடை வடிவில் வெளியிடப் பெற்றுள்ளது. இவரியற்றிய அயன்புர தலபுராணம் இன்னும் கையெழுத்துப் படியாகவே உள்ளது.

***தியாகராசக் கவிராயர், வே. (18 நூ.):*** விருத்தாசலம் என வழங்கும் பழமலையில் வேளாள மரபில் தோன்றியவர். இவர் மயிலாசலத்திலிருந்த சிவஞானபாலைய தேசிகர் அவர்கள் மயிலாசல புராணத்தைப் பாடுமாறு இவரிடம் கேட்க இவரும் அப்புராணத்தைப் பாடி முடித்துள்ளார்.

திருவாலங்காட்டுப் புராணத்திற்கு உரை செய்ய வேண்டுமென்று சிலர் கேட்டுக்கொண்டதற்கிணங்க இவர் அவ்வாறே உரை செய்துள்ளார்.

***தியாகராச கவிராச தேசிகர்:*** திருவாரூரில் தோன்றிய இவர் திருப்புனவாயிற் புராணம் பாடியுள்ளார். இலக்கண விளக்கப்

பரம்பரையில் தோன்றிய இயாகசராச தேசிகர் என்பவரும் இவரும் ஒருவரா அன்றி வேறானவர்களா என்பது புலனாகவில்லை.

***திரிகூடராசப்ப கவிராயர் (17 நூ.):*** திருக்குற்றாலத் தலபுராணம் இயற்றிய இவர், திருநெல்வேலி மாவட்டம் திருச்சி வரமங்கை (நாங்குனேரி) வட்டம், விசயநாராயணம் என்னும் ஊரினர். சைவ வேளாளர். திருக்குற்றாலக் குறவஞ்சி முதலிய பன்னிரண்டு பிரபந்தங்களை இவர் இயற்றியுள்ளார்.

***திரிகூடராசப்ப கவிராயர்:*** இவர் திரிசூலகிரிப் புராணத்தை இயற்றி அளித்துள்ளார்.

***திருக்குருகைப் பெருமாள் கவிராயர் (16 நூ.):*** பாண்டி நாட்டில் நம்மாழ்வார் திருவவதாரம் செய்த ஆழ்வார் திருநகரி என்ற திருக்குருகையில் வேளாள மரபில் தோன்றிய ஒரு பெரும் புலவர் இவர். யாப்பு, பொருள், அணி என்ற மூன்றுக்குமுரிய இலக்கணங் களும் அவற்றுக்குரிய உதாரணச் செய்யுளும் மாறன் என்ற நம்மாழ்வார் பெயராலேயே பாடிப் புகழ் பெற்றவர்.

நம்மாழ்வாரின் அவதாரத்தலமாகிய திருக்குருகூருக்கு இவர் செய்த தலபுராணம் திருக்குருகை மான்மியம் ஆகும்.

இவருடைய காலம் பதினாறாம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். (1525 - 1550).

***திருச்சிற்றம்பல முனிவர் (19 நூ.) :*** சோழ வளநாட்டில் திருமறைக்காட்டில் இருந்த இவர் வடமொழி, தென்மொழிகளில் புலமை மிக்கவர். வடமொழியிலிருந்த காவேரிப்புராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்து இவர் பாடியுள்ளார். பொன்னிச்சிந்து மான்மிய புராணம் என்பது இவர் இயற்றிய மற்றொரு புராணமாகும்.

***திருமலை நயினார் சந்திரசேகரர் (16 நூ.):*** இவர் மெய்கண்ட சந்தானத்தைச் சேர்ந்த திருவண்ணாமலைச் சத்திய ஞானதரிசினிகளின் மாணவர். சந்திரசேகரர் என்பது இயற்பெயர். திருமலை நயினாரின் புதல்வர். தென்னாற்காடு மாவட்டம் எலவானாசூர் என்னும் இறைசைப் (இறையானரையூர்) புராணம் இயற்றியுள்ளார்.

***திருமலை வேற்கவிராயர் (19 நூ.):*** இவர், திருக்கருவைத் தலபுராணத்தின் சில பகுதிகளை இயற்றியுள்ளார். மற்ற பகுதிகளை சொ. வீரப்ப முதலியார் இயற்றியளித்துள்ளார்.

கரிவலம்வந்தநல்லூர்ப் புராணமும் இவர் பாடியதே.

***திருவம்பலமுடையார் மறைஞானசம்பந்தர் (15 நூ.):*** இவர் பாண்டி வளநாட்டில் திருப்புத்தூரில் இருந்த சிறுமடம் ஒன்றில் தங்கியிருந்தவர். இவர் திருத்தளியாண்ட நாயனார் கோயிலில் எழுந்தருளிய சிவபெருமான் புரிந்தருளிய திருவிளையாடல்களை 'ஒங்குகோயிற் புராணம்' என்னும் பெயராற் புராணமாகப் பாடினார். கி. பி. 1484 ஆம் ஆண்டில் பாடி அரங்கேற்றிய போது கோயில் அதிகாரிகள் மேல் திருமங்கலம் என்னும் மண்ணிமங்கலத்தில் இவருக்கு

ஐந்து மாநிலம் இறையிலியாக அளித்தனர். இச்செய்தி திருப்புத்தூர்க் கோயிலில் உள்ள கல்வெட்டு ஒன்றினால் அறியப் பெறுகின்றது.

**தீர்த்தகிரித் தேசிகர்:** சோழ வளநாட்டில் திருக்குடந்தையில் வாழ்ந்திருந்த இவர் இரத்தினபுரிப் புராணம் என்னும் நூலை இயற்றியுள்ளார்.

**தெய்வநாயகப் பெருமாள் நாயுடு (சென்னை) (20 நூ.):** இவர் கோமளபுரம் இராசகோபால பிள்ளையிடம் கல்வி கற்றவர். இவர், சதகம், அந்தாதி, மாலை, பதிகம், அம்மானை எனப் பல நூல்களையும் இயற்றியுள்ளார்.

வைகுண்டத் தலபுராணம் (2000 பாடல்) என்னும் நூலையும் இவர் இயற்றியுள்ளார்.

**நஞ்சையப் புலவர்:** இவர், கொங்கு நாட்டிலுள்ள தலையநல்லூர் என்னும் சிவகிரிபுராணம் இயற்றியவர். இந்நூல் இன்னும் அச்சாகவில்லை.

**நடராசக் கவிராயர் (19 நூ.):** இவர் வைரவன்கோயிற் புராணம் பாடியுள்ளார்.

**நமச்சிவாயத் தம்பிரான், துறைசை:** இவர் பாச்சிலாச்சிரமம் கோயில் விசாரணை செய்து கொண்டிருந்தவர். திருப்பாச்சிலாச்சிரமப் புராணம் இயற்றியுள்ளார்.

**நரசிம்ம பாரதி அ. (20 நூ.):** திருநயம் என்னும் ஊரில் தோன்றிய இவர் பல நூல்களை இயற்றியுள்ளார். இவர் தென்திருப்பதி எனச் சிறந்தோங்கும் குணசீலத் தலபுராணத்தையும் பாடியுள்ளார்.

நல்லூர்ப் புராணமும் இவர் பாடியுள்ளதாகக் கூறுவர்.

**நாகலிங்கம் பிள்ளை, அ. (19 நூ.)** இவர், ஈழ நாட்டிலுள்ள கதிர்காமப் புராணம் இயற்றியுள்ளார்.

**நாகலிங்க பிள்ளை, சி:** ஈழ வளநாட்டில் யாழ்ப்பாணத்தில் உள்ள வதிரி என்னும் ஊரில் பிறந்த இவர் சிறந்த செந்தமிழ்ப் புலவர். திருத்திலதைப்பதிப் புராணம் என்னும் நூலை இவர் பாடியுள்ளார்.

**நாகலிங்க முனிவர், வண்ணக்களஞ்சியம், காஞ்சி (19 நூ.):** சோழ நாட்டில், திருவெறும்பியூர்ப் புராணம் இவரால் பாடப்பெற்றதாகும்

இவர் இயற்றிய காமக்கோட்ட புராணம் இப்பொழுது கிடைக்கவில்லை.

**நாதமுனி முதலியார், மயிலை (19 நூ.):** இந்நூற்றாண்டின் முற்பகுதியில் சென்னை மயிலையில் இருந்த இவர் புராணச் சொற்பொழிவுகள் செய்வதில் சிறந்து விளங்கியவர். அதனால் இவருக்குப் 'புராண ரத்னாகரம்' என்னும் பட்டமும் வழங்கப் பெற்றிருந்தார். இவரே திருமயிலைத் தலபுராணத்தை இயற்றியவராவார்.

*நாராயணசாமி ஐயர், பின்னத்தூர் (19 நூ.):* இவர் இடும்பாவனப் புராணம், திருக்கோட்டூர்ப் புராணம் ஆகியவற்றை இயற்றியுள்ளார்.

*நாராயணசாமி நாயகர் (19 நூ.):* சோழ வளநாட்டிலே தஞ்சை மாவட்டத்திலுள்ள முத்தாம்பாள்புரம் என்னும் ஊரில் இருந்த இவர் சிறந்த தமிழ்ப் புலவர்களுள் ஒருவராவார். இலக்கண இலக்கியங்களிலே புலமை பெற்ற இவர் இலக்கணப் பாடசாலை ஒன்று அமைத்து அதில் பலருக்கும் பாடஞ் சொல்லி வந்தார். அந்நாளில் தஞ்சையிலே தாசில்தாராக இருந்த வீராச்சாமி நாயகர் என்பவர் வடமொழியில் உள்ள திருக்கண்ணபுர மான்மியத்தைத் தமிழிலே புராணமாகப் பாடி அளிக்குமாறு இவரிடம் கேட்டதற்கிணங்க இவரும் தக்கார்களிடம் தமிழிலே மொழிப்பெயர்க்கச் செய்து 'திருக்கண்ண புரப் புராணம்' என்னும் புராண நூலை இயற்றியுள்ளார். பரிதியப்பர் (பரிதிநியமம்) தலபுராணமும் இவரால் இயற்றப்பெற்றதாகும்.

*நாராயணசாமி நாயுடு, பா. (20 நூ.):* பாண்டி வளநாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் தச்சநல்லூரிலே பிறந்த இவர் போலீசு இன்ஸ்பெக்டராகத் தொழில் பார்த்து வந்தவர். இவருடைய செந்தமிழ்ப் புலமையால் பல பாமாலைகளையும் சந்தப்பாடல்களையும் எளிதில் பாடி வந்தார். இவருடைய புலமையைப் பாராட்டிய சிந்துபூந்துறைத் தட்சணாமூர்த்தி மடத்தலைவர் வேதநாயக அடிகள் என்பவர் நிட்டைபுரி என இக்காலத்தில் வழங்கிவரும் நெட்டூருக்குப் புராணம் இயற்றித் தருமாறு இவரைக் கேட்டுக்கொண்டார். அதன்படி இவர் நெட்டூர்ப் புராணத்தை இயற்றியுள்ளார்.

*நாராயணசாமி முதலியார், அ.:* தொண்டை வளநாட்டில் பனைப்பாக்கம் என்னும் ஊரில் செங்குந்தர் குலத்தில் தோன்றிய இவர் இருபதாம் நூற்றாண்டின் சிறந்த புலவருள் ஒருவர். தம்முடைய ஊரார் விரும்பியபடி இவர் தாம் பிறந்த ஊரின் புராணத்தை எல்லப்ப முதலியார் என்பவருடன் சேர்ந்து இனிய செய்யுட்களால் பாடியுள்ளார்.

*நிரஞ்சன நாதர்:* இவர் நாகப்பட்டினத் தலபுராணம் பாடியுள்ளார்.

*நிரம்ப அழகிய தேசிகர் (16 நூ.):* தஞ்சை மாவட்டம் வேதாரணியத்தில் அபிடேகத்தர் என்னும் தேசிகர் மரபில் பிறந்தவர் இவர். வடமொழியும் தென்மொழியும் பயின்று மிகுந்த புலமையுடைய வராய் விளங்கியவர். சிவபக்தி மிக்கவரான இவர் புராணங்களும் சாத்திர உரைகளையும் செய்துள்ளார்.

'நித்த மணாளர் நிரம்ப அழகியர்' எனச் சிவபெருமானைப் பாடுவர் மாணிக்கவாசகர் (அன்னைப் பத்து. 3.) அச் சிவபெருமானின் பெயராகிய நிரம்ப அழகியர் என்ற இயற்பெயர் கொண்ட இவர் மதுரையில் சில காலம் தங்கிய பின் திருவாரூரில் சிறப்படைந்திருந்த கமலை ஞானப்பிரகாசரை அடைந்து அவரிடம் தீக்கையும் உபதேசமும் பெற்று ஆரூரிலேயே நீண்ட காலம் இருந்தார். ஞானப்பிரகாசர் காலமான பிறகு இவர் திருப்பரங்குன்றம் வந்து தங்கினார். அப்பொழுது அவ்வூர்க்குத் தலபுராணம் பாடினார். பின்பு பாண்டி நாட்டில் குன்றக்

குடியின் மேல் திசையிலுள்ள துழாவூருக்கு வந்து ஒரு மடம் அமைத்து வாழ்ந்திருந்தார். பாண்டி நாட்டை ஆட்சிசெய்த சேதுபதிகளாலும் இவர் போற்றப் பெற்றார். இராமேசுவரம் ஆலயத்தை நிர்வகித்து வந்தோர் இவருக்குச் சீடராயினர். அதுபற்றி எழுந்த தொடர்பால் இவர் இராமேசுவரத்திற்குச் சேதுபுராணம் என்ற தலபுராணம் பாடினார்.

இவருடைய மாணாக்கர் பலர் குறிப்பிடத்தக்கவர். திருவாரூர்ப் புராணம் பாடிய அளகைச் சம்பந்த முனிவரும், திருவையாற்றுக்குச் செப்பேச புராணம் பாடிய ஞானக்கூத்தரும், சங்கர நாராயணர் கோயிலைச் சார்ந்து சங்கர விலாசம் என்ற புராணம் பாடிய சிதம்பர பூபதியும் இவருடைய மாணாக்கர்களேயாவர்.

கி. பி. 1550-1610 ஆம் ஆண்டுகளில் வாழ்ந்திருந்த இவர், திருப்பரங்கிரிப் புராணம், சேது புராணம், திருவையாற்றுப் புராணம், வேணுவன புராணம் ஆகிய நான்கு தலபுராணங்களைப் பாடியுள்ளதாக அறிகிறோம்.

சிவஞான சித்தியார் உரையும், திருவருட்பயன் உரையும் இவர் செய்தளித்த பிற நூல்களாகும்.

***நெல்லையப்பக் கவிராயர் (19 நூ.):*** திருநெல்வேலித் தல புராணம் இவரால் பாடப்பெற்றதாகும்.

***பண்டிதராசர் (18 நூ.):*** ஈழ வளநாட்டில் திரிகோண மலையில் கோணேசுரர் கோயிலில் பூசகராக இருந்த இவர் வட மொழியிலும் தென்மொழியிலும் புலமை மிக்கவர். மயில்வாகனப் புலவரிடம் தமிழ் மொழியைக் கற்றவர். தக்கிணகைலாச புராணம் என வழங்கும் கோணாசல புராணம் இவரால் இயற்றப்பட்டது.

***பரஞ்சோதி முனிவர் (18 நூ.):*** இவர் சோழ நாட்டு வேதாரண்யத்தைச் சேர்ந்த சைவ வேளாளர். திருவிளையாடற் புராணம் மற்றும் வேதாரணியப் புராணம் இயற்றியவர்.

தந்தையின் பெயர் மீனாட்சிசுந்தர தேசிகர். திருத்துருப்பூண்டிக்குக் கிழக்கே குறுக்கை யென்னும் ஊரினர். திருவிளையாடற் புராணத்திற்காக மானியமும் பெற்றவர்.

***பழநியப்பன் சேர்வைக்காரர் (நொச்சியூர்) (16 நூ.):*** சுமார் நானூறு ஆண்டுகட்கு முன்பிருந்த இவர் சோழ வளநாட்டிலுள்ள திருவுசாத்தானம் என்னும் தலவரலாற்றைப் புராணமாகப் பாடியுள்ளார். (திருவுசாத்தான புராணம்) இப்பதி முத்துப்பேட்டைக்கு அருகிலுள்ளது.

***பாலகிருட்டிண தீட்சதர் (19 நூ.):*** இவர் திருக்கடவூர்ப் புராணம் இயற்றியளித்துள்ளார்.

***பாலசுப்பிரமணியக் கவிராயர் (16 நூ.):*** இவர், பழனித் தலபுராணம் பாடியுள்ளார்.

***பானுகவி அடிகள் (19 நூ.):*** மலையாள நாட்டிலே திருமலை என்னும் ஊரிலே மாலைகட்டிகள் என வழங்கும் சைவ மரபிலே சிவஞானப் .ரன்னும் பெரியாரின் தவப்புதல்வனாகத் தோன்றியவர்

இவர். இவருடைய தந்தையார் தம்முடைய மலையாள நாட்டை விட்டுத் தமிழகத்தில் திருவோத்தூரிலே (செய்யாறு) இருந்துகொண்டு சமயப் பணியாற்றி வந்தவர். அவரைத் தேடிக் கண்ட அவருடைய மகனான பானுகவி அடிகள் பலரிடமும் கல்வி பயின்று பெரும்புலவரானார். பழந்தமிழ் நூல்கள் பலவற்றிற்குப் புத்துரை எழுதியும், புதிய செய்யுள் நூல்கள் பல படைத்தும் புகழ் பெற்றவர் இவர். அக்காலத்தில், நா. கதிரைவேற் பிள்ளை, சோமசுந்தர நாயகர், திரு. வி. கலியாண சுந்தரர் போன்ற அறிஞர் பெருமக்கள் பலரிடம் தொடர்பு கொண்டிருந்த பானுகவி அடிகள் பார்வையில் பதிப்பிக்கப்பெற்ற நூல்கள் பல நல்ல முறையில் வெளிவந்தன.

திருப்புகழ், பிள்ளைத்தமிழ், மாலை, கோவை எனப் பல்வகைச் செய்யுள் இலக்கியங்களை இயற்றிய இவர் 'திருமாற்பேறு புராணம்' நூலையும் செய்யுள் நடையில் இயற்றியுள்ளார். இவர்தம் உரைநடை நூல்களும், உரைகள் பலவும் இன்னும் அச்சேறாமல் கையெழுத்துப் படிகளாக உள்ளமையும் குறிப்பிடத்தக்கதாகும்.

***பிச்சைய நாவலர் (19 நூ.):*** பாண்டி நாட்டிலுள்ள தாருகாபுரத் தலபுராணத்தை இவர் இயற்றியளித்துள்ளார்.

***பின்வேலப்ப தேசிகர் (18 நூ.):*** சோழ நாட்டிலுள்ள திருப்பறியலூர்ப் புராணத்தை இவர் இயற்றியளித்துள்ளார்.

***புராணத் திருமலை நாதர் (16 நூ.):*** சிதம்பரபுராணம் பாடிய பெரும்புலவர் இவர். சிதம்பரப் பாட்டியல் என்னும் இலக்கண நூலை இயற்றிய பரஞ்சோதியின் தந்தை, மெய்கண்ட பரம்பரையில் காஞ்சி ஞானப்பிரகாசர் ஆதீனத்தில் மாணாக்கராய் இருந்த இப்பெரும் புலவர் சிவமகா புராணம் என்ற பெருநூலைத் தமிழில் பாடிய சிறப்பினால் இவருக்குப் புராணத் திருமலைநாதர் என்ற சிறப்புப்பெயர் வழங்கலா யிற்று. இவர் சொக்கநாதர் உலா என்ற பிரபந்த நூலையும் இயற்றி யுள்ளார். இவர் அருணகிரிப் புராணமும் இயற்றியதாக அறிகிறோம்.

இவர் திருமுறைகளிலும், பழைய தமிழ் நூல்களிலும் தலபுராணங்களிலும் சைவ சாத்திரங்களிலும் மிகுந்த பயிற்சியுள்ளவர். சிதம்பர புராணத்தை இவர் அரங்கேற்றிய காலம் கி. பி. 1508 என்று தெரிகிறது. எனவே, இவர் பதினாறாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தார் (1500 -1525) எனத் தெரிகிறது.

***பூவை பிரதட்சிணாதன்:*** இவர், திருப்பனந்தாள் புராணம் பாடியுள்ளார்.

***பெரிய சுப்பாரெட்டியார் (19 நூ.):*** இவர் கூவலப்புரம் அன்ன தான மகத்துவ புராணம் இயற்றியுள்ளார்.

***பெரும்பற்றப்புலியூர் நம்பி (13 நூ.):*** சிதம்பரம், செல்லிநகர் (பனையூர்) இவர் ஊராகும். வேம்பத்தூர்க் கவுணிய கோத்திரம் சோழியப் பிராமண வகுப்பினர். மதுரையைப் பற்றிய பழைய திருவிளையாடற் புராணம் இயற்றியவர். குலசேகரன் என்ற பாண்டியன் கேட்டுக் கொண்டதற்கிணங்க இவர் இப்புராணம் பாடினார் என்பர்.

***பொன்னம்பலப் பிள்ளை, சொக்கம்பட்டி (18 நூ.):*** வாசுதேவ நல்லூரிற் பிறந்த இவர் அவ்வூர்ப் புராணத்தைப் பாடியுள்ளார். வேளாள குலத்திலகராக விளங்கியவர். சொக்கம்பட்டி ஜமீன் சிறப்புடன் விளங்கவும் தமிழ்ப் புலவர்கள் சிறக்கவும் பணியாற்றிய இவர், சின்னணைஞ்சாத்தேவரிடம் அமைச்சராகப் பணியாற்றியவர்.

***பொன்னாயிரங் கவிராய மூர்த்திகள் என்னும் சிந்தாமணிப் பிள்ளை, சேற்றூர். (17 நூ.):*** பாண்டி நாட்டில், சைவ வேளாளர் குடும்பத்தைச் சேர்ந்தவர் இவர் சேறைத்தலபுராணம், தென்மலைத் திரிபுரத்தீசர் புராணம், தேவதானத் தலபுராணம், புதுவை வடபாலீசர் புராணம் ஆகிய தலபுராணங்களை இயற்றியுள்ளார்.

இவருடைய இயற்பெயர் சிந்தாமணிப்பிள்ளை, சேறைத் தல புராணம் அரங்கேற்றி முடிந்தவுடன் அரசர் பொன்னாயிரம் கொண்டு அபிடேகம் செய்து 'பொன்னாயிரங் கவிராயர்' என்ற பட்டமும் அளித்தார் என்பர்.

***பொன்னுசாமித் தேவர் (19 நூ.):*** இவர் இராசமன்னார் கோயிற் புராணம் இயற்றியளித்துள்ளார்.

***மங்கைபாகக் கவிராயர் (19 நூ.):*** இவர், பிரான்மலை என்னும் கொடுங்குன்றப்புராணம் இயற்றியவராவார்.

***மறைஞான சம்பந்தர் (16 நூ.):*** சிதம்பரம் கண்கட்டி மடம் மறைஞானசம்பந்தர் என்னும் இவர் சிறந்த சைவ சாத்திரங்களைச் செய்த ஒரு பெரும் புலவர். மெய்கண்ட பரம்பரையில் வந்தவர். இவரியற்றிய திருவாரூர்ப் புராணமாகிய ஆதி கமலாலய புராணம் மற்றும் அருணகிரிப் புராணம் ஆகிய இரண்டு தலபுராணங்களே இன்று கிடைக்கின்றன.

சிவதருமோத்தரம், சைவ சமய நெறி, பதிபசு பாசப் பனுவல், சங்கற்ப நிராகரணம் போன்ற பிற நூல்களையும் இவர் இயற்றியுள்ளார்.

இவருடைய காலம் பதினாறாம் நூற்றாண்டின் முற்பகுதியாகும் (1525 - 1575).

***மாசிலாமணி முத்துக்குமரன் (19 நூ.):*** ஈழ நாட்டிலுள்ள திரிகோணமலை என்னும் திரிகோணசர புராணத்தை இவர் இயற்றியவராவார்.

***மீனாட்சிசுந்தரம் பிள்ளை, மகாவித்துவான் (19 நூ.):*** திருவாவடுதுறை ஆதீனத்துப் பெருங்கவிஞரேறாக விளங்கியிருந்த மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் கம்பர் என்றே அழைக்கப் பெறுபவர். தமிழ்ப் புலமை வானில் மிகவும் ஒளிபரப்பிப் புகழ் பெற்ற இவர் இயற்றிய நூல்கள் மிகப்பல. அவற்றுள், தலபுராணங்கள் மட்டும் 22 ஆகும். தமிழில் இவ்வளவு தல புராணங்கள் இயற்றிய புலவர் இதற்குமுன் எவருமே இல்லை.

இவர்தம் இருபத்தொன்றாம் வயதில் முதன் முதலாகத் திருவானைக்காப் புராணமும், பூவாளூர்ப் புராணமும், காஞ்சிப்

புராணமும் தேடிக் காணப்பெற்றார். அது முதல் பலரிடமும் பாடங் கேட்டார். கச்சியப்ப முனிவரிடம் பெரிதும் ஈடுபாடு கொண்டார்.

இவருடைய முப்பதாவது வயதில் (1845) குரோதி பங்குனியில் திருவிழாவிற்குத் திருவாரூர் சென்றிருந்தபோது அன்பர்கள் வேண்டுகோளின்படி தியாகராசலீலையைப் பாடத் தொடங்கினார். பெருங்காப்பியங்கள் பலவற்றுள் தியாகராசலீலையே இவரால் முதலில் செய்யப்பெற்றது. பின்னர் முப்பத்தைந்தாம் வயதில் (1850) உறையூர்ப் புராணம் இயற்றினார்.

இவர் இயற்றிய தலபுராணங்கள் வருமாறு:

| | |
|---|---|
| 1. அம்பர்ப் புராணம் | (சோ. நா.) |
| 2. ஆற்றூர்ப் புராணம் | (சோ. நா.) |
| 3. உறையூர்ப் புராணம் | (சோ. நா.) |
| 4. கண்டதேவிப் புராணம் | (பா. நா.) |
| 5. காசிரகசியம் | (வட நா.) |
| 6. குறுக்கைப் புராணம் | (சோ. நா.) |
| 7. கோயிலூர்ப் புராணம் | (பா. நா.) |
| 8. சூரைமாநகர்ப் புராணம் | (பா. நா.) |
| 9. தனியூர்ப் புராணம் | (சோ. நா.) |
| 10. தியாகராசலீலை | (குறை) |
| 11. திருக்குடந்தைப் புராணம் | (சோ. நா.) |
| 12. திருத்துருத்திப் புராணம் | (சோ. நா.) |
| 13. திருநாகைக்காரோணப் புராணம் | (சோ. நா.) |
| 14. திருப்பெருந்துறைப் புராணம் | (பா. நா.) |
| 15. திருமயிலைப் புராணம் (கிடைக்கவில்லை) | (குறை) (தொ. நா.) |
| 16. திருவரன்குளப் புராணம் | (குறை) |
| 17. பட்டீச்சுரப் புராணம் | (குறை) |
| 18. மண்ணிப்படிக்கரைப் புராணம் | (சோ. நா.) |
| 19. மாயூரப் புராணம் | (சோ. நா.) |
| 20. வாளொளிப்புற்றூர்ப் புராணம் | (சோ. நா.) |
| 21. விளத்தொட்டிப் புராணம் | (சோ. நா.) |
| 22. வீரவனப் புராணம் | (பா. நா.) |

1851 ஆம் ஆண்டில் இவர் செவந்திப் புராணத்தையும் பதிப்பித்தார். இவர்தம் முப்பதாவது வயது முதல் ஐம்பத்தெட்டாம் வயது வரையில் (1873) மேற்கண்ட 22 தலபுராணங்களை இயற்றியுள்ளார். இவர் இறுதியாக இயற்றியது திருப்பெருந்துறைப் புராணம். அதற்கு முன் அம்பர்ப்புராணம் (1869) இயற்றினார். அதற்குப் பிறகு 1871 ஆம் ஆண்டில்தான் உ. வே. சாமிநாதையர் இவரிடம் மாணாக்கராக

வந்து சேர்ந்தார். பிற்காலத்தில் ஐயரவர்களே இவர்தம் நூல்கள் பலவற்றை அச்சில் பதிப்பித்துள்ளார்.

தமிழ்த் தலபுராண வரலாற்றில் இவரைப் போன்று இவருக்கு முன்பும் பின்பும் இவ்வளவு நூல்கள் இயற்றிய புலவர் எவருமே இல்லை என்பதே இப்பெரும் புலவரின் சிறப்பாகும்.

***மீனாட்சிநாதர்:*** பழைய மதுரைப் புராணம் ஒன்றை இவர் இயற்றியுள்ளார். அந்நூல் கிடைக்கவில்லை.

***முக்களாலிங்க முனிவர்:*** இவர் பாண்டி வளநாட்டுப் பாவ நாசப் பதியில் தோன்றியவர். சிவஞான முனிவருடைய முன்னோராக இருக்கலாம் என்பது மு. ரா. அருணாசலக் கவிராயர் அவர்கள் கருத்து. இவர் பாவநாசத் தலபுராணம் பாடியுள்ளார்.

***முத்தமிழ்க் கவிராயர் (19 நூ.):*** இவருடைய இயற்பெயர் தெரியவில்லை.

> அழகிய முத்தமிழ் ஆர்கலிப் புகுந்து முழுகி யாடுறூஉ முதிர்ந்த புலமை
> ஒத்தலின் யாரும் உயரிறும் பூதாய் முத்தமிழ்க் கவிஞன் முத்தமிழ்க் கவிஞன்
> என்றிட அப்பெயர் இயற்பெய ராக நன்றெனெ வாய்ந்த நாவலர் பெருமான்

என்று அட்டாவதானம் பூவை கலியாணசுந்தர முதலியாரால் பாராட்டப் பெற்ற இவர் 'சுசீந்திரத் தலபுராணம்' பாடியுள்ளார்.

***முத்துக்கிருட்டிண இராமானுச பண்டிதர் (19 நூ.):*** பாண்டி நாட்டில், ஸ்ரீவில்லிபுத்தூர்ப் புராணம் என்னும் வைணவத் தலபுராணத்தை இவர் பாடியுள்ளார்.

***முத்துசாமிக் கோனார், வி.:*** கொங்கு நாட்டில், வெஞ்சமாக் கூடற் புராணத்தை இவர் இயற்றியளித்துள்ளார்.

***முத்துத்தாண்டவராய பிள்ளை, ப. ஆ. (19 நூ.):*** வாருண மான்மியம் என்னும் பறங்கிப்பேட்டைப் புராணத்தை இயற்றியவர் இவர்.

***முத்துதாசர்-கர்ணம்(17 நூ.):*** தொண்டை வளநாட்டிலே சுமார் முந்நூறு ஆண்டுகட்கு முன்பு, புலவனூர்க் காணி என்னும் ஊரில் கருணீகர் குலத்தில் தோன்றிய இவர் ஊர்க்கணக்கராக இருந்ததுடன் தமிழ்ப்புலமையும் பெற்று விளங்கினார். இவர் பெரும்பாலும் விரிஞ்சி புரத்தில் வாழ்ந்திருந்தார். இவர் மகாதேவ புராணம், இரிவிரிஞ்சைப் புராணம் என்னும் இரண்டு தலபுராணங்களை இயற்றியுள்ளார்.

மகாதேவ புராணம் என்பது இராயவேலூருக்கு மேற்கே பதினைந்து கல் தொலைவில் உள்ள மாதேவமலை என்னுஞ் சிவப்பதியைப் பற்றியது. 507 பாடல்களைக் கொண்டது.

புராணம் வெகுகாலமாக வெளிப்படாது இருந்ததை மகாதேவ மலை குகை ஆசிரமத்தில் உள்ள தேவானந்த சுவாமிகள் என்னும் பெரியார் வெளிப்படுத்தியுள்ளார்.

***முத்துவீரக் கவிஞர் (17 நூ.) :*** கொங்கு நாட்டிலுள்ள கபிலகிரிப் புராணம் இவரால் இயற்றப்பெற்றுள்ளது. இந்நூல் இன்னும் அச்சாகவில்லை.

*முத்துவீரக் கவிராயர் (19 நூ.)* : பாண்டி வளநாட்டில் புளியங் குடி என்னும் ஊரில் தோன்றிய இவர் ஊற்றுமலை சமத்தானப் புலவராக இருந்தவர். இவர் சங்கரநாராயண சுவாமி கோயிற் புராணத்தின் முன் ஆறு சருக்கங்களை இயற்றியுள்ளார். இவரே கோமதியம்பிகை பிள்ளைத்தமிழும் பாடியுள்ளார்.

*முன்வேலப்ப தேசிகர்:* பெரியலூர்ப் புராணத்தை இவர் இயற்றியளித்துள்ளார்.

*மூர்த்தி, வெ. ந. (20 நூ.):* திருமலைத் திருவேங்கடவன் சிறப்புக்களை எடுத்துக்கூறும் திருவேங்கடாயணம் என்னும் கவிதை நூலை இயற்றியவர் இவர்.

*மெய்ஞ்ஞான மாமுனிவர்:* திருப்பாச்சிலாச்சிராமப் புராணம், திருவீழிமிழலைப் புராணம் ஆகியன இவரால் இயற்றப் பெற்றதாகும்.

இவருக்கு மயிலாடுதுறை ஞானதேசிகர் என்றும் பெயர். திருவாவடுதுறை மறைஞான தேசிகருடைய திருவருள் பெற்றவர்.

*மெய்ப்பாத புராணிகர் (வீரபத்திரன்), மதுராபுரி:* திருப்பைஞ் ஞீலிப்புராணம் நூலை இவர் இயற்றியுள்ளார். இவருக்கு வீரபத்திரன் என்றும் பெயர். மதுரைப் பதியில் இருந்தவர். விசுவகுலத்தினர். காராள குலத்தில் தோன்றிய தேவராய பூபாலர் என்பவர் கேட்டுக் கொண்டதற் கிணங்கி இப்புராணத்தைப் பாடினார் என்பர். அறப்பள்ளீசுரப் புராணமும் இயற்றியுள்ளார்.

*வடமலை நாரணக் குடை மன்னர் (19 நூ.):* திருநீடூர்த் தல புராணத்தை இவர் பாடியுள்ளார்.

*வடிவேல் முதலியார்:* நடு நாட்டிலுள்ள திருவருட்டுறைப் புராணம் இவரால் பாடப்பெற்றதாகும்.

*வடுகநாத தேசிகர்:* இவர் திருவாரூர் வைத்தியநாத நாவலருடைய நான்காம் புதல்வராகத் தோன்றியவர். சீகாழியிலிருந்த இவர் தென்திருமுல்லை வாயிற் புராணம் பாடியுள்ளார்.

இவர் கச்சியப்ப முனிவர் காலத்தினரெனவும் கச்சியப்ப முனிவர் சென்னையில் விநாயக புராணம் அரங்கேற்றியபோது அவ்வவைக்குத் தலைவராக அமர்ந்திருந்தாரென்றும் கூறப்படுகிறது. காலம் கி. பி. 1697-1787 ஆகும்.

இவருக்கு வைத்தியலிங்க தேசிகர் என்றும் ஒரு பெயருண்டு.

திருவொற்றியூர் பழைய புராணத்தையும் இவர் இயற்றியதாகக் கூறுவர்.

இவரும், புள்ளிருக்குவேளூர்ப் புராணத்தைப் பாடிய வடுகநாத தேசிகரும் ஒருவரா என்பது விளங்கவில்லை.

*வடுகநாத தேசிகர், காத்தியாயனிருப்பு (வேளூர்):* புள்ளிருக்கு வேளூர்ப் புராணம் என்னும் வயித்தீசுரன் கோயிற் புராணம், வடகுடிப் புராணம் ஆகிய நூல்களை இயற்றியவர்.

***வணிசேர் நல்லையன்:*** இவர், தொண்டை நாட்டிலுள்ள திருவக்கரைப் புராணம் பாடியவராவார்.

***வாசதேவ முதலியார் (18 நூ.):*** கோயமுத்தூருக்கடுத்து ஓராட்டுக்குப்பை செட்டிபாளையம் என்னும் ஊரிலே இருந்த இவர் தொண்டை மண்டல வேளாள மரபைச் சார்ந்தவர். திருவாவடுதுறை யாதீனத்தில் இருந்த திருச்சிற்றம்பல தேசிகரிடத்தில் இலக்கண இலக்கியங்களைக் கற்றுணர்ந்தவர். வடமொழிப் புலமை மிக்கவர். இவர் பலருடைய வேண்டுகோளுக்கிணங்க வடமொழியிலிருந்த பவானி கூடல் புராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்துப் பாடியுள்ளார்.

திருமுருகன்பூண்டித் தலபுராணம் முதலிய பிற நூல்களையும் இவர் இயற்றியுள்ளார்.

***விருப்பாட்சிலிங்கையர்:*** சோழ வளநாட்டில் மாயூரத்திலிருந்த இவர் சிறந்த வீரசைவப் புலவர் ஆவார். இவர் தென்திருப்பதிப் புராணம் இயற்றியுள்ளார்.

***வீமநாத பண்டிதர், இலம்பூர்:*** இவர் தொண்டை நாட்டு வேளாளர். திருவள்ளூருக்குத் தெற்கேயுள்ள இலம்பையங்கோட்டூரைச் சேர்ந்தவர். திருவாவடுதுறைச் சுப்பிரமணிய முனிவர் என்றும் கூறப்படுவர். இவர் இயற்றியதே கடம்பவனப் புராணம் ஆகும்.

***வீரசைவம் சுப்பையன் (19 நூ.):*** இவர், சுவாமிமலைப் புராணம் இயற்றியளித்துள்ளார்.

***வீரப்ப முதலியார், சொ (19 நூ.):*** இவர், திருக்கருவைத் தலபுராணத்தில் சில பகுதிகளை இயற்றியுள்ளார். மற்ற பகுதிகளை திருமலைவேற் கவிராயர் என்பவர் இயற்றியுள்ளார்.

***வீரப்ப முதலியார் (நெற்குன்றையம்பதி)*** இவர் சிவசயிலத் தல புராணம் இயற்றியுள்ளார். இத்தலம் திருக்குற்றாலத்திற்கு அண்மையிலுள்ளது.

***வீரராகவ ஐயங்கார் (தேவார நகரம்) (19 நூ.):*** இவர் திருவேங்கடத் தலபுராணம் இயற்றியுள்ளார்.

***வீரராக கவி:*** இவர் வில்லைப் புராணம் இயற்றியுள்ளார். வில்லை என்பது புதுச்சேரிக்கு அண்மையிலுள்ள வில்வநல்லூர் என்னுஞ் சிவப்பதியாகும். விசயராயர் என்னும் பெயருடைய வேளாளர் இப்புராணத்தை ஆக்குவித்தார் என்பர்.

***வீரைப் பரசமய கோளரி மாமுனிவர் (12 நூ.):*** இவர் கி.பி. 1111-1119 ஆம் ஆண்டுகளில் இருந்தவர். வீரை என்பது இவருடைய ஊர். பரசமய கோளரி என்பது இவருடைய சிறப்புப் பெயர். இவர் சைவ மடம் ஒன்றுக்குத் தலைவராக இருந்தார் எனத்தெரிகிறது. இவரால் இயற்றப்பட்ட நூல்கள் கன்னிவன புராணம், பூம்புலியூர் நாடகம், அட்டாதச புராணம் என்பன. இவற்றுள் கன்னிவனம் என்பது திருப்பாதிரிப்புலியூரைப் பற்றியது என்பர். ஆயின் அப்புராணமும் பிறவும் இப்பொழுது கிடைக்கவில்லை.

***வெள்ளியம்பலவாணத் தம்பிரான்:*** தருமபுரம் மாசிலாமணி ஞானசம்பந்த தேசிகர் மாணவர் இவர். திருவுத்தரகோசமங்கைத் தலபுராணம் பாடியுள்ளார்.

***வென்றிமாலைக் கவிராயர் (17 நூ.):*** திருச்செந்தூர்ப் புராணத்தை இயற்றியவர் இவர். ஊர் திருச்செந்தூர். முக்காணியர் என்னும் ஒருவகைச் சோழிய அந்தணர். முருகக் கடவுளையே வழிபட்டு வரம் பெற்றவர். வென்றிமாலை கடையநல்லூரிலுள்ள சாஸ்தாவின் பெயர்.

***வேங்கடரமண தாசர், சாமக்குளம் (19 நூ.):*** கொங்கு நாட்டிலே கோயமுத்தூருக்கு வடக்கேயுள்ள சாமக்குளம் என்னும் ஊரிலே தோன்றிய இவர் இளமையில் பேரறிஞர் கந்தசாமி முதலியாரிடம் இலக்கண இலக்கியங்களைக் கற்றவர். வைணவ சமய குடும்பத்தில் பிறந்த இவர் தம் ஆசிரியரின் புலமைத் திறத்தில் பற்று மிகக் கொண்டு சைவ சமயத்தை விரும்பி ஏற்றுக்கொண்டார். பேரறிஞர் கந்தசாமி முதலியார் தொகுத்துத் தொடங்கியிருந்த, திருப்பாண்டிக் கொடுமுடி என்னுஞ் சிவப்பதியின் செய்திகளையெல்லாம் இவர் புராணமாகப் பாடி நிறைவேற்றியுள்ளார்.

***வேங்கடாசலம் பிள்ளை (சென்னை) (20 நூ.):*** கோமளீசுவரன் பேட்டை இராசகோபால பிள்ளையிடம் கல்வி கற்ற இவர், திருவேட்டீசுரர் புராணம் இயற்றியுள்ளார்.

***வேதாந்த சுப்பிரமணிய பிள்ளை (18 நூ.):*** சிவகங்கை என்னும் ஊரில் வாழ்ந்திருந்த இவர் வடமொழி தென்மொழிகளில் புலமை பெற்றவர். வடமொழியிலிருந்த மயில்மலைப் புராணத்தை இவர் தமிழில் மொழிபெயர்த்துப் பாடியுள்ளார். இக்காலத்தில் இத்தலம் குன்றக்குடி என்று வழங்கப்பெறும். இப்புராணத்தில் 13 சருக்கங் களும் 581 பாடல்களும் உள்ளன. இதற்கு யாழ்ப்பாணம் வித்துவ சிரோன்மணி ந. ச. பொன்னம்பல பிள்ளை சிறந்த பொழிப்புரை எழுதியுள்ளார்.

***வேலாயுத ஞானசம்பந்த மூர்த்தி:*** மதுரைத் திருஞானசம்பந்த தேசிகராதீனத்தில் இருந்த இவர் திருக்கோளக்குடிப் புராணம் இயற்றியவராவார்.

***வேலாயுத பண்டிதர் (20 நூ.):*** இவர் தாராபுரத் தலப் புராணத்தை இயற்றியளித்துள்ளார்.

கொங்கு நாட்டிலுள்ள திரிமூர்த்திமலைப் புராணத்தையும் இவர் இயற்றியளித்துள்ளார். சிவமகாபுராண நூலை இயற்றியவரும் இவரே.

***வேலுச்சாமிக் கவிராயர் (19 நூ.):*** சோழநாட்டில், திருவியலூர்ப் புராணத்தை இவர் இயற்றியளித்துள்ளார்.

***வேலுச்சாமிப்பிள்ளை, வெண்பாப்புலி (19 நூ.):*** தொண்டை நாட்டிலுள்ள திருக்கச்சூர் ஆலக்கோயில் புராணம், திருவேட்டக்குடிப் புராணம், திருவிடங்கன் தலபுராணம் ஆகியன இவரால் இயற்றப் பெற்றன.

***வேலைய சுவாமிகள் (17 நூ.):*** தொண்டை மண்டலம் காஞ்சி புரத்தில் வாழ்ந்திருந்த குமாரசாமி தேசிகர் என்பாரின் அருந்தவப் புதல்வராகத் தோன்றியவர் இவர். சிவப்பிரகாச அடிகள் இவருக்குத் தமையனார் ஆவார். சிவப்பிரகாச அடிகள் நூலியற்றுவதற்கும் இவர் பேருதவியாக இருந்தார் என்பர். இவருடைய இளவலாகிய கருணைப் பிரகாசர் என்பார் தம் பதினெட்டாம் அகவையில் பாடத்தொடங்கிய சீகாளத்திப் புராணம் சீகாளத்திச்சருக்கத்திலேயே முற்றுப்பெறாம லிருக்கவும் கருணைப்பிரகாசர் காலமானார். பின்பு அப்புராணத்தை வேலைய அடிகள் முழுமைபெறப் பாடி அளித்தார். காளத்திப் புராணப் பிற்பகுதியைப் பாடிய இவர் வில்வாரண்யத்தல புராணம் என்னும் நல்லூர்ப் புராணம், வீரசிங்காதன புராணம் ஆகிய புராண நூல் களையும் இயற்றியளித்துள்ளார்.

இட்டலிங்கக் கைத்தலமாலை, நமச்சிவாயலீலை, பாரிசாதலீலை, மயிலத்திரட்டைமணிமாலை, மயிலத்துலா போன்ற நூல்களையும் இயற்றிய இவர் எழுபத்திரண்டு ஆண்டுகள் வாழ்ந்துள்ளார்.

***வேலைய தேசிகர் (19 நூ.)*** இவர் திருவைகாவூர்ப் புராணம் இயற்றியவர் ஆவார்.

***வேலையர், கபித்தலம்:*** இவர் வீரசைவர். துறைமங்கலம் வேலையர் பரம்பரையினர். திருப்பழுவூர்ப் புராணம் இயற்றியுள்ளார்.

பழுவூர் அருந்தவநாயகி மும்மணிக்கோவை, திருவேரகத்தந்தாதி போன்ற நூல்களையும் பாடியுள்ளார்.

***வைத்தியநாத தேசிகர், கமலை (17 நூ.):*** திருவாரூரில் சைவாசாரியர் மரபில் தவவணைக் குடியில் விளங்கிய வன்மீகநாத தேசிகரின் முதல் மனைவியின் மகனாகத் தோன்றியவர் இவர். கமலை என்பது திருவாரூர். அகோர முனிவரிடம் கல்வி கற்றவர்.

நல்லூர்ப் புராணம் இயற்றிய இவர் திருவாட்போக்கிப் புராணமும் இயற்றியுள்ளார். இலக்கண விளக்கம் இயற்றியளித்த இவர் மயிலாசலம் சிவஞான பாலையர் மீது பாசவதைப்பரணி, மயிலாசல முருகன் பிள்ளைத்தமிழ் திருவாரூர்ப் பன்மணிமாலை, கமலாலய அம்மன் பிள்ளைத்தமிழ் போன்ற நூல்களையும் இயற்றியளித்துள்ளார்.

***வைத்தியநாத முனிவர்:*** பாண்டி நாட்டில், உத்தரகோசமங்கை என்னும் ஆதிசிதம்பரத்திற்குரிய வியாக்ரபுர புராணம் என்னும் தில்லைப் புராணம் இவரால் இயற்றப்பெற்றதாகும்.

இவர் யாழ்ப்பாணத்து அளவெட்டியைச் சேர்ந்தவர். புகலூரில் இருந்த அகத்திய குலத்துப் பிறந்த சரவணபவருடைய மாணாக்கர். சைவ வேளாளர். வடமொழி தென்மொழியில் வல்லவர்.

***வைத்தியலிங்கம் பிள்ளை ( 19 நூ.):*** புதுவைத் தலபுராணம் இவரால் இயற்றப்பெற்றதாகும்.

***வைத்தீசுவர குருக்கள் (20 நூ.):*** ஈழ நாட்டிலுள்ள திருக்கேதீச்சரம் என்னும் தலத்திற்குரிய புராணத்தை இவர் இயற்றியளித்துள்ளார்.

இத்தல புராண ஆசிரியர்களின் மொழிப் புலமையையும், அறிவு நுட்பத்தையும் அவர்கள் இயற்றியுள்ள நூல்களைக் கொண்டே அளவிட்டறியலாம். பொதுவாகவே கலைப்படைப்பு என்பது, உழைப்பு மிகுதியும், களைப்பண்டவும், இடர்ப்பாடும் இன்றி யாண்டும் நிகழ்தல் இல்லை. இயல்பாகக் கவிதை பாடுவது என்பதும், தொடர் நிலையாக ஆயிரக்கணக்கில் பாடல்களை இயற்றுவது என்பதும் அவ்வளவு எளிதான செயல் அன்று. இந்நூலாசிரியர்கள் இவ்வளவு நூல்களை இயற்றியக்கால் அவர்கள் எத்துணை இடர்ப்பாடும் துன்பங்களும் அடைந்திருப்பார்கள் என்பதை நாம் அறிய மாட்டோம். பெருமுயற்சியும் பேருழைப்பும் மேற்கொண்டிருந்தால் மட்டுமே இத்துணை நூல்களை அவர்கள் இயற்றியளித்திருக்க முடியும். இதை நாம் கருதி உணர்ந்தால். அவர்களின் கடலனைய பெருமையை ஒரு சிறிதேனும் உணரப் பெறலாம்.

இத்தலபுராண ஆசிரியர்கள் வாழ்ந்திருந்த காலத்தில் அவர்க மக்கள் பெருமதிப்புடன் போற்றி வந்துள்ளனர். அவர்தம் புலமையை அவர்கள் பாராட்டிப் பல பரிசுகளும் பட்டங்களும் அளித்துச் சிறப்பித்துள்ளனர்.

சிதம்பர புராணம் இயற்றிய பெரும் புலவராகிய திருமலை நாதரைப் 'புராணத் திருமலைநாதர்' என்றே அழைத்துச் சிறப்பித்துள்ளனர்.

திருமயிலைப் புராணத்தை இயற்றிய பெரும்புலவராகிய நாதமுனி முதலியாருக்குப் 'புராண ரத்தினம்' என்னும் பட்டப்பெயர் இருந்ததாக மோதூர் சண்முக முதலியார் இயற்றிய சிறப்புப் பாயிரத்தால் அறிகிறோம்.

தமிழில் மிக அதிகமான தலபுராணங்களை இயற்றிய பெரும் புலவர் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களைப் 'புராணம் பாடும் புலவர்' என்றே போற்றியுரைப்பர்.

"தும்பியே நிகர்மீ னாட்சி சுந்தரப் பெயர்ப்பா வாணன்,
பம்பிய தலபு ராணம் பலபல பாடித் தீர்த்தோன்"

என்பர் வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் (புலவர் புராணம், 72. கண்கண்ட புலவர் சருக்கம், பா. 8)

கோயிற்புராணம் பாடிய உமாபதிசிவாசாரியர், காஞ்சிப் புராணம் பாடிய சிவஞானமுனிவர், கச்சியப்ப முனிவர் போன்றோர் வழிபடத்தக்க ஆசிரியப் பெருமக்கள்களாகவே விளங்குகின்றனர். துறை மங்கலம் சிவப்பிரகாசருக்குத் திருவெங்கைக் கோயிலிலும், இளையான் கவிராயருக்கு அப்பிரமேயம் கோயிலிலும் திருவுருவச் சிலைகள் வைத்து வழிபடும் நிலைகளையும் காண்கிறோம். இந்நூலாசிரியர்கள் தம் நூலாலும் தம் நூல் தரும் ஒழுக்க மேன்மையாலும் மக்களிடையே எத்தகைய சிறப்பிடம் பெற்றுள்ளார்கள் என்பதற்கு இவை ஓர் எடுத்துக் காட்டாகும்.



# தலபுராண உரையாசிரியர்கள்

முதலில் புராண நூல்களுக்கு உரை நூல்களே தேவையில்லாமல் இருந்தது. புராணிகர்கள் இப்புராணங்களை எடுத்துச் சொல்லும் போது அவர்தம் விரிவுரையை மக்கள் கேட்பதே பழக்கமாயிற்று. ஆனால், காலம் செல்லச் செல்ல இந்நூல்களுக்கும் உரை வகுக்கவேண்டிய தேவையும் சூழலும் ஏற்பட்டன. சில தலபுராண ஆசிரியர்களே உரை ஆசிரியர்களாகவும் திகழ்ந்துள்ளனர். பல உரையாசிரியர்கள் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலேயே தோன்றியுள்ளனர்.

தலபுராணங்களுக்குப் பெரும்பாலும் குறிப்புரைகளே எழுதப்பட்டுள்ளன. விளக்கவுரையும், விருத்தியுரையும் செய்த ஆசிரியர்கள் மிகக் குறைவு. அரும்பதவுரையும் குறிப்புரையும் எழுதியோரே மிகுதி. செய்யுள் நடையிலான தலபுராணங்களை அப்படியே பொழிப்புரையாக எழுதி அமைக்கும் பணியைப் பலரும் பிற்காலத்தில் செய்துள்ளனர். உரைநடை நூல்கள் பலராலும் படிக்கப்பெற்றதால் இவ் உரையாசிரியர்கள், செய்யுள்களைத் தவிர்த்து, மூலநூலை அதன் சருக்க அமைப்பிலேயே பொழிப்புரையாக எழுதி அதே நூல் தலைப்பிட்டு அளித்துள்ளனர். இவற்றுள் பல அச்சில் வெளிவந்துள்ளன.

மதுரை அழகர்சாமிப் பிள்ளை, நல்லூர் ஆறுமுக நாவலர், நா. கதிரைவேற்பிள்ளை, சபாபதி நாவலர், பூவை கலியாணசுந்தர முதலியார், சாமிநாத தேசிக சுவாமிகள், மு. சாமிநாத மாதவராயர், ப. சிங்காரவேற்பிள்ளை, உ. வே. சாமிநாதையர், நீர்வேலி சிவப்பிரகாச பண்டிதர், சிற்றம்பல உபாத்தியாயர், ச. சின்னப்பாவு முதலியார், வ. த. சுப்பிரமணியபிள்ளை, சிவ. சோலைமுத்துப் பிள்ளை, தணிகைவேள் பாரதியார், இ. துரைசாமிப் பிள்ளை, சே. ப. நரசிம்மலு நாயுடு, வே. பாலகிருட்டின தீட்சிதர், ஈழம் மாப்பண முதலியார், இராமேசுவரம் முத்துவிசயம் பிள்ளை, த. பு. முருகேச நாயகர், கு. வேங்கடாசலம் பிள்ளை, வேங்கடராம சாத்திரி போன்ற பலர் தலபுராண உரையாசிரியர்களாகத் திகழ்ந்துள்ளனர். இவர்தம் உரை நூல்களுக்கும் சிறந்த புலவர்கள் சிறப்புப்பாயிரம் பாடிச் சிறப்பித்துள்ளனர் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.



# தலபுராணச் சுவடிகள்

"தமிழ் நாட்டில் எவ்வளவோ புண்ணிய தலங்கள் இருக்கின்றன. சிவத்தலங்களும் விஷ்ணு தலங்களும் சுப்பிரமணிய தலங்களும் பல உள்ளன. அவற்றைப் போலத் தமிழ்த் தெய்வம் கோயில் கொண்டுள்ள தலங்களுள் ஒன்றாகவே மிதிலைப் பட்டியை நான் கருதி இருக்கிறேன்" என்பர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள்.[1] ஏனெனில், ஐயரவர்களுக்கு இங்குக் கிடைத்த சுவடிகள் தான் சிலப்பதிகாரப் பதிப்புக்குப் பெரும் துணை செய்தன. மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர் வீட்டிலுள்ள ஏட்டுச் சுவடிகளைப் பார்த்த இவர், அவ்வீடு "தமிழ் மகள் ஆலயமாகவே தோன்றியது" என்பர். இவ்வாறு ஓலைச்சுவடிகளில் எழுதுவதும் அவற்றைக் கோயில் போலப் போற்றிப் பாதுகாப்பதும் பழந்தமிழர் பண்பாக அமைந்திருந்தன. சென்ற நூற்றாண்டு வரையில் நூல்களை ஓலைச் சுவடிகளில் எழுதும் பழக்கமே மிகுந்திருந்ததால் இன்றும் பல ஓலைச் சுவடிகள் கிடைத்து வருவதைக் காணலாம்.

தமிழ்த் தலபுராணங்கள் யாவும் அக்காலப் புலவர்களால் ஓலைச் சுவடிகளில் எழுதப்பெற்றும் பாதுகாக்கப்பெற்றும் வந்துள்ளன. தலபுராணச் சுவடிகளைத் தம் இல்லங்களில் வைத்திருப்பதைப் பெரும் பேறாகவும் முன்னோர் கருதியிருந்தனர். கோயில்களிலும் மடங்களிலும் தலபுராணங்கள் நாள்தோறும் படிக்கப்பட்டதால் அவ்விடங்களிலும் தலபுராணச் சுவடிகள் மிகுதியாக வைத்துக் காப்பாற்றப்பட்டன.

## தமிழ்நாட்டுச் சுவடி நூலகங்களில்

சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம், தஞ்சை சரசுவதி மகால் நூலகம், டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகம், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறை நூலகம் போன்ற சுவடி நூலகங்களில் பல தலபுராணங்கள் ஓலைச்சுவடியில் இன்றும் காணக் கிடைக்கின்றன.

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூலகத்தில் மட்டும் சுமார் 140 தலபுராணச் சுவடிகள் உள்ளன. இவற்றுள் பல ஐயரவர்களே தேடித் தொகுத்தவையாகும். அவர்தம் ஆசிரியரான மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய சில தலபுராணங்களும், ஐயரவர்கள் பதிப்பித்த சில தலபுராணங்களும் இங்குச் சுவடி வடிவில் உள்ளன. திருக்கோளக்குடித் தலபுராணம், திருத்தவத்துறைப் புராணம், திருவாப்பனூர் மான்மியம், நாகப்பட்டினத் தலபுராணம், மருதூர்ப் புராணம் போன்ற சுவடிகள் இன்னும் அச்சாகவில்லை எனத் தெரிகின்றது.

---

1. என் சரித்திரம், பக். 694.

தஞ்சை சரசுவதி மகால் சுவடி நூலகத்தில் சுமார் 50 தலபுராணச் சுவடிகள் உள்ளன. பல அச்சில் வந்துள்ளன. சில தலபுராணங்களை அந்நூலகமே வெளியிட்டுள்ளது.

தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையிலுள்ள சுவடி நூலகத்தில் 6000 க்கும் மேற்பட்ட ஓலைச்சுவடிகள் உள்ளன. இவற்றுள் சுமார் 160 தலபுராணச் சுவடிகள் உள்ளன. பல அச்சானவை. மலைசைப் புராணம் போன்ற ஒருசில சுவடிகளே இன்னும் அச்சில் வராதனவாக உள்ளன.

சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்திலுள்ள சுமார் 13,000 தமிழ்ச் சுவடிகளில் நூற்றுக்கணக்கான தலபுராணச் சுவடிகள் உள்ளன. மெக்கன்சி சுவடிகள் பலவற்றில் பல தலங்களின் வரலாறுகள் உரைநடையாகக் குறித்து வைத்துள்ளதை இங்கு மிகுதியாகக் காண்கிறோம். இவ்வகையில் காகிதச் சுவடிகள் பல இங்குள்ளன.

கேரளப் பல்கலைக்கழகச் சுவடி நூலகத்தில் சுமார் 3340 தமிழ்ச் சுவடிகள் உள்ளன. இவற்றுள் சுமார் 140 தலபுராணச் சுவடிகள் இருப்பது குறிப்பிடத்தக்கது. அருணாசல புராணம் மட்டுமே இங்கு 60 சுவடிகள் இருப்பது சுட்டத்தக்கது.

இவ்வாறு வேறு பல நிறுவனங்களிலும் மடங்களிலும், தனியாரிடமும் பல தலபுராணச் சுவடிகள் உள்ளன.

## அயல்நாட்டுச் சுவடி நூலகங்களில்

பழந்தமிழ்ச் சுவடிகள் பல உலகெங்கும் பரவிக் கிடக்கின்றன. தமிழகத்திலிருந்து அயல்நாடுகளுக்குச் சென்று அங்கேயே தங்கிவிட்ட தமிழ்ச்சுவடிகள் பலவற்றுள் தலபுராணங்கள் பலவும் இருக்கக் காணலாம்.

பல நூற்றாண்டுகளாகத் தமிழ்நாட்டில் வந்து இருந்து, திரும்பிய பல கிருத்துவப் பாதிரிமார்கள் பற்பல தமிழ்ச்சுவடிகளைத் தங்கள் நாட்டிற்கு எடுத்துச் சென்றிருக்கிறார்கள் சென்ற நூற்றாண்டில் ஆங்கிலேய அரசில் பணிபுரிந்த ஆங்கிலேய அதிகாரிகள் பலர் நல்ல தமிழ்ப் புலமை யுடையவர்களாக இருந்துள்ளனர். அவர்கள் தம் தாயகம் திரும்பும்போது பல தமிழ்ச்சுவடிகளைத் தம்மோடு எடுத்துச் சென்றுள்ளனர். கீழ்த்திசை நாடுகளிலுள்ள ஓலை மற்றும் காகிதக் கையெழுத்துச்சுவடிகளைத் திரட்டும் முயற்சியில் ஈடுபட்டிருந்த பல ஆங்கிலேயே அறிஞர்களால் பல தமிழ்ச்சுவடிகள் விலைக்கு வாங்கப் பெற்றும் சென்றுள்ளன. தமிழ்நாட்டிலிருந்து சென்ற சிலர் தங்கள் நினைவுச் சின்னமாகவும் பல தமிழ்ச் சுவடிகளைக் கொண்டு சென்று பாதுகாத்துள்ளனர். அவற்றுள், இலக்கியம், இலக்கணம், வரலாறு, மருத்துவம், வானநூல் போன்ற பல துறை நூல்கள் பலவும் அடங்கும். இவ்வாறு அயல்நாடுகளுக்குச் சென்று, அங்குள்ள சுவடி நூலகங்களில் இன்றும் பாதுகாக்கப்பெற்றுவரும் சுவடிகளுள் தலபுராணச் சுவடிகளும் பல உள்ளன.

**1. பாரிசு தேசிய நூலகம்:** (Bibliotheque Nationale, Paris, France) காஞ்சிப்புராணம், திருவிளையாடற் புராணம், அருணாசலப் புராணம், அருணகிரிப் புராணம், திருக்காளத்திப்

புராணம், சிதம்பரம் கோயிற் புராணம், கடம்பவன புராணம், திருக்கழுக்குன்றப் புராணம், விருத்தாசலப் புராணம், வில்லைப் புராணம் போன்ற சுவடிகள் இங்குள்ளன.

*2. இலண்டன் நூலகம்:* (India Office Library, London) சீரங்க மகாத்மியம், சீரங்க கோயிலொழுகு போன்ற சுவடிகள் இந்நூலகத்தில் உள்ளன.

*3. ஆக்ஸ்போர்டு பாட்லியன் நூலகம்:* (Bodlieian Library, Oxford) திருவிளையாடற் புராணம், அருணாசல புராணம், கயிலாயப் புராணம் போன்ற சுவடிகள் இங்குள்ளன.

*4. ரோம் நூலகம்:* (Biblotheca Postolica Vaticana, Vatican city, Rome) அருணாசல புராணம் போன்றவை இங்குள்ளன.

*5. ஸ்வீடன் நூலகம்:* (Uppsala University Library, Uppsala, Swedan) அருணாசலப் புராணம் போன்ற சுவடிகள்

*6. ஸ்வீடன் ஸ்டாக்ஹோம் அருங்காட்சியகம்:* (Ethnographical Museum, Stockkholm, Swedan) அருணாசல புராணம் போன்ற சுவடிகள் இங்கு வைக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு பல நூலகங்களில் இனங்காணாச் சுவடிகளில் பல தலபுராணச் சுவடிகளும் இருக்கலாம் என எண்ணத் தோன்றுகிறது.

ஓலைச்சுவடிகளில் கிடைக்கும் பல தலபுராணங்களுள் அருணாசல புராணம், திருவிளையாடற் புராணம், கோயிற் புராணம், விருத்தாசலப் புராணம் போன்ற சில குறிப்பிட்ட சுவடிகளே மிகுதியாக இருக்கக் காணலாம். மிகவும் புகழ்பெற்ற தலங்களுக்குரிய புராணங்களை மக்கள் மிகுதியாகப் படிக்க வேண்டுமென்பதற்காகத் தாமே எழுதி வைத்துக் கொண்டனர் என்பதை இதன் மூலம் அறிகிறோம்.

இன்று கிடைக்கும் பழைய தலபுராண அச்சு நூல்கள் யாவும் ஓலைச் சுவடிகளிலிருந்தே அச்சிடப் பெற்றுள்ளன. சில தலபுராணங்கள் தவிர மற்றவை மறுஅச்சில் வரவே இல்லை. மறைந்துபோன தலபுராணங்கள் பல. பலவற்றுக்கு ஓலைச்சுவடியோ பல பிரதிகளோ காண்பதரிதாக உள்ளன. அச்சான நூல்களும் பல கிடைப்பதில்லை. அச்சிட்ட தலபுராண நூல்களுள் ஒரு சிலவற்றைத் தவிர மற்றவை யாவும் திருந்திய பதிப்பினையும் பெறவில்லை. எனவே, அச்சான பல பழைய தலபுராண நூல்களும் சுவடியாகவே கருதத்தக்க நிலையில்

எனவே, சுவடிகளிலுள்ள அச்சாகாத தலபுராணங்களையும், அச்சான நூல்கள் பலவற்றையும் திருந்திய வடிவில், உரையுடன் பதிப்பிப்பின் மிகவும் பயனுடையதாகும்.



# தலபுராணப் பதிப்புகள்

தமிழில் தலபுராணங்கள் தோன்றிய காலம் முதல் அவை, சுவடிகளில் எழுதிக் காப்பாற்றப் பெற்றன. அத்துடன் புராணச் சொற்பொழிவாளர்களால் அவ்வப்போது விரித்துரைக்கப்பெற்று மக்கள் அனைவரிடமும் பரவி இருந்தன. சென்ற நூற்றாண்டில் அச்சு நூல்கள் மிகுதியாக வெளிவரத் தொடங்கியவுடன் தமிழிலும் பல நூல்கள் சுவடிகளிலிருந்து அச்சில் பதித்து வெளியிடப் பெற்றன. இவ்வகையில் தலபுராணங்களைப் பலரும் படித்துப் பயன்பெற வேண்டும் என்னும் நோக்கில் சிலர் அச்சில் பதிப்பிக்கத் தொடங்கினர். இந்நூல்கள் அச்சில் வெளிவந்தால், தல வரலாறுகளை மக்கள் எளிதில் உணர்ந்து, தல வழிபாடுகளைப் பொருள் உணர்ந்து போற்றுவர் என இவர்கள் முனைந்து செயல்பட்டனர்.

தலபுராணங்களை மக்கள் வழி வழியே கேட்டறிந்த காரணத்தால் அத்தலங்களுக்குரிய விழாக்கள் முதலியனவும் முறைப்படி செய்யப்பட்டு வருகின்றன. இதை மேலும் வளர்க்கவே தல வரலாறுகளை அச்சிற் பதிப்பித்து அனைவரிடமும் பரப்பினர் எனலாம். காட்டாக, தஞ்சை அரண்மனை, சரபோஜி மகாராஜா அவர்கள் உத்தரவின்படி சிவக்கொழுந்து தேசிகர் அவர்கள் இயற்றிய மருதவன புராணத்தை அச்சில் பதிப்பித்த திரு. கி. சாமிராவ்காடே சாகிப் அவர்கள் தம் பதிப்பில் குறிப்பிட்டுள்ளவை இவண் சுட்டத்தகும்.

"சோழ நாட்டிற் திருவலஞ்சுழி குருகிரி முதலிய திவ்விய ஸ்தலங்களை விநாயகர் சுப்பிரமணியர் முதலிய பரிவார தேவதா ஸ்தலமாகக் கொண்ட மத்தியார்ச்சுன க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும் சர்வலோகைக நாயகராகிய ஸ்ரீ மகாலிங்க பெருமானை அவரது சத்திருபமாகிய சுப்பிரமணிய பெருமான் கங்கையை யழைத்து அதனால் அபிடேகித்து அருச்சித்த சரித்திரத்தை, இம்மருதவன புராணத்தால் உணர்ந்த காலந் தொடங்கி, அம்முறையை உற்சவமாக நடத்த வேண்டி, ஆசையோடு அச்சுப்பிரமணிய பெருமானைப் பிரார்த்தித்து, அப்பெருமானது கருணையால், நாம் எமது அன்பர் அம்மாபேட்டைக் கந்தசாமிச் செட்டியார் திருமாந்துறைச் சபாபதிப்பிள்ளை, திருப்பணிப்பேட்டை கோவிந்தசாமிப்பிள்ளை ஆகிய இவர்களுடன் சர்வசித்து வருட முதல் உற்சவமாக நடத்தி வருகின்றோம். அவ்வாறு நடத்தி வருவதற்குக் காரணம் இப்புராணத்தை முன் உணர்ந்திருந்தமையே யாகலான், குமார பூசையின் மகிமை, மூர்த்தி, தல தீர்த்த விசேடம், சிவனருளால் நற்கதி அடைந்தோர் சரித்திரம் முதலிய இவைகளனைத்தும் யாவர்க்கும் நன்கு தெரிந்தாலன்றி அம் மகாலிங்க பெருமானிடத்துப் பத்தி செய்ய முடியாதாகலான், அவற்றை யாவரும் வெளிப்பட வுணர்ந்து பத்தி செய்துய்யும் பொருட்டு, இம்மருதவன புராணத்தை அச்சிட்டு வெளிப்படுத்தினோம்" என்னும் இச்செய்தியை

இப்பதிப்பின் பின்புற அட்டையில் 'பிரகடனம்' என்ற தலைப்பிட்டு அச்சிட்டிருக்கக் காணலாம்.

இந்நூலைச் சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்பு (1893) அச்சிட்ட திரு. கி. சாமிராவ் காடேசாகிப் அவர்கள், திருவிடைமருதூர் குமாரபூசை மகோற்சவம் நடத்தி வந்த திரு. கிருஷ்ணசாமி காடேராவ் சாகிப் அவர்களுடைய குமாரர் என்பது இவண் குறிப்பிடத்தக்கது. தாம் நடத்தும் தலச்சிறப்பு விழாக்களில் மக்கள் பெருந்திரளாகக் கூடும் பொழுது அத்தல வரலாறு கூறும் புராண நூல்களை மக்கள் பெறும் படிச் செய்வதே இப்புராணப் பதிப்பாசிரியர்களின் பணியாக இருந்ததைக் காண்கிறோம். இவ்வாறு பலரும் கோயில் குடமுழுக்கு போன்ற விழாக் காலங்களில் இத்தகைய தலபுராணங்களை அச்சிட்டுள்ளனர்.

## பதிப்பில் திருத்தம்

தலபுராணங்களை ஓலைச்சுவடிகளில் எழுதியோர் அதில் சில தவறுகளையும் செய்திருப்பர். இவ்வாறு சுவடிகளில் எழுத்து, சொல், தொடர் போன்ற பல நிலைகளில் மாறுபாடுகள் தோன்றுவதும், இடைச்செருகல்கள் பல எழுவதும் இச்சுவடிகளை ஆராய்ந்து பதிப்பிப்போர் அறிவர். இத்தகைய தவறுகளையெல்லாம் நுணுகி ஆராய்ந்து கண்டு, 'சுத்த பாடம்' கொண்டு, அச்சில் பதிப்பித்ததாகப் பதிப்பாசிரியர் சிலர் நூலின் முகப்பிலேயே குறிக்கக் காணலாம். காட்டாக, சைவ எல்லப்பநாவலர் இயற்றிய தீர்த்தகிரி புராணம் என்னும் தலபுராணத்தை 1870 ஆம் ஆண்டில் புதுவை க. சுப்பராய முதலியார் அவர்கள் அச்சிட்டுள்ளார்கள். அந்நூலின் முகப்பிலுள்ள செய்தி வருமாறு :

"தருமபுரி ஜவுளிக்கடை-வீரபத்திர நாயகர், அரியூர்-சென்னி செட்டியார், சென்னை த. அ. கன்னைய செட்டியார் கேட்டுக் கொண்ட படி, புதுவை க. சுப்பராய முதலியாரால், சேலம்-ஊற்றங்கரை அரியூர்-தருமபுரி முதலிய கொங்கு தேயத்தில் இதுகாறும் பயின்று வந்த ஏட்டுப் பிரதிகள் தோறும் எழுத்துஞ் சொல்லும் அடியுஞ் செய்யுளும்-பலவாறு ஒன்றற்கொன்று ஒவ்வாமல் வேறுபட்டும்-சிதைந்தும்-வழூஉக்களால் பொதிவுற்றிருந்ததால் அவற்றைக் களைவதில் உழைப்புற்றும்-மிகைகளை ஒருவாற்றாற் களைந்து சுத்த பாடமாக வழங்குவிக்கும் பொருட்டு, புரசை-அட்டாவதானம் சபாபதி முதலியார் முதலிய வித்வான்கள் முன்னிலையில் பரிசோதித்துத் தாம் நூதனமாக இயற்றிய பொழிப்புரையுடன் மேற்படி த. அ. கன்னைய செட்டியாரால், பு. ம. சபாபதி முதலியாரது கல்வி விளக்க அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப் பட்டது" என்னும் இச்செய்தி முழுவதும் இந்நூலின் மேலட்டையில் அச்சிடப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

## இதம்பெறத் திருத்திய சிதம்பர முனிவர்

பதினெட்டாம் நூற்றாண்டில் மதுரை மாநகரில் திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனத்தில் எழுந்தருளியிருந்தவர் சிதம்பர அடிகள். இவர் அந்நாளில் பிழை மலிந்து தவறாக வழங்கி வந்த சிதம்பர புராணம் என்னும் தலபுராணத்தைச் செப்பஞ் செய்து திருந்திய முறையில் வெளியிட்டுள்ளார். திருவருட்பிரகாச வள்ளலார் சிதம்பரம் இராமலிங்க

அடிகள் இந்நூலுக்கு அகவற்பாவாற் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார். அதில் அவர், "சிதம்பர புராணம் இதம்பெறத் திருத்திய சிதம்பர முனிவன் பதம் பரவியது" என்று தலைப்பிட்டு வழங்கியிருப்பது சுட்டத் தருவதாகும். இப்பதிப்பாசிரியரின் அறிவுநுட்பம், ஆற்றலுடைமை ஆகிய பண்புநலன்களை விரிவாகப் பாடி, அவர் இத்தலபுராணத்தை நுண்ணிய அறிவால் தெளிவுடன் திருத்தி அச்சிட்டதையும் வள்ளலார் சுட்டக் காணலாம்.

" . . .                . . .                . . .
தன்போன் றவரிலாச் சாந்த வேந்தன்
சைவம் பழுத்த தனித்தரு நங்குல
தெய்வமா மதுரைச் சிதம்பர தேவன்
புண்ணிய சிதம்பர புராணந் தன்னை
நுண்ணிய அறிவால் நோக்குபு திருத்தும்
ஏர்பெற இயற்றி யாவரும் பயின்றுயப்
பாருறும் அச்சிற் பதிப்பித் தருளிய
உதவியை நினைந்துளம் உவந்தெப் பொழுதும்
பதம்அருள் அவனருட் பதமிறைஞ் சுதுமே".

என்பது அச்சிறப்புப் பாயிரப் பாடல்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வேலைய தேசிகரிடம் கல்வி பயின்ற திரு. தா. சிவலிங்கம் பிள்ளை என்பவர் தம் ஆசிரியர் இயற்றிய திருவைகாவூர்ப் புராணத்தைத் திருத்தி அச்சிட்டு வெளிப்படுத்தியுள்ளார். இவ்வாறு பிற்காலத்தில் பலரும் தலபுராணங்களை அச்சில் திருத்திப் பதிப்பித்துள்ளனர்.

பதிப்பில் திருத்தி அச்சிட்டோர் தாம் செய்தனவற்றைப் பதிப்பு முகவுரையில் கூறிச் செல்வதும் குறிப்பிடத்தக்கதாகும். பாலசுப்பிரமணியக் கவிராயர் இயற்றிய பழனித் தலபுராணத்தைக் கிரந்தம் ஈஸ்வரய்யர் என்பவர் அச்சில் பதிப்பித்துள்ளார். இந்நூலின் இறுதியில், 'இப்புராணம் திருத்தி அச்சிட்டவர் இசைத்த திருப்புகழ்ச் சந்தக் கவிகள்' என்ற தலைப்பில் ஏழு திருப்புகழ்ப் பாடல்கள் உள்ளன. இவ்வாறு, பதிப்பில் திருத்தம் செய்தவர்களே இச்செய்திகளைப் பாடலாக வடித்து அச்சு நூல்களில் சேர்த்திருக்கக் காணலாம்.

## பதிப்பு அறம்

முற்காலப் பதிப்பாசிரியர்கள் தாம் சுவடிகளைப் பதிப்பிக்கு மிடத்து, கிடைக்கும் எல்லாப் பிரதிகளையும் தேடிச் சேர்த்தல், பொருள் நோக்கிப் பாடல்களைப் பாடித் தெளிதல், ஏடு எழுதியோர் செய்த பிழைகளைக் களைதல் போன்ற படி நிலைகளை அமைத்துக் கொண்டு பதிப்பித்தனர்.

"பொருந்திவரை பலபிரதிக் கிணங்கநல்லோர் அருள்புனைந்து பொருளுரு சொலவும்
திருத்திவரை யறைதெரிந்தச் சியற்றினன்தென சேறைநகர்ச் சிறந்த நூலுள்
கருத்திவரை வகையியலும் இலக்கியமும் கற்றறிந்தோன் கருணை ஞான
விருத்திவரை வேலவரைப் பணிந்தேத்தும் கணபதிப்பா வேந்தர் வேந்தே"

என்பது அப்பரமேசர் தலபுராணத்திற்குத் திரு. சி. முத்துச்சாமிப் புலவர் என்பவர் அளித்துள்ள சிறப்புப் பாயிரமாகும். இதில் அக்காலப் பதிப் பாசிரியர் எவ்வளவு விழிப்புடன் செயல்பட்டனர் என்பது புலனாகும்.

பதிப்பில் திருத்தங்கள் மேற்கொள்ளும்பொழுது, மூல நூலாசிரி யரின் கருத்துக்கு மாறுபாடு தோன்றாதவாறும், மூலநூல் வடமொழி யாயின் அதன் மரபுக்கு மாறுபாடு தோன்றாதவாறும் பதிப்பிப்பதென் பதை ஓர் அறமாகவே இப்பதிப்பாசிரியர்கள் மேற்கொண்டிருந்தனர் எனத் தெரிகின்றது. இதற்கு எடுத்துக்காட்டாகப் பல பழைய பதிப்பு களைச் சுட்டலாம்.

சோழ நாட்டிலுள்ள திருநாகேச்சுரம் என்னும் தலத்திற்குரிய வடமொழிப் புராணத்தைத் தமிழில் மூவல் ப. சிங்காரவேற் பிள்ளையவர்கள் மொழிபெயர்த்து இரண்டு பாகங்களாக வெளி யிட்டுள்ளார். இவர், வடமொழிப் புராணத்தை முதலில் குற்றாலம் வீரராகவாச்சாரியார் அவர்களைக் கொண்டு தமிழில் மொழி பெயர்த்து, அதனைத் தேப்பெருமாள் நல்லூர் சுப்பிரமணிய சாஸ்திரியாரவர்களைக் கொண்டு திருத்தமுற ஒத்து நோக்கித் தமிழ் மொழியில் பாட்டிடை விரவிய உரைச் செய்யுளாகச் செய்து அச்சிட்டளித்துள்ளார். இந்நூலின் இரண்டாம் பாகத்தின் இறுதியில் நூலாசிரியர் தரும் குறிப்பு வருமாறு:

"இப்புராணம் வடமொழியில் அறுபத்து மூன்று படலங்களா கவே காணப்படினும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட இந்த நாற்பத்து மூன்று படலங்கள் மட்டுமே, இறைவனால் இறைவிக்குச் சொல்லப்பட்டு ஓர் புராணமாக முடிக்கப்பட்டமையாலும், இதன்பின் காணப்படும் ஏனைய இருபது படலங்களும் பிறர்களால் பிறர்க்கு வேறுபிரித்து இந்த நாற்பத்து மூன்றின் விரிவுரையாகவே சொல்லப்பட்டமையாலும் இப்போது இறைவனால் இறைவிக்குச் சொல்லப்பட்ட நாற்பத்து மூன்று படலங்களையுடைய இப்புராணம் மட்டுமே தமிழில் மொழி பெயர்க்கப் பட்டுப் பாட்டிடை விரவியவுரைச் செய்யுளாக இயற்றிப் பதிப்பிக்கப் பட்டது. இதன் விரிவுரையாகக் காணப்படும், ஏனைய இருபது படலங் களையும் பின்னர் இறைவன் இன்னருள் கூட்டுமேல் இம்முறையே தமிழில் மொழிபெயர்த்து இதன் பிற்பாகமாகப் பதிப்பிக்கவும் விருப்பமுள்ளேன்' என்பர் இந்நூலாசிரியர்.

இவ்வாறு, மூலநூலில் உள்ள செய்திகளின் பயன்பாடு, மக்களின் தேவை, பதிப்பின் நம்பகத்தன்மை ஆகிய எல்லாவற்றையும் கருத்தில் கொண்டே இவர்கள் இந்நூல்களைப் பதிப்பித்துள்ளனர் எனத் தெரிகிறது.

## இடைச்செருகல்

இக்காலத்தில் குன்றக்குடி என வழங்கும் மயூரகிரியின் மான்மியத்தை 1785 இல் மதுரை வேதாந்த சுப்பிரமணிய பிள்ளை என்பவர் வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்த்து 13 சருக்கங்களும் 589 பாடல்களும் கொண்ட தலபுராணமாக இயற்றியளித்துள்ளார். இத்தலபுராணத்தை முதன் முதலாகத் திரு. ந. ச. பொன்னம்பலம் பிள்ளை அவர்கள் 1885 ஆம் ஆண்டு அச்சிற் பதிப்பித்துள்ளார். அதில், இந்நூலில் இடைச் செருகலாக

அமைந்த பகுதிகளைத் தாம் களைந்து பதிப்பித்திருப்பதை இவர்தம் 'நூன்முகத்தில்' பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

"சிலர் இப்புராணத்திலே தெய்வநாயகி திருமணச் சருக்கம் என ஒன்று ஈற்றிலுளதன்றோ அதனை யொழித்துவிட்டதென்னை என்பராயின், அது வடமொழி மயூரகிரி மான்மியத்தில் இல்லாமையினாலும், யாழ்ப்பாணத்தைச் சார்ந்த அராலியில் வசித்த ஒரு பிராமணராற் புதிதாய்ப் பாடிச் சேர்க்கப்பட்டமை சந்தேகமின்றித் தெரிந்தமையினாலும், வடதேயத்திலுள்ள ஏட்டுப்பிரதிகளிற் தவிர்க்கப் பட்டமையினாலும், ஸ்ரீலஸ்ரீ சற்குருநாத சுவாமிகளாகிய நாவலரவர்கள் வில்லிபுத்தூராழ்வார் பாரதத்தைத் திருத்தி அச்சிட்ட பொழுது அவ்வாழ்வாராற் பாடப்படாது வேறொருவராற் புதிதாய்ப் பாடி ஈற்றிற் சேர்த்த முடிசூட்டுச் சருக்கத்தை யொழித்துவிட்டமையினாலும், ஏனைப் புலவர்களும் பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், கம்பராமாயணம் முதலியவற்றைத் திருத்தி அச்சிடுவித்தபொழுது அவற்றிற் புதிதாய்ப் பாடிப் பிறர் சேர்த்த செய்யுட்களை யொழித்து விட்டமையினாலும், யானும் அச்சருக்கத்தை இதனிற் சேர்த்தல் தவறென்றொழித்துவிட்டேன் என அறிக. இதனை விவேகிகளுணர்ந்து தெய்வநாயகி திருமணச் சருக்கத்தை யொழித்துவிட்டது தவறென்று என்மீது குற்றமேற்றாதிருப்பார்களென்று நம்புகின்றேன்."

இதேபோன்று, தட்சிணகைலாச புராணம் என்னும் திரிகோண மலைப் புராணத்தை அச்சிட்ட யாழ்ப்பாணம் திரு. கா. சிவசிதம்பர ஐயர் அவர்கள் தம் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளவையும் ஈண்டு நோக்கத்தக்கது.

"இப்புராணத்திலே திருநகரச் சருக்கம் ஈற்றிலுள்ளதன்றோ? அதிலுள்ள சரித்திரங்களெல்லாம் முதனூலாகிய மச்சேந்திய புராணத்திலே கூறப்படாதிருப்ப, அதனையுஞ் சேர்த்து அச்சிட்ட தென்னை யென்பாராயின், ஆசிரியர் வடநூலிலே கூறிய சரிதமன்றி, பின்னர் நடந்த சரிதத்தை தாஞ் சேர்த்த தென்றமையானும், அறுநூற்று முப்பத்திரண்டென விருத்தத்தொகை கூறப்பட்டமையானும், மேற்கூறிய சருக்கத்தை விலக்கின் ஆசிரியர் கூற்று மாறுபடுமென்பது கருதியென்க. ஆதல் பற்றி நம்மேற் குறை கூறாதிருப்பான் புலவர்களை வேண்டுகின்றேன்.

இப்புராணத்தைப் பார்க்கும் உபயோகமாம் பொருட்டு அடியேன் பிதாவாகிய, ஸ்ரீலஸ்ரீ மு. கார்த்திகேயையரவர்களைக் கொண்டு பெரும்பான்மையும் கண்ட பிரதிகளின் வண்ணமே பரிசோதிப்பித்து அச்சிடுவித்தேன். ஆனால், அர்த்தம் புலப்படாத விடங்களிற் பிரதிகளிற் கண்டவண்ணமே பிரகரிக்கப்பட்டது. என்னை? ஆசிரியர் கருத்தை யறியாது ஒன்றை விலக்கலும், நூதனமாக வொன்றைச் சேர்த்தலும், ஒன்றையொன்றாக மாற்றுதலும் அறிவுடையோர்க்கழகன்று ஆகலின்" என இவ்வாறு இப்பதிப் பாசிரியர் குறிப்பர்.

இவ்வகையில் தலபுராணப் பதிப்பில் அக்காலப் பதிப்பாசிரியர் கொண்டிருந்த விழிப்புணர்வும், நேர்மையும், உழைப்பும், நுணுகி ஆராயும் பண்பும் பாராட்டத்தக்கன.

## சிறப்புமிகு பதிப்பாசிரியர் சிலர்

தொல்காப்பியம், வீரசோழியம் போன்ற நூல்களை முதன்முதலாகப் பதிப்பித்தது போலவே தணிகைப் புராணத்தையும் பதிப்பித்தவர் திரு. சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்கள். இதே போன்று திரு. கா. ரா. நமச்சிவாய முதலியார் அவர்களும் தணிகைப் புராணத்தைப் பதிப்பித்தார். இவ்வாறு குறிப்பிடத்தக்க சில பதிப்பாசிரியர்கள் தலபுராணங்களைச் செம்மையாகப் பதிப்பித்து இந்நூல்களுக்கு அணி சேர்த்தனர்.

தமிழில் மிகுதியான தலபுராணங்களை இயற்றிய மகாவித்து வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பலருடைய வேண்டு கோளுக்கு இணங்கிச் செவ்வந்திப் புராணம், காஞ்சிப் புராணத்தின் முதற்பாகம், திருவானைக்காப்புராணம் போன்றவற்றைப் பதிப்பித்து அளித்துள்ளார்.

மகாவித்துவான் அவர்களிடம் ஈடுபாடு மிக்க வித்துவான் தியாகராச செட்டியார் அவர்கள் உறையூர்ப் புராணம், திருக்குடந்தைப் புராணம், பூவாளூர்ப் புராணம் ஆகியவற்றைச் சிறப்பாகப் பதிப் பித்துள்ளார்.

இவர்கள் வரிசையில் மிகவும் குறிப்பிடத்தக்கதொரு பதிப்பாசிரி யராக விளங்குபவர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள். தமிழில் மிகுதியான நூல்களையும் மிகப் பழமையான நூல்களையும் ஒருசேரப் பதிப்பித்தளித்த ஐயரவர்களே 'தமிழில் மிகுதியான தலபுராணங்களைப் பதிப்பித்தவர்' என்ற சிறப்புக்கும் உரியவராகிறார். 1883 முதல் 1940 வரையில் 13 தல புராணங்களை இவர் பதிப்பித்தளித்துள்ளார்.

## டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் பதிப்பித்த தலபுராணங்கள்

1. திருக்குடந்தைப் புராணம் (1883)
2. திருப்பெருந்துறைப் புராணம் (1892)
3. வீரவனப் புராணம் (1903)
4. சூரைமாநகர்ப் புராணம் (1904)
5. தியாகராசலீலை (1905)
6. திவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் (1906)
7. தனியூர்ப் புராணம் (1907)
8. மண்ணிப்படிக்கரைப் புராணம் (1907)
9. திருக்காளத்திப் புராணம் (1912)
10. விளத்தொட்டிப் புராணம் (1934)
11. ஆற்றூர்ப் புராணம் (1935)
12. தணிகாசல புராணம் (1939)
13. வில்லைப் புராணம் (1940)

இத்தலபுராணங்களின் பதிப்பில் இவர் எழுதிச் சேர்த்திருக்கும் குறிப்புரை, அரும்பதவுரை, முகவுரை போன்றன மிகவும் குறிப்பிடத் தக்கன. ஒவ்வொரு பதிப்பிலும் இவர்தம் முகவுரையில் எல்லாச் செய்தி களையும் சுருக்கி உரைப்பது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். தலம் இருக்குமிடம், தலத்தின் வேறு பெயர்கள், தல இறைவன் இறைவியின் பெயர்கள், தீர்த்தம், விருட்சம், வழிபட்டுப் பேறு பெற்றோர்கள் வரலாறு, இந்நூலிலுள்ள முக்கியமான பகுதிகள் என இவ்வாறு நூலைப்பற்றிப் பிறர் அறிய விழையும் அத்துணைச் செய்திகளையும் முன்னே சுருக்கியளிப்பது இவருடைய தனிச்சிறப்பாகும். ஐயரவர் களுடைய முகவுரையால் அந்நூலை முழுமையாகப் படிக்க வேண்டும் என்ற ஆர்வம் அனைவருக்கும் ஏற்படும். தலபுராணங்களில் கூறப் பெறும் செய்திகளைத் தாம் தெளிவாக அறிந்துணர்ந்த பின்னரே பதிப்பிப்பது இவர்தம் இயல்பு. இதனால் ஒரு நூலைப் பதிப்பிக்கப் பல ஆண்டுகளாக இவர் அரிதின் முயன்று பாடுபட்டதை இவர் வரலாற்றால் அறிகிறோம். தலபுராணப் பதிப்பாசிரியர்களுக்கு மிகச் சிறந்ததொரு வழிகாட்டி என்றே இவரைக் குறிப்பிடலாம். தல வரலாறு களை அறிவதில் அவருடைய ஆசிரியர் போலவே ஐயரவர்களும் கொண்டிருந்த ஈடுபாட்டைக் கூறுவர் திரு. கி. வா. ஜ. அவர்கள்.

"தல தரிசனம் என்பது அவருக்கு மிகவும் விருப்பமான செயல். தலங்களைப் பற்றிய செய்திகளைச் சேகரிப்பதில் பேரார்வம் உடைய வராக இருந்தார். ஏதேனும் தலத்திற்குச் சென்றால் அந்தத் தலத்தைப் பற்றிய வரலாறு, வடமொழி, தென்மொழியில் வழங்குகின்ற அந்தத் தலத்திலுள்ள பெருமான் பெயர், அம்பிகை பெயர், அந்தத் தல சம்பந்த மான நூல்கள் முதலியவற்றைப் பல பேரிடம் விசாரித்துத் தெரிந்து கொள்வார். அவற்றையெல்லாம் குறிப்புக்களாக எழுதிவைப்பார். இவ்வாறு சேகரித்த குறிப்புக்கள் மிக அதிகமாக இருக்கின்றன. தேவாரத்தைச் சமயம் கிடைக்கும்போது அச்சிட வேண்டுமென்ற ஆசை ஆசிரியப் பெருமானுக்கு இருந்தது. தேவாரத்தில் வரும் சொற் பொருள்களைத் தொகுத்து இரண்டு அகராதிகளை எழுதி வைத்துக் கொண்டார். தலங்களின் சம்பந்தமான செய்திகளை அப்போது பயன்படுத்திக் கொள்ளலாம் என்று எண்ணினார். அதுமட்டுமன்றித் தலபுராணங்களை ஆராயும்போது அந்தச் செய்திகள் எல்லாம் பயன்பட்டன. பல தலபுராணங்களை அவர் அச்சிட்டிருக்கிறார். அந்தப் புராணங்களின் குறிப்புரையில் தாம் கேட்டறிந்தும் நூல் வாயிலாக அறிந்துகொண்டும் தொகுத்த செய்திகளைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்." என்பர் திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள்.[1]

மேலும், 1909ம் ஆண்டில் ஐயரவர்கள் திருவாவடுதுறை சென்றிருந்த போது அங்கிருந்த தேதியூர் மகாதேவசிவன் என்ற பெரிய வரிடம் பல தலங்களைப் பற்றியும், தீர்த்தம், விருட்சம், மூர்த்தி போன்ற வற்றைக் கேட்டறிந்து குறித்துக் கொண்டது பற்றியும், பிற்காலத்தில் முத்து என்றும் வண்ணாரப் பரதேசி என்றும் வழங்கிய ஒருவரிடம் இத்தகைய குறிப்புக்களை அவர் கேட்டு எழுதிக் கொண்டது பற்றியும் கி. வா. ஜ குறிப்பிடுவர்.[2]

---

1. என் ஆசிரியப்பிரான், பக். 22, 23.
2. என் ஆசிரியப்பிரான், பக். 81, 82, 218.

## வாய்மொழி இலக்கியத்தில் தல வரலாறுகள்

தலங்களின் வரலாறுகளை எடுத்துக்கூறும் வகையில் சிறப்பிடம் பெறுவன வழிவழி வழங்கப் பெற்றுவரும் வாய்மொழி இலக்கியங் களாகும். இவற்றின் வழியில்தான் பழந்தமிழ் புலவர்கள் தல வரலாறு களை அறிந்து விளக்கினர் என்பதற்கு ஐயரவர்கள் வாழ்க்கையும் ஓர் எடுத்துக்காட்டாகும்.

அந்தக் காலத்தில் சிவாலயங்களில் ருத்திர கணிகையர் இருந்து சில தொண்டுகளைச் செய்து வந்தார்கள். அதனால் அவர்களுக்குத் 'தேவரடியார்' என்ற பெயர் அமைந்தது. அது பிற்காலத்தில் வேறுவித மாக மாறிவிட்டது. ருத்திர கணிகையர் தொண்டுகளில் தட்டெடுப்பது என்பது ஒன்று. "ஆலவாய்ச் சொக்கருக்குத் தட்டதெடுக்கும் தனியிலார்" என்று விறலிவிடுதூதில் வருகிறது. அவர்கள் பாடும் பாடல்களில் தல சம்பந்தமான பல செய்திகள் இருக்கும், இறைவன் இறைவிக்குரிய பெயர்கள் வடமொழியில் வழங்கி வந்தாலும் அவற்றிற்குச் சரியான தமிழ்ப்பெயர்கள் அந்தப் பாடல்களில் இருக்கும். இதை நன்கு அறிந்திருந்த ஐயரவர்கள், ஒருமுறை புதுக்கோட்டைக்குச் சென்றிருந்த போது, குடுமியாமலை சென்று தரிசனம் செய்துவிட்டு, இந்தத் தலத்து ருத்திரகணிகையரில் வயதானவரை அழைத்து வரச் செய்தார். அந்த ருத்திரகணிகையிடம், தட்டெடுக்கும்போது பாடும் பாட்டைப் பாடச் சொல்லிக் கேட்டுக் குறித்துக் கொண்டார். பிறகு உடன் இருந்தவர்களைப் பார்த்து, "இப்போது வரவரப் பழைய பழக் கங்களெல்லாம் மறைந்து வருகின்றன. தல சம்பந்தமான பல பழைய வரலாறுகள் சொல்வார் இல்லாமல் மறைந்துபோய் விடுகின்றன. இந்த மாதிரி உள்ள தாசிகள் பாடல்களில் தல சம்பந்தமான குறிப்புக்கள் இருக்கும். அவை பல காலமாகப் பரம்பரை பரம்பரையாக வந்திருப்பவை. இப்போதெல்லாம் அவற்றைப் பாடுகிறவர்கள் குறைவாகப் போய் விட்டார்கள்" என்று சொல்லி வருந்தினார் என்பர் திரு. கி. வா. ஜ அவர்கள்.[1] இந்நிகழ்ச்சிகள் மூலம் ஐயரவர்கள் தல வரலாறுகளில் கொண்டிருந்த ஆர்வம் புலனாகும்.

## தியாகராசலீலை புராணப் பதிப்பு

டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்கள் மிகவும் அருமையான சங்க நூல்களைப் பதிப்பித்தவர். திருவாரூர்த் தியாகராசலீலை என்னும் தலபுராணம் பிற்காலம் எழுந்ததாயினும் அரைகுறையானது. மூல நூல் முற்றும் கிடைக்காததால் தம் ஆசிரியப்பிரானாகிய மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் அந்நூலில் 360 லீலைகளில் 14 லீலைகளை மட்டுமே செய்யுளாக இயற்றியிருந்தார். முற்றுப்பெறாத நூல் என்பதாலும் அது சுவை மிக்கது என்பதாலும், தம் ஆசிரியரின் முதல் தலபுராணப் படைப்பு என்பதாலும் ஐயரவர்கள் அப்புராண நூலினை மிகவும் பயபக்தியோடு பதிப்பிக்க விரும்பினார். 1905 ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பெற்ற அப்புராணப் பதிப்பில் எழுதிய ஒரு பாடலில்,

1. என் ஆசிரியர் பிரான், பக். 28, 29.

"எண்ணிய பலவும் மாணவர்க் கன்பின் ஈந்திடு நிதிதமிழ் விளங்க
நண்ணிய புகழ்மீ னாட்சிசுந் தரநன் னாவலன் நன்கினி தாய்ந்து
பண்ணிய விதி விடங்கர்தம் ஆடற் பனுவலைப் பதிப்பிக்க இசைந்த
புண்ணிய மதனை நினைதொறும் எனது புந்திமிக் கின்புறு மாலோ"

என்று குறிப்பிடுவர்.

சங்க நூல்களைப் பதிப்பித்ததைவிடத் தம்மாசிரியர் இயற்றிய முதல் தலபுராண நூலைப் பதிப்பித்ததைப் பெறும் புண்ணியமாகவே அவர் கருதினார் என்பது புலப்படும்.

## நாராயண செட்டியார் (வன்தொண்டர்)

சென்ற நூற்றாண்டில் மிகுதியான பாடல்களை இயற்றியும் தலபுராணங்களைப் பாடியும் புகழ்பெற்ற மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இந்நூல்களை இயற்றுவதற்கும் அவை பதிப்பாகி வெளிவருவதற்கும் பெரும்பாடுபட்டவர்களுள் குறிப்பிடத்தக்கவர் நாராயண செட்டியார் அவர்கள்.

பழைய தலபுராணங்களைப் பாடங் கேட்டல், புதிய தலபுராணங்களை இயற்றப் பிறரைத் தூண்டி உதவுதல், சிறந்த, திருத்தமான தலபுராணப் பதிப்புகளை வெளிக்கொணர்தல் என்பன போன்ற சீரிய பணிகளை ஆற்றியவர் இவர்.

தேவகோட்டையிலே நாட்டுக்கோட்டைச் செட்டியார் வகுப்பிலே அண்ணாமலைச் செட்டியாருக்கு மகனாகப் பிறந்த இவர் இளமையிலேயே இரண்டு கண்களையும் இழந்தவர். ஆயினும், பிறரைப் படிக்கச் சொல்லிக் கேட்டே தமிழ் நூல்கள் முழுமையும் கற்றவர். கீழ்வேளூர் சுப்பிரமணிய தேசிகர், திருநெய்த்தானம் வேங்கடராம ஐயங்கார், மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை போன்ற பெரியோர்களிடம் பாடங் கேட்டுத் தெளிந்தவர் இவர். பிள்ளையவர்களிடத்திலே காஞ்சிப்புராணம், கந்தபுராணம், திருவானைக்காப் புராணம், திருத்தணிகைப் புராணம், பேரூர்ப் புராணம் போன்ற தல புராணங்களையும் இவர் பாடங்கேட்டார். இவருடைய சிவபக்தியையும் புலமையையும் மெச்சிய பிள்ளையவர்கள்,

"சத்திவாழ் வாமத்துச் சங்கரன்பொற் றாட்கமலப்
பத்தியால் தேவார பாராய - ணத்தினால்
வான்றோய் புகழ்மிகுத்த வன்தொண்டன் என்னும்பேர்
சான்றோய் நினக்குத் தகும்".

எனப் பாராட்டினர். அதுமுதல் நாராயண செட்டியாருக்கு 'வன்தொண்டர்' என்னும் பெயர் நிலைத்து நாளடைவில் நாராயணன் என்னும் பெயரே மறைந்துவிட்டது.

வன்தொண்டரிடம் கல்வி கற்றவர்கள் பலர். வீர. லெ. சின்னைய செட்டியார், இராமசாமிச் செட்டியார், காரைக்குடி ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியார் ஆகியோர் மிகச் சிறந்த மாணாக்கர்களாவர். இவர்களுள் சொக்கலிங்கச் செட்டியார் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களைப்போல் செய்யுள் இயற்றும் ஆற்றல் அமையப்பெற்றவராய்ச் சுமார் நூறு நூல்கள் வரையில் இயற்றியளித்துள்ளார் என்பது இவண் குறிப்பிடத்தக்கது.

## தலபுராணம் தோன்ற உதவுதல்

வன்தொண்டராகிய நாராயண செட்டியார் மகாவித்துவான் பிள்ளையவர்களிடம் பேரன்பும் பெருமதிப்பும் கொண்டிருந்தவர், பல சமயங்களில் பிள்ளையவர்கள் கடன் தொல்லையாலும் வறுமையாலும் வாடுதலை உணர்ந்த இவர் பிள்ளையவர்கட்கு உதவ எண்ணினார். நாட்டுக்கோட்டை நகர வட்டத்திலுள்ள சில சிவப்பதிகட்குப் புராணம் பாட வேண்டும் என்று வேண்டிக்கொண்டார். பிள்ளையவர்களும் இதனை ஏற்றுக்கொண்டு, சூரைமா (சூரைக்குடி) நகர்ப்புராணம் கோயிலூர்ப்புராணம், கண்டதேவிப் புராணம், சாக்கோட்டை என்னும் வீரவனப் புராணம் ஆகியவற்றை இயற்றியளித்தார்.

பிள்ளையவர்கள் பிறவிடங்களில் புராணம் பாடி அரங் கேற்றினால் அவ்விடங்களில் கிடைக்கும் பொருள்கள் செலவுக்குச் சரியாகப் போய்விடும். பிள்ளையவர்கள் சென்றது போலவே திரும்பி வெறுங்கையாகப் போய்ச் சேர்வது வழக்கம். அவ்வாறு ஆகவிடாமல் பொருளைப் பாதுகாத்துக் கொண்டுபோய்ச் சேர்த்துத் தக்கவாறு பயன்படுத்தும் ஒரு புது வழியைக் கண்டுபிடித்து உதவியவர் வன்தொண்டர் ஆவார். அதன்படி,

திருவாவடுதுறையில் இருந்து நூல் அரங்கேற்றமாகும் ஊருக்குப் போகுஞ் செலவைத் திருவாவடுதுறை ஆதீனம் ஏற்றுக் கொள்ள வேண்டும். அரங்கேற்றம் நடைபெறுங்காலங்களினும் திரும்பி வரும் பொழுதும் ஏற்படுஞ் செலவை நகரத்தார்கள் ஏற்றுக் கொள்ளுதல் வேண்டும். இதனையல்லாமல் ஒவ்வொரு புராணத்திற்கும் பாட்டு ஒன்றுக்கு ரூபா ஒன்று என்று கணக்குச் செய்து கூடுதலாகுந் தொகைக்கு வேறிடத்தில் தொகை பெற்றுக்கொள்ளும்படி உண்டியல் கொடுத்து விடுவது என்றும் இவர் முடிவு செய்தார். இவ்வாறு ஏற்பாடாகவே போகுஞ்செலவு, வருஞ்செலவு, அரங்கேற்றஞ் செய்யுங்காலச் செலவு முதலியன பிள்ளையவர்களுக்குக் குறைந்தன. பெருந்தொகையைப் பிள்ளையவர்கள் பெற்றதுடன் பல இன்றியமையாத செலவுக்கும் அவர் பயன்படுத்த முடிந்தது. இவ்வாறு தலபுராணங்கள் தோன்றவும் அவை வெளிவரவும் துணைசெய்தவர் வன்தொண்டர். இதனால் நாராயணச் செட்டியார் மீது நன்றியும் அன்பும் கொண்ட பிள்ளையவர்கள்,

> "பாடுவதெங் கேஇந்தப் பாண்டிநாட் டெல்லைவந்து
> கூடுவதெங் கேயொருபாற் கோதையான் - நீடுபுகழ்ப்
> பாரா யணனென்றிப் பார்முழுதுங் கொண்டாடும்
> நாரா யணனிலையேல் நாம்".

என்று பாடிப் போற்றியுள்ளார்கள்.

## சிறந்த திருத்தமான தலபுராணப் பதிப்புகளை வெளிக்கொணர ஆர்வம்

திருத்தமற்ற நூல்களைச் செவ்வையாக ஆராய்ச்சி செய்து திருத்தமான பதிப்பக்களாக வெளியிட வேண்டுமென ஆர்வங் கொண்டு உழைத்தவர் வன்தொண்டர். இவ்வகையில் இவர் திருவாப்பனூர்ப் புராணத்தை ஆராய்ந்து பதிப்பித்து வெளியிட்டார். பின்னர், தேவாரம் பெற்ற பாண்டிநாட்டுச் சிவப்பதிகள் பதினான்கின் புராணங்களையும் பதிப்பித்து வெளியிட எண்ணி, அவற்றைப் பன்முறை படிப்பித்து ஆராய்ந்து வந்தார் என்பர். மதுரை இராமசாமிப்பிள்ளை என்பவர் திருத்தணிகைப் புராணத்தை ஆராய்ந்து, குறிப்புரையுடன் பதிப்பித்து வெளியிட விரும்பி ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தபொழுது அவருடன் இருந்து கடினமான பகுதிகளையெல்லாம் நன்கு விளக்கியவர் வன்தொண்டர். ஆயினும், அக்குறிப்புரை வேறு கைமாறி வெளிவராமலே போய்விட்டது வேதனைக்குரிய செய்தியாகும்.

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களே தாம் மறந்துபோகும் பாடல்களையெல்லாம் திரும்ப நினைவு கொள்ள வன்தொண்டராகிய நாராயண செட்டியாரையே நம்பியிருப்பர் என்பர். அத்தகைய நினைவாற்றலுடன் விளங்கி, தலபுராண ஆய்விலும், சொற்பொழிவிலும், பதிப்பிலும் ஆர்வங் கொண்ட வன்தொண்டர் போன்றோரின் ஆதரவினாலேயே இன்று சில தலபுராணங்களாயினும் நிலைபெற்றுள்ளன எனக் கூறலாம்.

இவ்வாறு தமிழில் மிகுபுலமையும் ஆர்வமும் கொண்டவர்கள் பலர் அக்காலத்தில் தலபுராணங்களைப் பதிப்பித்து அளித்துள்ளனர். இவ்வாறு பல சிவத்தலபுராணங்கள் வெளிவந்துள்ளன. கோவை பீளைமேடு வேணுகோபாலசாமி நாயுடு என்பவர் இவ்வாறே வைணவ நூல்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டு பதிப்பித்தவர். கூடலழகர் புராணம், சீரங்கத் தலபுராணம் முதலிய நூல்களையெல்லாம் இவர் ஆராய்ந்து அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

## பதிப்பு வேண்டிப் பாடல் எழுதி அனுப்புதல்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் (1860) இராமநாதபுரத்தில் இருந்த பொன்னுச்சாமித் தேவர் என்பவர் சேதுபுராண நூலை அச்சிட்டுப் பலருக்கும் நன்கொடையாக வழங்கினார். அப்பொழுது பலரும் அவரிடம் அப்பதிப்பின் சிறப்பைக் கூறிப் பாடல் எழுதி அனுப்பி நூலைப் பெற்றுள்ளனர்.

அட்டாவதானம் வீராச்சாமிச் செட்டியாருடைய மருகராகிய அப்பன் செட்டியார், தலைமையாசிரியர் அருணாசலம் பிள்ளை, பெங்களூர் இராமசாமி உபாத்தியாயர், புதுச்சேரி குமாரவேலு முதலியார், சென்னை வே. இராமாநுச ஐயர், திருநெல்வேலி சி. பெத்தநாயகம் பிள்ளை, சத்தியஞான சுப்பிரமணிய தேசிகர் போன்ற பலர் இவ்வாறு தலபுராணப் பதிப்பு வேண்டிப் பாடல் எழுதி அனுப்பிப் பெற்றுள்ளனர். ஆசிரியப்பா, ஆசிரிய விருத்தம், கட்டளைக்

கலிப்பா, வெண்பா எனப் பல பாக்களால் இவர்கள் கடிதம் அனுப்பி நூலினைப் பெற்ற செய்திகள் பலவும் தமிழ்ப் புலவர் வரலாற்றிலும், பலர்செய்கவிகள் போன்ற தனிப்பாடல் திரட்டு நூல்களிலும் காணலாம்.

"சீர்பூத்த புதுவைநக ராதிபதி பூலோக சிங்காச நாதி பதியாம்
சிவஞான மன்னனருள் பொன்னுச்சா மிக்குரிசில் செகதலத் தோர்கள் மெச்ச
ஏர்பூத்த சேதுவின் தலமகிமை தன்னையே எக்காலும் வாழ்த்தி யன்பர்
இகலோக பரலோக வாழ்வுபெற வச்சிட் டியற்றினான் இசைபெ ருகவே"

என்பது, திருநெல்வேலி புதுத்தெருவில் கூபத்து மடாதிபதியாக விளங்கிய சத்தியஞான சுப்பிரமணிய தேசிகர் அவர்கள் பாடலின் ஒரு பகுதியாகும்.

"மங்குல்தவழ் புதுவையின்வாழ் சிவஞான மாறன்
மகிழ்ந்தீன்ற மணமுல்லை மலர்மாலை மார்பன்
சங்கமுறும் பாவலர்க்குப் பொருளுதவுந் தகையன்
சங்கநிதிக் கரகமல முடைய பொன்னுச் சாமி
கங்கையணி பகவரண்ட ருய்யவன்று வந்த
காரிதனை யுண்டமுத மவர்க்கருள்கை போலப்
பங்கமுறா வகைசேதுப் புராணமதை அச்சிற்
பதித்துதவிப் புகழ்படைத்துப் பாருலகாண் டனனே".

என்பது, திருநெல்வேலி ஆசிரியர் சி. பெத்தநாயகம் பிள்ளை அவர்கள் பொன்னுச்சாமித் தேவருக்கு எழுதி அனுப்பிய பாடல்களுள் ஒன்றாகும்.

சென்ற நூற்றாண்டில் தலபுராணப் பதிப்புகளைப் பல பெரியோர்கள் அச்சிட மேற்கொண்ட சிறப்பும் அதற்குத் தமிழ்ப் பெரியோரிடையே இருந்த பெருமதிப்பும் வரவேற்பும் இவற்றால் நன்கு புலனாகும்.

தனியார் பலர் இப்பதிப்புகளுக்குப் பொருளுதவி தந்து உதவியதைப் பழைய பதிப்புகளில் காணும் அவர்தம் பெயர்களைக் கொண்டு அறிகிறோம். சிலர் தம் சொந்த செலவில் மிகுந்த இடர்ப்பாடுகளுடன் இந்நூல்களை அச்சிற் பதிப்பித்துள்ளனர். பிற்காலத்தில் இவ்வாறு பொருளுதவி செய்வோர் இன்மையால் பல நூல்கள் பதிப்பிக்கப் பெறவில்லை.

## பதிப்புரிமை

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தலபுராணப் பதிப்புகள் மிகக் குறைந்த அளவிலேயே வெளிவந்துள்ளன. குறிப்பிட்ட சில இடங்களிலேயே இவை விற்பனைக்குக் கிடைத்து வந்தன. மேலும், பதிப்பித்தோர் மற்றும் அச்சகத்தார் இவ்வச்சு நூல்களில் பதிப்புரிமைச் சட்ட விதிகளைச் சுட்டியிருப்பதும் இவண் குறிக்கத்தக்கது.

புதுவையில் பிரெஞ்சு ஆட்சியில் (12 - 8 - 1861) சீகாளத்திப் புராணம் அச்சிடப்பட்டுள்ளது. அதில், 'தெரிவித்தல்' என்ற தலைப்பில் பின்வரும் செய்தி அச்சிடப்பட்டுள்ளது.

> "இக்காளத்தி புராணத்தைத் தாங்களே பிரயாசைப்பட்டு திருத்தினதாய் மாறுபாடாக வேறே அச்சிடுபவர்கள் எந்த தேசஸ்தராயிருந்தாலும் எந்த அரசாட்சிக்கு உட்பட்டவரா யிருந்தாலும் அப்படிக் கொத்த மாறுபாடான செய்கையால் நேரிடுஞ் தண்டனைக்கும் புஸ்தக நஷ்டத்துக்கும் உத்தரவாதம் செய்யவேண்டியவர்களாவார்கள்'.

இந்நூலை அச்சிட்ட குமரகுரு, அரங்கநாதன் ஆகியோரும், பதிப்பாசிரியர்களாகிய சுப்பு, அருணாசல குருக்கள் ஆகியோரும இச்செய்தியை அறிவித்து அச்சிட்டுள்ளனர்.

இதே போன்று, 6 - 2 - 1870 அன்று முதன் முதலில் தீர்த்தகிரி புராணத்தை அச்சிட்ட தஞ்சை அ. கன்னைய செட்டியாரும் 'அறிவிப்பு' என்ற தலைப்புடன் பின்வரும் செய்தியை இம்முதற் பதிப்பில் அச்சிட்டிருக்கக் காணலாம்.

"இதனால் சகலருக்குந் தெரிவிப்பதியாதெனில், 1869ம் வருடம் 25 வது ஆக்டின்-20 வது பிரிவினில்-6வது விதியின் பிரகாரம் காப்பிரைட் பெற்றிருக்கிறபடியால், இதை ஒருவரும் அச்சிடவுங் கூடாது, மற்றொரு பாஷையிலு மொழிபெயர்க்கவுங் கூடாது, அப்படிக்குப் போடுவாராகில் மேற்கண்ட ஆக்டில் செப்பியிருக்கிறபடி கோர்ட்டின் மூலமாய்த் தண்டனை விதிக்கப்படும்".

"சேலத்துக்கடுத்த கொடிமாடச் செங்குன்றூ ரென்னும் திருச்சங்கோட்டுத் தலபுராணம் - அச்சிட எத்தனித்திருக்கிறோம்" என்பன இப்பதிப்பின் முன்னுள்ள செய்திகளாகும்.

அக்காலப் பதிப்பாசிரியர்கள் தாம் அரிதின் முயன்று பதிப்பித்த நூல்கள் பிறரால் தவறுதலாக அச்சிடப்படக் கூடாது என்ற நோக்கில் சட்ட விதிகளைக் காட்டி அச்சுறுத்தினர். ஆயின், இதுவே பின்னால் பல பதிப்புகள் தோன்றாமைக்குரிய காரணங்களில் ஒன்றாக இருக்குமோ என எண்ணவும் இடமேற்படுகிறது.

## அண்மைக் காலத்திய தலபுராணப் பதிப்பாசிரியர்

தஞ்சை மாவட்டம் ஆலங்குடியிலே சைவ வேளாளர் குலத்திலே தோன்றியவர் த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் (1900 - 1972). இவருடைய தந்தையார் சபாபதிப் பிள்ளையவர்கள் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் மாணவர் பெரியண்ண பிள்ளை என்பரிடத்தில் கல்வி கற்றவர். அவரிடமே இவரும் தமிழ் நூல் களைக் கற்றறிந்தார். பல நூல்களையும் இயற்றியுள்ள இவர் சுமார் நூற்றுமுப்பத்தைந்து நூல்களுக்கு மேலாக ஆராய்ச்சி முகவுரையுடன் பதிப்பித்துள்ளார்.

தணிகைப் புராணம் குறிப்புரையுடன், கோயிற் புராணம் பழைய பொழிப்புரை, பேரூர்ப் புராணம் பொழிப்புரையுடன், திருநாகைக்காரோணப் புராணம் குறிப்புரையுடன், மருதவனப்

புராணம் குறிப்புரையுடன் ஆகிய இவருடைய பதிப்புகள் குறிப்பிடத்தக்கன.

இவ்வாறு தலபுராணங்களைப் பதிப்பிக்கும் ஆசிரியர்கள் இன்று மிகமிகக் குறைவு. இப்பதிப்புகளை ஊக்குவிப்போரும் மிகக் குறைவே. தலபுராணங்களைப் பதிப்பிப்பதில் சில சைவ ஆதீனங்களும், தனியாரும், உரையாசிரியரும் தொடர்ந்து ஆர்வங் காட்டி வருகின்றனரே அன்றி, அரசு நிறுவனங்களோ, பல்கலைக்கழகங்களோ இப்பதிப்புகளில் ஆர்வங் காட்டவில்லை என்பதே உண்மையாகும்.

தஞ்சை சரசுவதிமகால் சுவடி நூலகம், சென்னை டாக்டர். உ. வே. சாமிநாதையர் சுவடி நூலகம், கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் போன்ற சுவடியோடு தொடர்புடையவர்கள் மட்டுமே ஒரு சில தலபுராணப் பதிப்புகளைச் செய்து வெளியிட்டுள்ளனர்.

## தவறான பதிப்பு

சுவடிப்பதிப்பிலே தலைப்பிலேயே தவறுகள் நிகழ்வதற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்வது தஞ்சை சரசுவதி மகாலின் 132 ஆம் வெளியீடாகிய 'கும்பகோணப் புராணம்' ஆகும். சொக்கப்பப் புலவர் இயற்றியதாகக் கூறப்பெறும் இந்நூலை வித்துவான் திரு. மு. சடகோபராமானுஜம் பிள்ளை என்னும் பதிப்பாசிரியர் பதிப்பித்து 1971 ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளனர்.

சிவரகசியம் என்னும் நூல் 'கும்பகோணப் புராணம்' எனத் தவறுதலாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. தலபுராணப் பதிப்பில் நிகழும் சிக்கல்களுக்கு இது ஓர் எடுத்துக்காட்டாகும்.

ஓலைச்சுவடியிலே முதலில் இருக்க வேண்டிய ஏடுகள் தவறாகக் கடைசியில் கோக்கப்பட்டுவிட்டன. எனவே சுவடியின் முதலில் பெயர் முதலியன இல்லை. முதலாவது நைமிசாரணியச் சிறப்புரைத்த அத்தியாயம் எனச் சுவடி தொடங்கி இருபத்தேழாவதாகப் பூசைக்கு உபகரணங் கூறிய அத்தியாயம் வரைக் குழப்பமில்லாமல் தொடர்கிறது. இவ்வத்தியாயத்தின் இறுதி ஏடு இல்லாததால் நூல் முடிவைப் பற்றிய குறிப்பு சுவடியில் காணப்பெறவில்லை. முதலில் இருக்கவேண்டிய பாயிரப் பகுதியடங்கிய ஏடுகள் தவறுதலாகப் பின்னால் சேர்க்கப் பட்டுள்ளன. அதிலும் முதல் ஏடு இல்லாததால் ஐந்து பாடல்கள் கிடைக்காமல் ஆறாம் பாட்டிலிருந்து உள்ளன. இச்சுவடியைப் படியெடுத்தவர், அதனைத் திருத்தியவர், பதிப்பாசிரியர், அவருக்கு ஒப்பு நோக்குதல் முதலியவற்றிற்கு உதவியவர் ஆகிய எவரும் அது பாயிரம்தான் எனத் துணிவாக அறியாதது வியப்பாக உள்ளது. மேலும், பதிப்பாசிரியர் தம் முகவுரையில், "எல்லா நூலாசிரியரும் விநாயக வணக்கம், நால்வர் துதி முதலியன நூன்முகத்துரைத்துப் போயினர்; இவர், நூலின் இறுதியிற் கூறுகின்றார். அங்ஙனம் அமைந்தது யாது காரணத்தாலோ தெரியவில்லை" என்று கூறி, இது ஒரு புதுமை என்று குறிப்பிட்டிருப்பதும் வேடிக்கையானது.

"இந்நூலாசிரியர் பாடியது தலபுராணமாக இருந்தாலும் அதன் வாயிலாகச் சித்தாந்தக் கருத்துக்கள் பலவற்றை விரிவாகக் கூறியிருக்கிறார். ஒவ்வோரிடத்தில், நிர்க்குணப் பிரமத்தைப் பற்றியும்

பேசியிருக்கின்றார்" எனப் பதிப்பாசிரியர் தம் முகவுரையில் குறிப்பிடு வதிலிருந்து இது ஒரு தலபுராண நூல் என்பதாக எண்ணத் தோன்று கிறது. ஆயின், இந்நூல் கும்பகோணப் புராணமே அல்ல என்பது குறிப்பிடத்தக்க உண்மையாகும்.

"இழைமங்கை பாக ரிருந்தவ ளருளாற் பச்சைக்
கழைவளர் பொதியில் வைகுங் குடமுனி வேத சாரம்
மொழிசிவ ரகசியத்தை மொழிபெ யர்த்து வளர்ந்தயன் றவறு
கொழிதமிழ்ச் செய்யுளாலே காதலாற் கூறி னானே".

(15)

என்னும் பாடற் பகுதிகளால் இந்நூல் சிவரகசியமாகும் என்பது தெளிவாகத் தெரிகின்றது. (நூலின் பாயிரப்பகுதியான இப் பதினைந்தாவது செய்யுள். இப்பதிப்பில், நூலின் இறுதியில் 1069 ஆம் பாடலாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.) மேலும், "சிவன் இராசியம் தறுகணர்க்கு இயப்பொணாதரோ," என்றும் "அகத்திய சிவரகசிய மென்று அன்பொடும் சகத்தினில் யோகிக்குச் சாற்றினான்" என்றும் இந்நூலின் முதற் சருக்கத்தில் வரும் 27, 30 ஆவது பாடற்பகுதிகளும் இந்நூல் சிவரகசியமே என்பதை உறுதி செய்யும்.

இந்நூலில் கும்பகோணச் சிறப்புரைத்த அத்தியாயம் என்னும் பெயரில் (3, 30) இரண்டு அத்தியாயங்கள் உள்ளன. இதைக் கண்ணுற்றே இப்பதிப்பாசிரியர் இந்நூலைக் 'கும்பகோணப் புராணம்' என எண்ணினாரோ என ஐயுறவேண்டியுள்ளது. ஏனெனில், இவ்வாறு ஒரே நூலில் ஒரே பெயரில் இரண்டு வெவ்வேறு அத்தியாயங்கள் அமைக்கும் மரபு இல்லை. (இது, வேறு சுவடிகள் கலப்பினாலும் நிகழ்ந்திருக்கலாம்.)

மேலும், இதே நூலில் திருக்கயிலாசச் சிறப்புரைத்த அத்தியாயம், காசியின் சிறப்புரைத்த அத்தியாயம் எனவும் சில உள்ளன. இவற்றைக் கொண்டு இந்நூலைக் கயிலாசப் புராணம் என்றோ காசிப்புராணம் என்றோ கூற இயலாதது போலவே கும்பகோணப் புராணம் எனக் கூறுவதும் பொருந்த மற்றதே என்பது நுணுகி ஆராயுமிடத்து விளங்கும்.

தமிழில் தலபுராண அமைப்பை நன்கு உணராததாலேயே இப்பிழை நேரிட்டது என்பது ஆய்வாளர் கருத்து.[1] சுவடி அட்டவணை களிலுள்ள செய்திகளை மட்டும் அடிப்படையாகக் கொண்டு பதிப் பிக்கத் தொடங்குவதும், சுவடிகளை நேரடியாகப் பார்வையிடாததுமே இத்தவறுகளுக்குப் பெருங்காரணங்களாகும். இத்தகைய தவறான பதிப்புகளால் தலபுராணம் பற்றிய உயர்வான எண்ணங்கள் தாழ்ந்து போவதற்கும் இடமேற்படலாம் என்பதைச் சுட்டுவதற்காகவே இப்பதிப்பைப் பற்றி இங்கு எடுத்துக்காட்டப் பெற்றது.

1. புலவர் ப. வெ. நாகராசன், டாக்டர் ஐயரவர்களுக்குப் பிந்தைய தலபுராணப் பதிப்புகள் - சுவடிப்பதிப்பு வரலாறு - கருத்தரங்கக் கட்டுரை, ஓலைச்சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், 1990.

## தலபுராணப் பதிப்புகளின் தேவை

பொது நிலையில், தலபுராணங்கள் பல, முதல் பதிப்பைத் தவிர மறுபதிப்பாகவில்லை. மிகக் குறைவான எண்ணிக்கையிலேயே பதிப்பிக்கப்பெற்றதால் பல நூல்கள் இன்று கிடைக்கவில்லை. தமிழாய்வுக்கு இவை இதுவரை எவ்வகையில் துணையாகக் கொள்ளப்பெற்றன என்பதும் தெரியவில்லை, குறிப்பிட்ட சில தலபுராணங்கள் தவிர மற்றவை அகராதிகளில் கூட இடம்பெறவில்லை என்பது கருதத்தக்கது.

## தமிழ் அகராதியில் தலபுராணங்கள்

சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட தமிழ் லெக்சிகன் முதல் தொகுதி 8-10-1924 இல் வெளியிடப் பெற்றது. பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளையவர்கள் 25.11.1926 முதல் தமிழ் லெக்சிகன் பதிப்பாசிரியராகப் பொறுப்பேற்று மிகச் சிறந்த பணிகளைப் புரிந் துள்ளார். 20.3.1936 முடிய ஆறு தொகுதிகளும் வெளியிடப் பெற்றன. இவற்றிலுள்ள சொற்களின் மொத்த எண்ணிக்கை 1,04,405 ஆகும். பிறகு விடுபட்ட சொற்கள் தொகுக்கப் பெற்று இணைப்புத் தொகுதியாக 1938-1939 இல் வெளியிடப் பெற்றன. இவ்விணைப்புத் தொகுதியில் உள்ள சொற்களின் எண்ணிக்கை 13,357 ஆகும். ஆக மொத்தம் தமிழ் லெக்சிகனில் உள்ள சொற்களின் எண்ணிக்கை 1,17,762 ஆகும். இதுவே தமிழில் தொகுக்கப்பெற்ற மிகப் பெரிய அகராதி ஆகும். இத்தொகுப்பிற்காகச் சுமார் முந்நூற்றுக்கும் மேற்பட்ட தமிழ் நூல்கள் எடுத்தாளப்பெற்றுள்ளன. அவற்றுள், தலபுராணங்கள் என்ற வகையில் 31 நூல்கள் மட்டுமே எடுத்தாளப் பெற்றுள்ளன.

அருணகிரிபுராணம் முதலாக வேதாரணிய புராணம் ஈறாகப் பலராலும் பரவலாக அறியப்பெற்ற தமிழ்த் தலபுராண நூல்களே அகராதிப்பணிக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளமை இவண் குறிப்பிடத்தக்கதாகும். இன்றைய நிலையில் சுமார் 400 தலபுராணங் களை அறிகிறோம். இதுவே சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் இதனினும் மிகுந்த எண்ணிக்கையில் கிடைத்திருக்கலாம். இருப்பினும், தமிழ் அகராதிப்பணியில் இவற்றை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளாததன் காரணம் தெளிவாக விளங்கவில்லை. சிறப்புடைய பதிப்புகள் பல கிடைக்காமை ஒரு காரணமாகலாம். இன்றும் இந்நிலை மாறவில்லை. அப்படியே தொடர்கிறது.

பழைய தலபுராணங்களைத் தொகுத்துப் பார்க்கும் அளவில் சுமார் முந்நூறு நூல்களில் 3,00,000க்கு மேற்பட்ட பாடல்கள் இருப்பதாக அறிகிறோம். இவற்றுள், தமிழ் அகராதியில் இல்லாத சொற்கள் எவ்வளவு என்பதும், அவற்றின் பயன்பாடு எத்தகையது என்பதும் இன்னும் ஆராயப் பெறவில்லை.

ஒரு மொழியிலுள்ள இத்துணைப் பாடல்களையும் கவனிப்பாரின்றி ஒதுக்கி வைத்திருப்பது அம்மொழி வளர்ச்சிக்குத் தடையேயன்றி வேறில்லை. அதிலும் பல நூல்கள் அச்சில் வெளிவந்தும் அவற்றைப் பார்வையிடுவாரில்லை என்பது வேதனைக்குரியது. இந்நிலை இனியாவது மாறுமென நம்புவோம்.

## நல்ல பதிப்புகளின் தேவை

தமிழில் அகராதிப் பணிக்கும் ஆராய்ச்சிப் பணிக்கும் பல நல்ல பதிப்புகள் தேவைப்படுகின்றன. மொழியில் அகராதிப்பணி என்பது ஒரு முடிவில்லாப்பணி, தொடர் பணி. எனவே, தமிழிலுள்ள தலபுராணங்களைச் செம்மையாகப் பதிப்பிப்பதன் வழி இதுபோன்ற பணிகள் மேலும் சிறப்புறும். மொழி வளர்ச்சிக்கும் பெரும் பயனுடையதாகும்.

கோயில்களின் குடமுழுக்கு விழாக்களில் சில புராணங்களும், தனியார் முயற்சியால் சில புராணங்களும் பதிப்பிக்கப் பெறுகின்றன. அதிலும், உரை நடையிலான புராண நூல்களே மிகுதியாக உள்ளன. மூல நூல்கள், செய்யுள் வடிவிலான நூல்களைப் பதிப்பிப்பார் மிகுதியு மில்லை. எனவே, இவை பெரும்பாலும் அழியும் நிலையிலுள்ளன. இவற்றைக் கருத்தில் கொண்டு பெரிய நிறுவனங்களும் பல்கலைக் கழகங்களும் இத்தலபுராணப் பதிப்பில் சற்று கவனம் செலுத்தினால் அது மொழிக்கும் சமுதாயத்திற்கும் செய்த பெருந் தொண்டாக அமையும்.



# தமிழில் தலபுராண ஆய்வுகளும் நூல்களும்

தமிழில் சங்க இலக்கியம், மொழியியல், நாட்டுப் புறவியல், சிற்றிலக்கியம், காப்பியம், வரலாறு போன்ற துறைகளில் மிகுதியான ஆய்வுகள் மேற்கொண்டிருப்பது போன்று புராணங்கள், தலபுராணங்கள் பற்றிய ஆய்வுகள் மிகுதியாக மேற்கொள்ளப் பெறவில்லை.

பெரியபுராணம், கந்தபுராணம் போன்ற ஒருசில புராண நூல்கள் தொடர்பாகவே ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. தலபுராணங்கள் பற்றியும் இவ்வாறு ஒருசிலவே ஆராயப்பெற்றுள்ளன.

## முனைவர் பட்ட ஆய்வுகள்

'திருவிளையாடற் புராணம்-ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் திரு செ. சந்திரசேகரன் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அளித்துள்ளார்.

'பரஞ்சோதி திருவிளையாடற் புராணம் - இலக்கிய மதிப்பீடு' என்ற தலைப்பில் திரு ப. கோபாலன் அவர்கள் செய்துள்ள ஆய்வு அச்சில் வெளிவந்துள்ளது. (1988)

'கச்சியப்ப முனிவரின் தணிகைப்புராணம்-ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் திரு சுப. கோவிந்தராசன் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அளித்துள்ளார்.

'தணிகைப் புராணம் - ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் திரு. அரு. மருததுரை அவர்கள் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் அளித்துள்ளார்.

'மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் படைப்புகள் சிறப்பாகப் புராணங்கள்-ஒரு மதிப்பீடு' என்னும் தலைப்பில் திரு ப. ஆறுமுகம் அவர்கள் திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் அளித்துள்ளார். (1984)

'திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாறு' என்ற தலைப்பில் திரு. ஏ. கல்யாணசுந்தரம் அவர்கள் மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தில் ஆய்வேடும், 'திருமயிலைத் திருத்தலம்-இலக்கிய வரலாற்றுப் பார்வை' என்னும் தலைப்பில் திரு. க. ராஜசேகரன் அவர்கள் சென்னைப் பல்கலைக்கழகத்தில் அளித்த ஆய்வேடும் முறையே 1980, 1989 ஆம் ஆண்டுகளில் அச்சிடப்பட்டுள்ளன.

## எம். பில். பட்ட ஆய்வுகள்

'மயூராச்சல புராணம்-ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் திரு. ஆர். இலட்சாராமன் (திருவேங்கடவன் பல்கலைக்கழகம்) அவர்களும்.

'திருவிளையாடற் புராணம்-மதுரைக்காண்டம் ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் ந. பிருந்தாபாய் (அண்ணாமலைப் பல்கலைக்கழகம்) அவர்களும்,

'திருவிளையாடற் புராணக் கதைப் பகுப்பாய்வு' என்ற தலைப்பில் ஏ. லலிதா (கேரளப் பல்கலைக்கழகம்) அவர்களும்.

'தணிகைப் புராணத்தில் அகப்பொருள் மரபுகள்' என்ற தலைப்பில் திரு. எஸ். மாரியப்பன் (மதுரை காமராசர் பல்கலைக்கழகம்) அவர்களும்,

'தணிகைப் புராணம் பற்றி ச. தேவபா (சென்னைப் பல்கலைக்கழகம்) அவர்களும் ஆராய்ந்துள்ளனர் எனத் தெரிகிறது.

முதுகலை (எம். ஏ) தேர்விற்காக வே. கிருஷ்ணசாமி என்பவர் செய்த 'தமிழில் தலபுராண இலக்கியம்' என்னும் ஆய்வு நூல் 1974 ஆம் ஆண்டில் அச்சில் வெளிவந்துள்ளது.

இத்தகைய முயற்சிகள் மேலும் தொடரும் என நம்புவோமாக.



# தலபுராணங்களின் புறத்துப் பிறந்த நூல்கள்

காலத்துக்கும் இடத்துக்கும் ஏற்றவாறு தலபுராணங்களின் அமைப்பும் வேறுபட்டு வந்துள்ளது. அவ்வகையில், விரதங்களின் மகிமை கூறும் நூல்களும் புராணம் என்ற பெயரிலும் கதை என்ற பெயரிலும் எழலாயின. அவை காவியப் பண்பு குன்றிப் புராணப் பண்புகளுமின்றித் தலபுராணங்களின் புறத்துப் பிறந்த நூல்களாக விளங்கின.

## விரத புராணங்கள்

கொடியவர்களும் அதிகாரச் செருக்கு மிகுந்தவர்களும், துன்பமுற்று மனம் திருந்திக் கோயில்களுக்கு வந்து வழிபட்டு நல்லவர்களாக மாறியதாகத் தலபுராணக் கதைகள் அமைவதைச் சுட்டுவர் அறிஞர்.[1] இக்கருத்தினை ஆதாரமாகக் கொண்டு சமய விரத முறைகளை மட்டும் கூறும் புராண நூல்களாகச் சிவராத்திரிப் புராணம், ஏகாதசிப் புராணம் போன்றன தோன்றின.

ஈழ நாட்டில் போர்த்துகேயர் ஆட்சியில் சைவக் கோயில் களையும் சமயாசாரங்களையும் தகர்த்தெறிவதில் பெருமுயற்சி மேற் கொள்ளப்பட்டதன் விளைவாகவே இத்தகைய புராணங்கள் ஈழத்தில் முதலாவதாகத் தோன்றியதாகக் குறிப்பிடுவர்.[2] இதன் பின்பே நெல்லை நாதர் இயற்றிய சிவராத்திரிப் புராணம் தமிழகத்தே உருவாயிற்று என்றும் கூறுவர். பிள்ளையார் கதை, கேதாரீஸ்வர புராணம் போன்ற நூல்களையும் விரத மகிமை கூறும் புராண நூல்கள் வரிசையில் வைத்து நோக்கலாம்.

விநாயக விரதம், நவராத்திரி விரதம், கிருத்திகை விரதம் முதலான இருநூற்றுக்கும் மேற்பட்ட விரதங்களை மச்ச புராணத்தில் விளக்கக் காணலாம்.

## தீர்த்த புராணங்கள்

நம் நாட்டில் கங்கை, கோதாவரி, நருமதை, சிந்து, சரஸ்வதி முதலாக, கும்பகோணம், பாபநாசம், சேது, தாம்ரபர்ணி, வைகை வரையிலான பல நதிகள் புண்ணிய தீர்த்தங்களாகவும், இத்தீர்த்தங் களை நாள்தோறும் சென்று ஆடி வழிபடுபவர் எல்லாப் பயன்களையும் பெறுவார்கள் என்றும் கூறுவர். இன்ன இன்ன தீர்த்தங்களில் குறிப்பிட்ட நாள்களில் இருந்து பூசித்தால் இன்ன இன்ன நன்மைகளை

---

1. மு. வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 188
2. பேராசிரியர் க. செ. நடராசா, ஈழத்துத் தமிழ் இலக்கிய வளர்ச்சி, ப. 128

அடையலாம் என்பதை ஆக்னேய புராணம் போன்றவற்றில் விளக்கக் காணலாம். இவை வட இந்திய மக்களால் பெரிதும் போற்றப்படுவதை இன்றும் காணலாம். தீர்த்த யாத்திரையே அங்கு மிகவும் முக்கியமானதாகக் கருதப்படுகிறது.

தமிழில், 'நீரின்றமையாது உலகு' என்பது வள்ளுவர் வாக்கு. மழையை இறைவனுடைய திருவருள் வடிவமாகக் கண்ட நம் முன்னோர்கள், நீரையும் அங்ஙனமே கண்டனர். அக்காட்சியைச் சிறப்பாகச் சில உயர்ந்த நதிகளிலும் திருக்குளங்களிலும் கண்டனர். அவற்றைப் புனித நீர் என்றும் அழைத்தனர்.

"புறத்தூய்மை நீரான் அமையும்" என்றபடி நீர் அழுக்கைக் கழுவி உடலைத் தூய்மை செய்வதாயினும், புனித நீராகிய தீர்த்தங்கள் பாவத்தைக் கழுவி உயிரைத் தூய்மை செய்கின்றன எனப் புராணங்கள் கூறுகின்றன. மூர்த்தியையும் தலத்தையும் அவரவர் இருந்த இடத்திலிருந்தே மனத்தால் நினைத்துப் பயன்பெறலாம். ஆயின், தீர்த்தங்கள் அவ்வாறின்றி அவை இருக்குமிடத்தில் சென்று முழுகித்தான் பயன் பெறவேண்டும் என்பர். இறைவன் தீர்த்தங்களின் வடிவாய் இருந்து உயிர்களது வினையைப் போக்கி அவைகட்கு நலம் செய்கின்றான் என்று கூறவந்த திருநாவுக்கரசர், "சென்றாடு தீர்த்தங்கள் ஆனார் தாமே" என்றே அருளிச் செய்கின்றார். இதனால் தீர்த்தங்கள், சென்று முழுகிப் பயன்பெறுவதற்கு உரியன என்பது தெளிவாகின்றது.

இவ்வகையில் தமிழ்த் தலபுராணங்களில் தீர்த்தச் சிறப்பு தனித்தனியே சிறப்பாகக் கூறக் காணலாம். சைவ எல்லப்ப நாவலர் இயற்றிய தீர்த்தகிரிபுராணத்தில், ஒரே தலத்தில் உள்ள பதினான்கிற்கும் மேற்பட்ட தீர்த்தங்களின் மகிமைகள் தனித்தனி சருக்கங்களில் விளக்கப்படுகின்றன. இவ்வாறே பிற புராணங்களிலும் காணலாம்.

திருச்சிற்றம்பல முனிவர் இயற்றிய காவேரி புராணமும், பொன்னிச் சிந்து மான்மிய புராணமும் பிற நதிப்புராணங்களும் தீர்த்தச் சிறப்பையே பெரிதும் போற்றி யுரைக்கின்றன.

மகாமகக் குளம்

பொதுநிலையில், தீர்த்தங்கள் சென்று ஆடிப் பயன்பெற வேண்டுவனவாய் இருத்தலின், அப்பயன் எல்லார்க்கும் கிடைத்தல் அரிது. எனவே, அப்பயனை அனைவரும் பெறும் பொருட்டு இறைவன் தமிழகத்தில், சோழ நாட்டில், கும்பகோணம் எனப்படுகின்ற திருக்குடந்தையில் குடமூக்கில் 'மகாமகக்குளம்' என்னும் ஒரு திருக்குளத்தில் எல்லாத் தீர்த்தங்களும் சேர்ந்திருக்கத் திருவருள் புரிந்துள்ளான் என்பர். அவற்றுள் கங்கை, யமுனை, கோதாவரி, நருமதை, சரசுவதி, காவிரி, குமரி, வையை, சரயு என்னும் தீர்த்தங்கள் குறிப்பிடத்தக்கவை. இத்தீர்த்தங்களில் சென்றாடிப் பயன்பெற இயலாதவர்கள், மாசி மாதத்தில் மக நட்சத்திரத்தில் சென்று முழுகினால், எல்லாப் பாவங்களும் நீங்கப் பெற்று மேன்மையடைவார்கள் என்று கூறுவர்.

"தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை
சரசுவதிபொற் றாமரைபுட் கரணி தேண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெம் கூத்த னாரே"

என்னும் பாடலில், குடந்தை மகாமகக் குளத்தில் தீர்த்தங்கள் பலவும் சேர்ந்திருப்பதைத் திருநாவுக்கரசரும் குறிப்பர்.

குரு, சிங்கராசியில் இருக்கும்பொழுது வருகின்ற மாசிமகம், 'மகாமகம்' என்னும் சிறப்புடையது. குரு ஒர் இராசியில் ஒர் ஆண்டு வசிப்பவர் ஆகையால், இந்த மகாமகம் பன்னிரண்டாண்டிற்கு ஒருமுறை வருவதாகும். இம்மகாமகக் குளத்தில் எப்பொழுதும் முழுகி இறைவனை தரிசித்தாலும் மேன்மையான பயனுண்டு. ஆயினும் பன்னிரண்டு ஆண்டிற்கு ஒருமுறை வருகின்ற மகாமகத்தில் இத்திருக்குளத்தில் மூழ்கி இறைவனை தரிசித்தல் மிகப்பெரும் பயனை விளைவிக்கும் என்னும் நம்பிக்கையுடன் நாட்டின் பல பகுதி களிலிருந்தும் பெருவாரியான மக்கள் திரளாக வந்து நீராடிப் பயன் பெறுகின்றனர்.

## மாக புராணம்

மாக மாதத்தில் (மாசி) தீர்த்தமாடுவதன் சிறப்பைக் கூறுவது இம் மாக புராணம். மாகஸ்நானம் என்பது, மாசி மாதத்தில் புனித நீராடல். ஆற்றிலும் கடலிலும் இவ்வாறு ஆங்காங்குள்ள சிவாலயம், திருமாலாலயங்களில் மூர்த்திகள் தீர்த்தங் கொடுப்பது இன்றும் வழக்கத்திலுள்ளது. அதிவீரராம பாண்டியர் செய்ததாகக் கூறப்பெறும் இந்நூலில், நாள்தோறும் வைகறையில் மாக மாதம் முழுவதும் சென்று காவிரி நதிபோன்ற புதுப்புனலில் நீராடுவதால் பெறும் புண்ணியத்தை விளக்கும் பல கதைகளைக் காணலாம். தீர்த்தச்சிறப்பு, ஏகாதசி விரதம், சிவராத்திரி மகிமை, தருமம் செய்வதால் வரும் புண்ணியப்பலன், தீமை செய்வதால் வரும் நரக நிலைகள், இல்லற ஆசாரங்கள், கற்பொழுக்கம் ஆகியவை இந்நூலில் விரித்துரைக்கக் காணலாம். இது, வடமொழி பாத்ம புராணத்திலிருந்து மொழிபெயர்க்கப் பெற்றதாகும். 24 சருக்கங்களும் 1414 பாடல்களும் கொண்டது.

"கரத்தினில் மலர்பெய் தேத்தல், காலினிற் கோயிற் சூழ்தல்
சிரத்தினில் வணங்கல் வாயிற் சிவன்திருப் புகழைப் பாடல்
பெருத்திடு மனத்தில் நம்பன் பெருவடி வினைப்பா வித்தல்
உரைத்திடு புனித தீர்த்தம் என்னுமில் வுலக மம்மா"

"வஞ்சக மில்லா நெஞ்சே நெஞ்சாம்; மறுமனை செல்லாத் தாளே தாளாம்;
செஞ்சொ லுரைக்கும் நாவே நாவாம்; செழுநிதி யீயுங் கையே கையாம்;
அஞ்சி நடுங்கும் ஏதிலர் தாரத்து அவயவம் நோக்காக் கண்ணே கண்ணாம்;
எஞ்ச லிலாதே யிப்பரி சுடையோர் எய்திய இடமே புனிதம தாமால்."
(18: 16, 17)

எனவரும் பாடல்கள் தீர்த்தமாடற சிறப்புக்களைக் கூறும்.

இம்மாக புராணம் மிகவும் புகழ் பெற்று விளங்கியதால் அதைத் தழுவிய விரிவான அம்மானைப் பாடலொன்றும் புராணம் எழுந்த நூறு ஆண்டுக்குள் எழுந்துள்ளது. 'மாகஸ்நான புராண அம்மானை' என்னும் இந்நூலை மணவை வீரபத்திரன் என்பவர் இயற்றியுள்ளார். 30 அத்தியாயங்களும் 6954 அடிகளும் கொண்ட இந்நூலில் மாக புராணத்திலிருந்து 145 பாடல்கள் சேர்க்கப்பட்டுள்ளன. தமிழ்ப் புராணக் கதையையே அம்மானைப் பாடலாகப் பாடப் பெற்றுள்ளது. இந்நூல் 1956 இல் அச்சிடப் பெற்றது.

## பிற இலக்கியங்கள்

தமிழில் தோன்றியுள்ள தலபுராணங்கள் கூறும் செய்திகளைப் பல இலக்கிய வடிவமாகப் பாடும் வழக்கம் சென்ற நூற்றாண்டில் மிகுதியாகக் காணப்படுகிறது. எடுத்துக்காட்டாகச் சிலவற்றைக் காணலாம்.

## அம்மானை

திருவிளையாடற் புராணச் செய்திகளை உள்ளடக்கி 64 பாடல்கள் கொண்ட 'திருவிளையாடலம்மானை' என்னும் நூலைத் திருநெல்வேலி நாகலிங்கம் பிள்ளையவர்கள் இயற்றியுள்ளார். இந்நூல் 1838 இல் அச்சாகியுள்ளது. இப்பொழுது கிடைப்பதில்லை.

## சதகம்

இளங்காடு வீரசைவப் புராண வசவதேசிகர் வழிவந்த கு. சுப்பிரமணிய ஐயர் (1911) அவர்கள் திருவிளையாடற் புராணப் படலச் செய்திகளை ஒவ்வொரு பாடலிலும் அமைத்துத் திருவிளை யாடற் சதகம் என்னும் சதகநூலைப் பாடியுள்ளார்.

## கும்மி

கோவளம் திரு. ம. இராசகோபால முதலியார் என்பவர் 'மாமல்லபுரத் தலமகாத்மியச் சுருக்கக் கொம்மிப் பாடல் 'என்னும் நூலை இயற்றியுள்ளார்.

திரு. தீனதயாளன் என்பவர் 'விருத்தாசல சேத்திரக் கும்மி' நூலை இயற்றியுள்ளார். இவை இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் வெளிவந்தவை.

## மும்மணிக் கோவை

திருவொற்றியூரில் வாழ்ந்திருந்த திரு. கனகசபாபதி வள்ளலார் என்பவர் திருவொற்றியூர்த் தலபுராண சாரம் முழுவதையும் அடக்கித் 'திருவொற்றியூர் மும்மணிக் கோவை' என்னும் நூலைப் பாடியுள்ளார்.

## இசைப்பாடல்கள் - கீர்த்தனைகள்

மழவராயனேந்தல் சுப்பிரமணிய ஐயர் என்பவர் திருவிளையாடற் புராணச் செய்திகளை இசைப்பாடலாகப் பாடியுள்ளார்.

இவரே 'திருமெய்யம் ஈசுவரன் பேரில் தலபுராணக் கீர்த்தனைகள்' என்ற நூலையும் இயற்றியுள்ளார்.

வியாசர்பாடி சுந்தரமுதலியார் என்பவர் 'திருமயிலாப்பூர் தலமகிமைக் கீர்த்தனம்' என்னும் நூலைப் பாடி வெளியிட்டுள்ளார்.

## கவிதை நாடகம்

திரு. மு. உத்திரவேல் என்பவர் 'மயிலம் சேத்திர மகத்துவம் என்னும் ஸ்ரீசுப்பிரமணியர் ஸ்ரீபாலசித்தர் யுத்த நாடகம்' என்ற நாடக நூலை இயற்றி அண்மையில் வெளியிட்டுள்ளார். சிவப்பிரகாச சுவாமிகள் செந்தமிழ் நூல்களை ஆதாரமாகக் கொண்டு இக்கவிதை நாடகம் இயற்றப் பெற்றுள்ளது.

இவ்வாறு தல வரலாற்றுச் செய்திகளைத் தலபுராணச் சுருக்கமாக அமைத்து, தனி நூல்களாகவும் பலர் வெளியிட்டுள்ளனர்.



# தலபுராணங்களின் நோக்கமும் பயனும்

கி. பி. 12-ஆம் நூற்றாண்டு முதலாகவே தமிழ்நாட்டில் தலபுராணங்கள் தோன்றி வளர்ந்ததாக அறிகிறோம். பெரும் பற்றப்புலியூர் நம்பி இயற்றிய திருவிளையாடற்புராணம் இன்று கிடைக்கும் தமிழ்த் தலபுராணங்களில் முதலாவது . இது, கி. பி. 13-ஆம் நூற்றாண்டில் தோன்றியது. அதன்பின் பல ஆண்டுகளாக மிகுதியான தலபுராணங்கள் தோன்றியிருக்கவில்லை. ஆனால், கி. பி. 16-ஆம் நூற்றாண்டு தொடங்கி 19-ஆம் நூற்றாண்டு வரையில் நூற்றுக் கணக்கான தலபுராணங்கள் தமிழில் தோன்றியுள்ளன. இதற்கான காரணங்களையும் நாம் ஆராய வேண்டியுள்ளோம். நாட்டில் தோன்றிய அந்நியர் ஆதிக்கமும், சமயப்பூசலும், எங்கும் அமைதி யின்மையுமே இக்கால கட்டங்களில் நாம் காணும் வரலாறுகளாகும். கி. பி. 14-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ்நாட்டில் முகம்மதியர் படையெடுப்பும், அதனால் இந்துசமயக் கோயில்களுக்கும் வழிபாட்டுக்கும் பெருந்தீங்குகளும் ஏற்பட்டன. அதே நூற்றாண்டின் இறுதியில் விசயநகரப் பேரரசு ஓங்கி வளர்ந்து வைதிக சமயத்துக்கு உதவினாலும் அதுவும் வீழ்ச்சியடைந்த நிலையில் நாட்டில் அமைதி குலைந்தது. கல்வி முதலான ஆக்கச் செயல்கள் தடைப்பட்டன. கல்வியிற் சிறந்த புலவர்களை ஆதரிக்கப் புரவலர்கள் இல்லை. அவர்களும் வறுமையினால் வாடினார்கள். இச்சமயத்தில் மூவர் தேவாரப் பதிகங்கள் இவர்களுக்குத் துணையாயின. தலங்கள்தோறும் சென்றும் பாடியும் சிறப்புற்ற அவர்தம் செயல்கள் செயற்கரிய செயல்களாகத் தோன்றின.

"புலவர்களே பொய்யர்களைப் பாடி வாடாதீர்கள். நம் இறைவன் உறையும் திருத்தலங்களைப் பாடுங்கள். பாடினால், இம்மை யிலே சோற்றையும் ஆடையையும் இறைவன் தருவான். துன்பங்கள் ஒழியும். மறுமையிலே சிவநகரை ஆள்வதற்கும் நமக்கு வழியுண்டாம். இதில் ஐயத்திற்கே இடமில்லை, தலங்களைப் பாடுங்கள், திருப்புகலூர் போன்ற இறைவன் திருத்தலங்களைப் பாடுங்கள்" என்பார் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

"தம்மைபுகழ்ந் திச்சைபேசினும் சார்வினுந் தொண்டர் தருகிலாப
பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மையே தரும் சோறும் கூறையும் ஏத்தலாம் இடர்கெடலுமாம்
அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுற வில்லையே"

என்னும் சுந்தர் பதிகங்கள் அக்காலப் புலவர்களுக்கு எழுச்சியூட்டின. திருத்தலங்கள் தோறும், ஊர்தோறும் உள்ள இறைவன் திருவுருவங் களையெல்லாம் பாடத்தொடங்கினார்கள் புலவர்கள். இவை மக்களுக்கும் எழுச்சி தரும் இன்ப ஊற்றுக்களாயின. தேவர்களும் முனிவர்களும் நம்முடைய ஊரில் வந்திருந்து வழிபட்டுப் பேறு பெற்றார்கள் என்றபோது, அதுவரை நலிந்திருந்த நாமும் ஏன் இவற்றை வழிபட்டுப் பேறு பெறக்கூடாது என்ற தன்னுணர்வு அக்கால மக்களிடையே தோன்றிற்று. அந்நியர் தாக்குதல்களால் அல்லலுற்று மனங்குன்றியிருந்த மக்களுக்கு இத்தலபுராணங்கள் புத்துயிர் தந்தன. அதனால், புராணம் பாடிய புலவர்களைப் புகழ்ந்தனர். அவர்களை ஆதரித்து அள்ளி வழங்கினர். சுந்தரர் கூறியது வீண் போகவில்லை. இறைவன் உறையும் ஊரைப் பாடியவர்களுக்குப் பேரும், பெரும்புகழும் கிடைத்தது மட்டுமல்லாமல் சோறும் கூறையும் கிடைத்தன. இதனால் தமிழில் தலபுராண நூல்களும் பெருகின. இந்நிலை பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி வரையிலும் தொடர்ந்ததால் பல தலபுராணங்கள் இன்று நமக்குக் கிடைக்கின்றன.

## நோக்கமும் பயனும்

ஆழ்வார்கள் நாயன்மார்களின் பக்திப் பதிகங்களின் தாக்கம் காப்பிய வடிவில் தலபுராணமாகப் பாடப் பெற்றது. சைவ, வைணவ சமய எழுச்சி இதற்கு உரமாயிற்று. வடமொழியறிந்த தமிழ் நாட்டவர் பலர் தலபுராணங்களை இயற்றத் தலைப்பட்டனர். தென்னாட்டில் சைவ மடங்களைச் சேர்ந்தவர்கள் பலர் இப்புராணங்களை இயற்றத் தொடங்கினர். அவர்தம் நோக்கம் மிகவும் உயர்வானது. அந்நோக்க நிறைவேற்றமே பயனானது. தலபுராணங்களின் நோக்கமும் பயனும் உணரின், இவ்வகை இலக்கியங்கள் இன்றைய நிலையில் மக்களுக்கு எவ்வாறு துணை நிற்கும் என்பது புலப்படும்.

தமிழகத்தில் வைதிக சமயம் எழுச்சி பெற்று மக்கள் சமயமாக மாற வேண்டும் என்பதே தலபுராணங்களின் முதன்மை நோக்கமாக உள்ளது.

நாடு காக்கும் மன்னனையும், நலம் தரும் வள்ளலையும் பாடி இம்மையில் பொருள் சேர்ப்பதைவிட, இறைவனைப் போற்றி மறுமைக்கும் அருள் சேர்க்கவேண்டும் என்பதும் இத்தலபுராணங் களின் நோக்கமாகும்.

சமயத் தத்துவங்களை எளிதில் உணர்வதற்காகவே தலபுராணங்களின் தனித்தனி படலங்களில் தனித்தனி கதைகள் விளக்கப்பெறுகின்றன. இதனால் சமயத்தைப் பின்பற்றுவோர் அதன் கொள்கைகளையும் நடைமுறைகளையும் எளிதில் உணர்ந்தொழுக ஏதுவாகிறது. அறநூல்கள் கதைகளின்வழிச் சிறார்க்கு போதித்தல் போன்று தலபுராணங்கள் இக்கதைகளின் வழிப் பெரியோர்க்குச் சமயத் தத்துவங்களை உணர்த்துகின்றன.

வாழ்வில் தவறு இழைத்தோரையும் அதனில் அவர்அடைந்த துன்பங்களையும் சுட்டிப் பிறரை அவற்றிலிருந்து நீங்கியிருக்குமாறு செய்வதும் தலபுராணங்களின் நோக்கமாகும். எத்தகைய குற்றம் புரிந்தோரும் இறைவழிப்பாட்டால் அதற்குரிய தண்டனையிலிருந்து

மீளலாம் என்றும், அவ்வாறு வழிப்பட்டோர் இனம் முழுவதும் வாழ வைக்கப்படும் என்பதும் வாழ்வில் அனைவருக்கும் நம்பிக்கை ஊட்டுவனவாகும்.

சமய, வழிபாட்டுப் பாதுகாப்பிற்கு இப்புராணங்கள் துணையாக அமைகின்றன. கோயில் இருக்கும் நாட்டு நகரச் செய்திகள் அமைந்து இவை வரலாற்றுக் கருவூலங்களாகவும் விளங்குகின்றன.

தலபுராணமாக அமையினும் இறைவன் எழுந்தருளியிருக்கும் தலத்தின் மூர்த்தி, தலம், தீர்த்தம் உயர்த்தி மொழியப்படுவதால் இவை சமயச்சார்பும் இறைச்சார்பும் பெற்று சிறந்த கடவுள் புராண மாகவும் அமைகின்றன.

தலச்சிறப்பை இயல்பாகக் கூறுவதுடன் கற்பனை நயமுடன் மிகுத்துக் காட்டலும் பொருந்தி, ஓர் இலட்சிய நாட்டைப் பற்றிய நோக்கைத் தருகின்றன.

கதைப் பொருண்மை வாயிலாக சமயத் தத்துவமும் நீதிக் கருத்துகளும் புகுத்தப்பெறுவதும் இவ்விலக்கிய வகையின் நோக்க மாகப் புலப்படுகின்றது.

இறைகதைகளும் தொன்மைச் செய்திகளும் தரப்பட்டபோதும், இடையே மன்னர் வரலாறும் அரச பரம்பரை எண்ணங்களும் இணைவதால் புனைவும் வரலாறும் கலந்தே அமைகின்றன.

## வரலாறுகளை அறிய உதவுவன

புராணங்களில் சொல்லப் பட்ட வரலாறுகள் முழுமையும் உண்மையல்ல என்று தள்ளிவிடுவதற்கில்லை. அவை ஆங்காங்கு வழங்கிய உண்மை வரலாறுகளைப் புனைந்துரையால் ஏற்றிப் பாடப்பெற்றவை என்பதால் நாட்டு வரலாறு மற்றும் நகர வரலாறுகளை அறிய இவை பெரிதும் உதவும் எனலாம்.

கோயிற் புராணத்தில் இரணியவர்மன் என்ற அரசன் அந் நகரைக் கண்டான் என்றும், சிம்மவர்மன் பெயரும் காணக்கிடைக் கின்றன. திருவிளையாடற்புராணத்தில் பரஞ்சோதி முனிவர் பாண்டியர் பரம்பரையை விரிவாகக் கூறுகிறார். மாணிக்கவாசகர் வரலாறும் அதனாலேயே நமக்கு விரிவாகத் தெரிகின்றது.

பல தலபுராணங்கள் இன்றைய சிற்றூர்களின் பண்டைய பெருமையை நமக்கு உணர்த்துகின்ற வரலாற்று நூல்களாகவே அமைந் துள்ளன. முன்பு பெரு நகரங்களாய் இருந்தவை இன்று சிறு ஊர்களாக மாறியுள்ளன. காட்டாக, பழையாறை என்பது அகன்ற பெருநகராய்ச் சோழர் தலைநகராய் ஒருகாலத்தில் இருந்தது. பாண்டியனால் இவ்வூர் அழிக்கப்பட்ட பின்னர் இன்று அதன் பகுதிகள் பட்டீச்சரம் என்றும் சத்திமுற்றம் என்றும் இன்னும் சிறுசிறு தனி ஊர்களாக உள்ளன. பழைய பழையாறை இன்று இல்லை. சோழரின் தலைநகராயிருந்தது உறையூர். அன்று திருச்சிராப்பள்ளிநகர் இல்லை. காலத்தால் உறையூர் சிறு ஊராக மாறியதும் இன்று திருச்சிராப்பள்ளியே பெருநகராக விளங்குவதும் கண்கூடு. இது போன்றே பேரூர் என்பது ஒரு பெரிய நகரம் என்பது அதன் பெயரிலேயே விளங்கும். ஆயின் அது இன்று ஒரு சிற்றூராகவே உள்ளது. அதனருகில் புதிய சிற்றூராக

அண்மையில் தோன்றிய கோயமுத்தூர் இன்று பெருநகராக விளங்குவதைக் காண்கிறோம். அன்று பேரூர்களாயிருந்த பழையாறையும், உறையூரும், பேரூரும் போன்ற பல ஊர்களின் பழமைச் சிறப்புக்களை எடுத்து விளக்கும் வரலாற்று நூல்களாகவே இத்தலபுராண நூல்கள் இன்று நமக்குக் கிடைக்கின்றன என்பது அனைவரும் அறியத்தக்கதாகும்.

## கோயில்கள் பற்றிய கருவூலங்கள்

தலபுராணங்கள் அந்தந்த கோயில்களைப் பாடுகின்றமையால் கோயில்கள் பற்றிய கருவூலங்களாக இவை விளங்குகின்றன. கோயிலின் அமைப்பு, அங்குள்ள மூர்த்தி வடிவங்கள், தீர்த்த நிலைகள், வழிபாட்டு முறைகள், முக்கிய விரதங்கள், விழாக்கள் போன்றவற்றை விளங்குவதால் வழிபாட்டுச் சிறப்புக்களுடன் கலைச்சிறப்புக்களை உணர்வதற்கும் இவை துணைபுரிகின்றன.

## பாமர மக்களையும் படித்த மக்களாக்குகின்றன

தலபுராணங்கள் செய்யுள் வடிவில் அமைந்திருப்பதனால் அவ்வவ்வூர் மக்கள் மிக்க பற்றோடு தங்கள் ஊர்ப்புராணங்களைப் படிக்கின்றனர். புராண நூல்களில் கூறப்பட்டுள்ள தோத்திரங்களையும் துதிப்பாடல்களையும் பாமர மக்களும் மனப்பாடம் செய்து கோயிலில் பக்தியோடு பாடுகிறார்கள். இதன் பயனாக படிப்பறிவில்லாதவரும் நல்ல மொழியறிவும், இலக்கிய அறிவும், கவிச்சுவையருந்தும் பாங்கும் பெற்றுப் படித்தவர்களைக் காட்டிலும் மேம்பட்டவர்களாகின்றனர். மொழியிலுள்ள பிற கவிதைகளையெல்லாம் நுணுகியுணரும் இம்மக்களுக்குப் படித்தோர் அவையிலும் இடம் கிடைக்கின்றது. இன்று பல கல்வி கற்றோருக்கும் இத்தகைய இலக்கியப் பயிற்சி நிரம்பியிருக்குமா என்று எண்ணுமளவிற்கு அன்றைய மக்களின் இலக்கியப் பயிற்சி அமைந்ததற்கு இத்தகைய புராணப் பாடற்பயிற்சியே காரணமாம்.

## கலைகள் வளர்ச்சிக்கு வித்திடுவன

தலபுராணங்கள் கூறும் கோயில்களின் சிறப்புக்களையெல்லாம் அறிந்த மக்கள் தங்கள் ஊர்க்கோயில்களிலும் இத்தகைய கலைச்சிறப்புக்கள் மிளிர வேண்டுமென்ற உணர்வு பெற்றனர். செல்வம் படைத்தவர்கள் தம்மூர்க்கோயில்களை அழகுபடுத்தவும் விரிவுபடுத்தவும் முற்பட்டனர். இதனால் கோயிற் கட்டிடக் கலைகளும் சிற்பக்கலையும் ஓவியக்கலையும் பிறவும் சிறப்புற்றன. இசை, நடனம் போன்ற கலைகளும் வளர்ந்தன. இயல் இசை நாட்டியக் கலைஞர்களும் தம்மைத் தம்முடைய ஊர்ச்சிறப்புப் பெயரோடு கூட்டி அழைப்பதையே விரும்பி ஏற்றனர். இன்றும் இத்தகு கலைஞர்களைக் காணலாம். ஊர்ச்சிறப்பால் உயர்ந்த இலக்கியக் கலையும் வளர்ந்தது. ஊர்தோறும் உலாவும் தூதும் கோவையும் குறிஞ்சியும் கலம்பகமும் காதலும் தோன்றின. இவ்வாறு முழுமையான கலைவளர்ச்சிக்கு வித்தாகவும் இத்தலபுராணங்கள் விளங்கி வந்துள்ளன.

## தலப்பயணங்களுக்கு ஊக்கமூட்டுவன

நாயன்மார்களும் ஆழ்வார்களும் பல தலங்களைச் சென்று வணங்கி வழிபட்டுப் போற்றிப் பரவியுள்ளதால் பல பக்தர்களும் தலப்பயணங்கள் செய்வதைப் பெரும்பேறாகவே கருதுகின்றனர். இதற்குத் தலபுராணங்கள் மேலும் ஊக்கமூட்டி, அவ்வவ்வூர்ச் செய்திகளை விரித்துக் கூறுவதால் வடவேங்கடம் தென்குமரியாயிடை எழுந்துள்ள தலங்கள் பலவற்றையும் வாழ்க்கையில் ஒருமுறையாவது சென்று காணவேண்டும் என்ற அவாவை மக்களிடையே ஏற்படுத்துகின்றன. இத்தகைய மக்கள் பலரின் திருத்தலப் பயணங்களால் நெடுஞ்சாலைகள் பல தோன்றின. அடிக்கடி செப்பம் செய்யப் பெற்றன, வளமான மரங்கள் வளர்க்கப்பெற்றன. வழிகள்தோறும் தருமச்சாலைகளும் நீர்நிலைகளும் உருவாக்கப் பெற்றன. இதனால் நாடே வளமாகக் காட்சியளிக்கத் தொடங்கியது. இரவு பகல் என இல்லாமல் எப்போதும் யாரும் எங்கும் எத்தலத்திற்கும் செல்லலாம் என்ற நிலை உருவானது. இதனால் மக்களிடையே மகிழ்ச்சி பெருகிற்று.

## பாடல்பெற்ற தலங்கள் சீர்பெறுதல்

இத்தகைய தலப்பயணங்களால் பல பழைய பாடல்பெற்ற தலங்கள் சீரடைந்தன. கல்வெட்டுக்களும், பழைய பாடல்கள் பலவும் கிடைத்தன. காட்டாக ஒன்றைக் காண்போம்.

திருக்களர் என்னும் சிவப்பதியில் தோன்றிய (கி. பி. 18-ஆம் நூ. பிற்பகுதி) மு. சாமிநாத மாதவராயர் என்பவர் தம் தலபயணத்தின்போது திருவிடைவாய்த் தேவாரத்தைக் கண்டுபிடித்து வெளிப்படுத்தினார் என்பர்.

அன்பர் ஒருவருடைய பொருளுதவியால் ஐந்தாண்டுகள் வரை தேவாரம், திருப்புகழ் முதலிய பாடல்பெற்ற திருக்கோயில்களுக்கு யாத்திரை செய்த இவர் ஒருநாள் திருப்பாலைத்துறை என்னும் சிவப்பதியை அடைந்து இறைவழிபாடு செய்து கொண்டிருந்தார். அப்பொழுது ஒருவர் அவ்விடம் வந்து இவரைப் பார்த்துத் "திருவிடைவாசல் தெரியுமா?" என்று கேட்டார். இவர், "அஃதெங்கே இருக்கிறது?" என்று திருப்பிக் கேட்க, அவரும், "கொரடாச்சேரி புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கே ஒரு மைல் தொலைவில் பாண்டவயாற்றின் தென்கரையில் உள்ளது" என்று கூறிச் சென்றார். இவர் அவர் கூறிய வழியே சென்று திருவிடைவாசல் என்னும் அச் சிவப்பதியைக் கண்டார். கோயில் காடு மூடப்பெற்று வெடித்துச் சரிந்து விழுந்துகொண்டு, மக்கள் நடமாட்டம், பூசை முதலியன இன்றிப் பாழ்ங்கோயிலாக இருந்ததும் கண்டார். விநாயகர், அம்மன், திருஞான சம்பந்தர் போன்ற பல திருமேனிகளுடன் பல கல்வெட்டுக்களையும் இவர் கண்ணுற்றார். அவற்றுள் திருஞானசம்பந்தருடைய தேவாரப் பதிகம் ஒன்றும் கல்வெட்டில் இருக்கக் கண்டார். அப்பதிகம் முழுவதையும் படிக்க முடியாதபடி வேறு சுவர் மறைத்திருந்தது. பின்பு தடைகளை நீக்கிப் படித்தனர். ஒரு பாட்டுச் சிறிது சிதைவுற்று.

"கிள்ளை மொழியாளைக் கெழு......வ.......
.........ள்ளித் தலைத் தக்கனைக் கொண்டவர் சார்..........
........நெ........கு மழலை........ செவ்வாய்
வெள்ளைந் நகை.......செய் விடைவாயே"

என்று காணப்பட்டது.

மேற்கண்ட பாடலை இவர்,

"கிள்ளை மொழியாளைக் கெழுவ வாழ்த்தித்
தள்ளித் தலைதக்கனைக் கொண்டவர் சார்வாம்
மள்ளல் நெருங்கும் மழலைச் செவ்வாய்
வெள்ளைந் நகையார் விளிசெய்விடை வாயே"

என்று எழுத்து நிறைத்து எழுதியமைத்தார்.

இப்பதிகம் தேவாரத் திருமுறையில் காணப்படாமலிருந்தபடியால் இறந்தழிந்த பதிகங்களில் ஒன்றாகவே இருக்க வேண்டுமென்று முடிவு செய்து அச்சிட்டு வெளிப்படுத்தினார். கோயிலில் பூசை முதலியன நடைபெறவும் ஏற்பாடு செய்தார் என்பர்.[1]

இவ்வாறு தலப்பயணங்களால் நம்முடைய பழைய இலக்கியச் செல்வங்களும் காப்பாற்றப்பட்டுள்ளமையை அறிகிறோம்.

## வசதியற்றவரையும் வாழ வைப்பன

வாழ்க்கையில் வசதி குறைவானவர்கள் எல்லா ஊர்க்கோயில் களுக்கும் சென்று வழிபட முடிவதில்லை. தில்லையும் ஆரூரும் அண்ணாமலையும் அவர்களுக்குத் தெவிட்டாத இன்பத் திருத்தலங்கள். ஆயின், சென்று தரிசிக்கவோ செலவுக்கு இல்லை. இக்குறையைப் போக்கவே, அந்தந்த ஊரிலும் ஆங்காங்கு உறைகின்ற அப்பனும் அம்மையும் அங்குள்ளோருக்கு நடராசராகவும், உமாபாகராகவும் காட்சியளித்து முத்தி வழங்கினர் என்று தலபுராணங்கள் பாடியுள்ளன. எனவே, வசதியற்றவர்கள் தங்கள் கோயிலிலேயே தில்லை நடராசரையும் காசி விசுவநாதரையும் கண்டு மனநிறைவு பெற்றனர். எல்லா மூர்த்தியும் இந்த மூர்த்தியே என்ற உயர்ந்த சமரச உணர்வும் ஏற்படுகிறது. இதனால் பல தலங்களுக்கும் சென்று தரிசித்துத் தீர்த்த மாட இயலவில்லையே என்ற ஏக்கம் நீங்கி, வாழ்க்கையில் நிறைவு ஏற்படுகிறது. வசதியற்றவர்களும் வாழ்க்கையில் இன்பம் காண்கின்றனர்.

## தேசிய ஒருமைப்பாட்டுக்கு வழிவகுப்பன

தலபுராணங்கள் உள்ள ஊர் மக்களுக்கு ஓர் உயருணர்ச்சி காணப்பெறும். நாம் யாருக்கும் தாழ்வில்லை என்ற எண்ணத்தால் ஊரார் உள்ளத்தில் பெருமிதமும் தன்னம்பிக்கையும் உயரும். சொந்த ஊர்ப்பற்று என்பது தானாகவே வளரும். ஒரு சிற்றூரிலுள்ள மக்கள் யாவரும் இந்நிலையை யடையும்போதே உண்மையான ஒருமைப்பாடு

1. தமிழ்ப் புலவர் வரிசை, இருபத்து மூன்றாம் புத்தகம், பக். 110 - 115.

தோன்றும். கடவுள் ஒருவரே, அவர் எங்கும் இருக்கிறார். இங்கும் இவ்வூரிலும் இருக்கிறார் என்றும், எல்லாத் தலத் தெய்வ வடிவங்களும் ஓர் இறைவனின் உருவ வெளிப்பாடே என்ற உண்மையும் வெகு எளிதாக மக்களிடையே தோன்றிவிடுகின்றன. இதனால், யாதும் எனது ஊர், யாவரும் எனது கேளிர் என்ற பெரு உணர்வு முகிழ்கிறது. இன, மொழி, சாதி, சமய வேறுபாடுகளைக் கடந்தவொரு ஒற்றுமைநிலை மக்களிடையே தோன்றுகிறது.

## கடையருக்கும் இங்குக் கடைத்தேற்றம்

ஒருவன் எவ்வளவுதான் பாவம் செய்திருப்பினும், அவன் தான் செய்த பிழைக்கு அகங்குழைந்து வருந்தி, இந்தத் தலத்தில் இந்தப் பொய்கையில் நீராடி இந்த இறைவனை வழிபட்டால் பாவங்கள் நீங்கப் பெறுகிறான்; நற்கதி பெறுகிறான் என்றே எல்லாத் தலபுராணங்களும் உறுதியாக எடுத்துரைக்கின்றன. மேலும், யானையும், பூனையும், பாம்பும், பறவையும், எறும்பும், ஏனமும், சிலந்தியும், சிறுகுருவியும் என விலங்கினங்கள் எல்லாமும் இத்தலங்களில் இறைவனால் ஆட்கொள்ளப்பெற்றன என்பதை இப்புராணங்கள் விளக்கும்போது கடையருக்கும் இங்குக் கடைத் தேற்றம் என்ற உண்மை வெளிப்படுகின்றது. துன்பமே மிகுந்த உலகில், வறுமையும் பிணியும் இறப்பும் பிறப்பும் சூழ்ந்துள்ள வாழ்க்கையில், ஊர்கள் தோறும் இறைவன் இருக்கிறான்; அவன் அன்பர்களைக் காப்பாற்றவே இருப்பவன்; அவன் நம்மைக் கடைத்தேறச் செய்வான்; இப்பிறப்பில் இல்லாவிடினும் மறுபிறப்பில் நம்மை ஆட்கொள்வான் என்ற நம்பிக்கைகளை ஊட்டி மக்களை வாழ்விப்பனவே தலபுராணங்கள்.

## நல்லொழுக்கம் வளர வழிவகுப்பன

"புராணங்களை மனிதன் பற்றி, அவை இறைவழிபாட்டுணர்வு களுக்குப் பற்றுக் கோடாயிருந்த வரையில் அவனுடைய வாழ்க்கையில் தெய்வப் பெயரால் கொஞ்சமேனும் நல்லொழுக்கம் இடம் பெற்றிருந்தது. வழிபாட்டேணி வழுக்கி விட்டு, மனிதனை இன்று எங்கோ வீழ்த்தியிருப்பதால், அவனுடைய ஒழுக்கமும் வீழ்ச்சியுற்றிருப் பதைக் காண்கிறோம். அறமும் மனிதப் பண்பும் ஜனநாயத்தின் முன் பலியிடப்பட்டிருப்பதைக் காண்கிறோம்' என்பார் அறிஞர் மு. அருணாசலம் அவர்கள்[1].

'முற்போக்கு' என்ற போர்வையில் நாட்டில் தோன்றிய சில இயக்கங்கள், சாதியின் பெயராலும், மொழியின் பெயராலும் பிரிவினைகளைத் தூண்டியபோது 'பக்தி இலக்கியங்கள் மூட நம்பிக்கையை வளர்ப்பன' என்னும் நச்சுக் கருத்தை விதைத்தன. அதில் நசிந்த தமிழ் இலக்கியச்செல்வங்கள் மிகப்பல. அவற்றுள் தலபுராணங்களும் இடம்பெறும்.

1. தமிழ் இலக்கிய வரலாறு, 16 ம் நூ. பக். 48

## புராணம் படிப்பது மூடநம்பிக்கையை வளர்க்குமா?

புராணங்கள் பொதுவாக வேத ஆகமங்கள் விதித்தவற்றையும் விலக்கியவற்றையும் கதைகள் மூலமாக மக்களுக்கு உணர்த்தி நன்னெறி புகட்டுவதற்காக எழுந்தவை. கதைகளோடு விதிகளும் விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கும். புராணங்களில் எண்ணற்ற விரதங்கள் சொல்லப்பட்டுள்ளன. ஒவ்வொரு விரதம் தொடர்பாகவும் அதன் இலக்கணம் யாது, அதை முற்காலத்தில் கைக்கொண்டவர் யாவர், அவர் பெற்ற பலன் யாது என அவர் வரலாறுகளையெல்லாம் விளக்கிக் கூறுவதே புராணத்தின் இயல்பு. தமிழ்ப்புராணங்கள் செய்யுள் நடையில் எழுதப் பெற்றிருந்தபோதிலும் கூட, அவை எளிய கல்வி உள்ளவர்களுக்கும் எளிதில் பொருள் விளங்கக் கூடியவை. அன்றியும், மக்களை நல்வழிப்படுத்துதலே புராணத்தின் நோக்க மாதலால், மக்கள் மனத்தைக் கவரும்பொருட்டு அவை ஒன்பது சுவையும் அமையும்படி செய்யப்பெற்றுள்ளன. மேலும் மனித இயல்பைக் கடந்த செய்திகள் பல புராணங்களில் உள்ளன. ஆனால், புராணச் சொற்பொழிவைக் கேட்போருக்கு அண்மைக்காலம் வரையில் அவற்றில் ஆராய்ச்சி உணர்வு தோன்றியதில்லை. அனைத்தையும் உண்மை என்றே அவர்கள் நம்புகின்றனர். இது மூட நம்பிக்கை என்று சொல்வது சரியாகாது. புராணச் சொற்பொழிவு செய்வோரிடத்திலுள்ள சொல்லாற்றலாலும், கேட்போர் மனம் பக்குவப்பட்டுச் செல்லும் நெறியினாலும், எல்லாமே மெய் என்று நம்பமுடிகிறது. இதனால் புராணம் பாடுவோர் தாம் எடுத்த போதனையில் வெற்றி காண்கிறார். பாவச் செயலில் அச்சமும் வெறுப்பும் திகழ வேண்டும் என்ற உணர்வோடு அவர் புராணம் பாடுகையில், மக்கள் மனத்தில் அச்சமும் வெறுப்புமே உதிக்கின்றன. புண்ணியச் செயல்களால் மகிழ்ச்சியும் எழுச்சியும் விளையவேண்டு மென்றும் புராணம் பாடுவோர் திட்டமிட்டால், மக்கள் மனத்தில் அதே மகிழ்ச்சியும் அப்புண்ணியச் செயல் செய்வதில் ஊக்கமும் பிறக் கின்றன. எனவே, புராணக் கதைகள் மக்களை ஊக்குவிக்கின்ற சிறந்த நூல்கள் என்பதில் ஐயமில்லை. புராணக் கதைகள் பொய்க்கதைகள் என்று இகழ்வதால் பயனில்லை என்பர் அறிஞர்.[1]

"புராணம் என்றால் பழைய வரலாறு. நாடோடிப் பாடல் என்று சில பாடல் பாடி வருகிறோம். அவை மக்களுக்குப் பொதுப்பாடல்கள். அதனைப் பாடி மகிழ்பவனும் கேட்டு மகிழ்பவனும் தான் தானே எழுதியது போல எண்ணி மகிழ்கின்றனர். புராணம் என்பவை உலகோடிக் கதைகள். உலகம் முழுவதும் வெவ்வேறு வடிவில் இவை வழங்கி வருகின்றன. அறிவாராய்ச்சியின்போது 'இது என்ன' என்று வெறுத்து நின்றாலும் ஒவ்வொருவனுடைய அடிமனத்திலும் ஆழ்ந்து ஒவ்வொருவரையும் நீர்ப்பிண்டமாக இந்தப் புராணக் கதைகள் உருக்கிவிடுகின்றன. யுங் (Jung) என்ற மன நூலாசிரியர் அடிப்படைக் கதைக்கோலங்கள் (arche types) என்று இத்தகைய புராணக் கதைகளை விளக்கி வைக்கின்றார். இக்கதைகள் வெறுங்கதைகள் அல்ல. இவற்றின்

1. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு 16ம் நூ. ப. 35-36.

பொருளாழும் நம் ஆராய்ச்சிக்கு எட்டுவதில்லை. ஆனால், நம் அடிமனம் அதனை அறிந்து ஓர் ஆறுதல் அடைகிறது. இவற்றினை நாடோடிக் கதைகள் எனப் புறக்கணிப்பதற்கில்லை. இவற்றுக்குத் தத்துவார்த்தம் கூறும் முயற்சியைத் தொன்றுதொட்டே எந்த நாட்டிலும் காண்கிறோம்' என்பர் திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள்.[1]

மேலும், "உரிமையிழந்த தமிழர், செல்வமின்றிப் பட்டினியில் புழுப்போல் துடிதுடித்த தமிழர், பஞ்சத்தில் வாடிய தமிழர், கல்வி கற்க இடமோ காலமோ பெறாது கருத்தழிந்த தமிழர், அமைதியிலாத கொள்ளையிடையேயும் கொடுங்கோலிடையேயும் குன்றிக் குமைந்த தமிழர், நோயில் நொந்த தமிழர்- இத்தகையவர் வாழும் நாடாகச் சோழப் பேரரசு வீழ்ந்தபின் தமிழ்நாடு மாறிவிட்டது. இவர்களுக்குப் புத்துயிர் தந்து மக்களாக்க வேண்டும். உறுதி தரவேண்டும். இந்தப் பெருந் தொண்டினைச் செய்தவையே புராணங்கள் - தல புராணங்கள். "நீங்கள் வாழ்வது வெறுந் தரையன்று; புண்ணியம் பூத்தது. உங்கள் குளம் புழுத்த வற்றாந் தரையன்று; தேவர்கள் ஆடியது. முயன்றால் முழு இன்பம் விளையும்; ஆற்றல் சுரக்கும்; வழிபட்டால் ஆண்டவன் அருள் பொங்கும்" என்று புராணங்கள் ஊக்கின. புராணங்கள் பொய் கூறுகின்றன என்று சிலர் கூறுவர். சூரியன் காயாத ஊருண்டோ? மழை பொழியாத கோயிலுண்டோ? காற்று வீசாத மன்ற வெளியுண்டோ? விலங்கு புகாத காடு உண்டோ? மரம் இல்லாத பொழில் உண்டோ? சூரியன் வழிபட்ட இடம்; வருணனும் இந்திரனும் வந்து வழிபட்ட கோயில்; வாயு வந்து சுற்றிச் சுற்றி வணங்கிய கோயில் என்று கூறுவதில் என்ன கேடு? இயற்கை அன்னை இந்த நிலத்தின் ஒவ்வோர் அணுவையும் இன்பங் கொழிக்கவே அருள் சுரக்கவே முயல்கின்றாள். இவற்றை இவ்வாறு பாடுவதில் என்ன தடை? இவ்வாறு பாடக் கேட்ட மக்கள் தங்கள் கோவிலைப் பெரிதாகக் கட்டினர். அதுவும் சமுதாய வாழ்வின் உயிர்நிலையாக ஓங்கிற்று. மக்கள் துன்பத்தை மறந்தனர்; புராணத்தில் இன்பம்கொண்டனர். நோய் ஓடியது; முயற்சி ஓங்கியது. புத்துயிர் பெற்று மக்கள் வாழத் தொடங்கினர். இல்லையேல் தூக்குப் போட்டுச் சாவ நின்றார் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு இக்கதைகளைக் கேட்டுக் கொண்டே இந்நாள் வரை வாழ்ந்து வந்து இருப்பரோ? இந்தப் புராணங்கள் செய்த தொண்டு பெருந் தொண்டன்றோ?" என்றும் வினவுவர், திரு தெ. பொ. மீ அவர்கள்.[2]

"இப்போது பொதுப்படவே புராணங்கள் என்றால் பொய்யாகிய கட்டுக்கதைகள் என்று சிலர் எண்ணி உரைக்கின்றனர். அன்னார் அவ்வாறு எல்லாவற்றையும் ஒருங்கே தள்ளிவிட முயலுதல் அறிவீனமாம். எல்லாப் புராணங்களையும் ஒரே விதமாகப் பாராட்ட இயலாது. அன்றியும் ஒரு புராணத்துள்ள எல்லா வரலாறுகளையும் ஒன்று போலவே பாராட்டலும் தவறாகும். சில புராணங்களும் ஒரு புராணத்துட் சில சரிதங்களும் உண்மைச் சரித்திர நிகழ்ச்சி பற்றி உரைக்கப்படும். வேறுசில, உவமை முதலிய அணிகளின் முகத்தால் குறித்த ஒரு நற்பொருளை விளக்குதற் பொருட்டுக் கதைகளாய்

1. திருவிளையாடற் புராணம், முன்னுரை ப. 14, 1
2. திருவிளையாடற் புராணம் முன்னுரை, பக். 23 - 25.

உரைக்கப்படும். இன்னும் சில, குறித்த ஒரு கற்பனையை விளக்கும் அர்த்தவாத வாக்கியங்களாகப் பொருள் செய்து கொள்ளுமாறு கதை உருவமாய் உரைக்கப்படும். மற்றும் சில, தத்துவார்த்த வாக்கியங்களாய் உரைக்கப்படும். மேலும் பல, கவிநயம் பெறவும், பொருளின் மேன்மை தெரிக்கவும், இலக்கியநயம் பற்றிப் புனைந்துரையாக உரைக்கப் பெறும். இவ்வாறே பற்பல உரைகள் உண்டு. இவற்றின் கருத்தும் போக்கும் தாமே அறிந்தும் அல்லது புராணங்களின் பொருள் கோளையும் உள்ளீடுகளையும் உணர்ந்தும் அவற்றை நூல் நெறியிலேயும் ஆன்றோர் வழக்கிலேயும் கற்றும் கேட்டும் தெரிந்தும் பொருள் கொண்டும் பயனடைய அறியாதார் பலர் எல்லாந் தெரிந்தவர் போல அகங்கரித்து வீண் வசை பேசி, அபசாரத்திற்கும் அறிவுடையார்களின் ஏளனத்திற்கும் ஆளாகின்றார்கள். அந்தோ! இவர்களின் மடமையும் ஆணவமும் பாவ வலிமையும் இருந்த வாறென்னே! கடவுள் இவர்களைப் பணிவிலும் நன்னெறியிலும் செல்ல அருள்வாராக" என்னும் சைவப் பெரியாரின்[1] உள்ளக் கருத்தும் இவண் மனங்கொள்ளத் தகும்.

## புராணங்கள் பொய்யுரைகள் அல்ல

இலக்கியங்களை உலகியல் இலக்கியம், சமய இலக்கியம் என இரண்டு வகையாகக் கொள்ளலாம். அவற்றுள், உலகியல் இலக்கியம் நாடக வழக்கில் வைத்து, உள்ளோன் தலைவனாக உள்ளது புணர்த்தலும், உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்தலும் இல்லோன் தலைவனாக உள்ளது புணர்த்தலும், இல்லோன் தலைவனாக இல்லது புணர்த்தலும் என நால்வகையாகக் கூறப்படும்.

சமய இலக்கியத்தையும், சமயத்தின் பயன் அறியாதாரை அறிவித்து அந்நெறியில் வருவித்தற்பொருட்டும், அறிந்தொழுகுவாரை உறுதிப்படுத்தி 'அந்நெறி நிறுத்துதற்பொருட்டும், அங்ஙனம் ஒழுகிப் பயன்பெற்றாரது வரலாற்றைக் கூறும் *வரலாறுரைத்தலும்*, நுண் பொருளாகிய சமய உண்மைகளை அறியும் அறிவு மதுகை இல்லா தார்க்கு உளங்கொளுத்தற் பொருட்டு அவற்றை உருவகமாக்கி நடத்தும் *உருவகப்படுத்தலும்*, மக்கள் தாம் கருதிய பயனுக்கேற்பக் கடவுளை யெண்ணி வழிபட்டு அதனை எளிதிற் பெறுதற்பொருட்டுப் பலபடக் கற்பித்துக் கூறும் *பயன்பெற வைத்தலும்* என ஒருவாறு மூன்றாகக் கூறலாம்.

இவை தனித்தனி வேறுநிற்றலேயன்றி விரவிவருதலும் உண்டு. அவற்றுள், சமய இலக்கியத்தில் பெரியபுராணம் முற்றிலும் வரலாறுரைத்தலாகும். பிரபுலிங்கலீலை உருவகப்படுத்தலாம். புராணங்களிற் பலபகுதிகள் பயன்பெற வைத்தலாகும்.

எழுவகையாக ஈண்டு பகுத்துக் கூறப்பட்ட இயல்புடைய இலக்கியங்களுள் உள்ளோன் தலைவனாக உள்ளது புணர்த்தலும், வரலாறுரைத்தலும் ஒழித்து ஒழிந்த இலக்கியங்கள் ஒருபுடை இல்லனவும் முற்றும் இல்லனவுமாதலால், அவை ஆராய்ச்சிக்குரிய சான்றுகளாகா வெனினும், உலகியல் நிறுத்தற்பயத்தவும், சமய நெறி நிறுத்தற்

1. திரு சி. கே. சுப்பிரமணிய முதலியார், திருப்பேரூர்ப் புராணம், முன்னுரை.பக்.iii.

பயத்தவுமாகலான் பொய்யென்றிகழப்படா. அவற்றுள்ளும் உருவகப் படுத்தல் நுண்பொருளைக் பருப்பொருளாகக் கூறுவதன்றி இல்லது கூறாமையானும், பயன்பெற வைத்தல் இல்லது கூறிற்றாயினும் உள்ளது போன்றே பயன்தருதலாலும் அவை பொய்யென்றற்கேலா. அன்றியும் மக்களது உள்ளம், உள்ளதாயினும் இல்லதாயினும் தொடர்ச்சியாக அமைந்து ஒன்றைக் கேட்பின் அதன் வண்ணமாக ஆகும் இயல்புடையதாகலின், அவ்வாற்றால் உலகியலிலும் சமய நெறியிலும் மக்களது உள்ளத்தைப் பண்படுத்திப் பயனடையச் செய்யும் இலக்கியங்கள் எவையும் பொய்யென ஆன்றோர்களாற் பழிக்கப்படா. அவை ஆராய்ச்சிக்குச் சான்றுகளாக எடுத்துக் காட்டுதற்குரியவல்ல என்பதொன்று மாத்திரமே மனத்தின்கட் பதிக்கற்பாற்று. இந்நுட்ப முணரமாட்டாதார் புராணம் முதலிய இலக்கியங்களை அறவே பொய்யென்று அவற்றைக் கண்ணினாலும் நோக்காது அவற்றால் வரும் பயனை இழப்பாரும், இலக்கியமென்பனவெல்லாம் வரலாறுரைப்பனவே எனப் பிடித்துக்கொண்டு, அவற்றிற் காணப் படும் முரண்பாடுகளை எண்ணவும் அஞ்சித் தம் அறிவையும் ஆராய்ச்சியிற் புகவொட்டாது பிணித்து, ஆராய்ந்து உண்மை கூறும் அறிஞர்களையும் இகழ்ந்து உண்மை காணாதாருமாய்த் தம்மின் முரணியொழிவர்.[1] எனவரும் அறிஞர் கருத்தும் இவண் எண்ணத்தகும்.

## புராணப் புனைந்துரைகள் பகுத்தறிவுக்குப் பொருந்தும்

தமிழிலுள்ள புராணங்களில் புனைந்துரைகளே மிகுதி என்றும், அவை இக்காலப் பகுத்தறிவுக்குப் பொருந்தாது என்றும் சிலர் வாதிடுவர். இதன் உண்மையை எடுத்துக் கூறுவதும் விளக்குவதும் அரிதாயினும் அதனை ஏற்பதும் இக்காலத்தில் அரிதாகும். அண்மைக் காலத்தில் தமிழில் புராணம் இயற்றும் புலவர்களுள் ஒருவராக விளங்கும் மயிலம் சிவஞான பாலைய சுவாமிகள் தமிழ்க் கல்லூரி வித்துவானாகிய திரு அடிகளாசிரியர் தரும் பின்வரும் விளக்கம் இவண் நோக்கத்தக்கது.

"நம் நாட்டுப் புராணங்களெல்லாம் நம்பமுடியாத புனைந்துரை களைப் பெற்றிருக்கின்றன; இப்புனைந்துரைகளைக் கற்றால் நம் பகுத்தறிவுணர்ச்சி பாழ்படும் என்று சிலர் கூறிவருகின்றார்கள். அவர்கள் கூறுவதை ஆராய்ந்துணரும் அறிவில்லாத பலர் அவர்கள் கூற்றை அப்படியே நம்பிப் புராணம் என்றால் சீறி விழுகின்றனர். அங்ஙனம் அவர்கள் சீறி விழுவதற்கான புராண கதைகளைப் பற்றி தமிழ் நாட்டறிஞர்க்குச் சில கூற யான் விழைகின்றேன்.

ஆசிரியன் மாணாக்கர்களுக்குக் கல்வி கற்பிக்கத் தொடங்குங் கால் அவன் கல்வியை அவர்களுக்குப் பல நெறிகளாலே சொல்லிக் கொடுப்பான். அப்பல நெறிகளிற் சிறந்ததொன்று கதைகளைக் கூறி அவற்றால் கல்வி கற்பிப்பதாகும். அங்ஙனம் கூறப்படுகின்ற கதைகள் உண்மையாகவுமிருக்கலாம். புனைந்துரையாகவுமிருக்கலாம். எப்பொழுதும் புனைந்துரை பெய்துரைக்கப் பெறாத கதைகள் அவ்வளவு நன்றாயிருப்பதில்லை. ஆகையினாற்றான் தொன்று

1. சி. அருணைவடிவேல், காஞ்சிப்புராணம், முன்னுரை, பக். 11-13

தொட்டே நல்லிசைப் புலவர்களெல்லாம் தாங்கள் செய்யுள் செய்யும் புலநெறி வழக்கிற்குப் புனைந்துரையாகிய நாடக வழக்கினையும் உள்ளனவாகிய உலகியல் வழக்கத்தினையும் உறுப்பாகக் கொண்டுள்ளார்கள். 'நாடக வழக்கினும் உலகியல் வழககினும் பாடல் சான்ற புலனெறி வழக்கம்' என்பது தொல்காப்பியம்.

அதுவுமன்றியே தற்காலப் பாடப் புத்தகங்களிலும் எத்தனையோ புனைந்துரைக் கதைகள் எழுதப்பட்டிருக்கின்றன. முயலானது ஒரு சிங்கத்தை ஏமாற்றிக் கொன்றதென்றும், நரியொன்று நாரையொன்றிற்கு விருந்து செய்து ஏமாற்றியதைப் போல நாரையும் நரிக்கு விருந்து செய்து ஏமாற்றியது என்றும் பாடபுத்தகங்களில் படித்திருக்கிறோம். இக்கதைகளெல்லாம் வெறும் புனைந்துரையாக விருப்பினும் ஒவ்வொன்றும் நமக்குச் சிறந்த நீதிகளைப் புகட்டுவதால் நாம் அக்கதைகளை விரும்பிக் கற்கின்றோம். அங்ஙனம் அக்கதையுணர்த்தும் நீதிகளைக் கருதாது இது புனைந்துரை! கட்டுகதை! என்றொருவன் கூறிக் கொண்டிருப்பானேயானால் அம்மகனின் பகுத்தறிவு விளக்கத்தை என் சொல்வது?

அங்ஙனமே புனைந்துரையாகிய நாடக வழக்கத்தினையும் உளதாகிய உலகிய வழக்கத்தினையும் அடிப்படையாகக் கொண்டு கற்றுவல்ல சான்றோர் தங்கள் வாழ்ந்துவந்த காலத்திற்கேற்ப நூல் செய்வார்களேயானால், அந்நூலைப் புனைந்துரை! புனைந்துரை!! பகுத்தறிவிற்கேற்றதல்ல என்றொருவன் கூறுவானேயானால் அவன்றன் தமிழ்க் கல்வியறிவினையும் பகுத்தறிவுணர்ச்சியினையும் என்னென்று கூறுவது?' என்று வியந்துரைப்பர் இவர்.[1]

தலபுராணங்கள் சமயத்தைச் சார்ந்தே எழுதப்பெற்றாலும் மக்களை நல்வழிப்படுத்தும் நோக்கமே மேலோங்கி நின்றமையால், ஒழுக்கநெறி பிறழ்ந்தால் நரக வாழ்வே பலன் என்பது தவறாமல் சொல்லப்படும். நரக வகைகள், நரகத் துன்பங்கள் மிகுதியாகக் கூறப்படும். இவை பகுத்தறிவுக்குப் பொருந்துமா என்பது சிலர் கேள்வி. இதில் பொருளில்லை என்பதே அறிஞர்தம் கருத்து. பார்த்து அனுபவிக்காத பலவற்றை நம்பித்தான் தினசரி வாழ்க்கையில் ஏற்கிறோம். அறிவியலிலும் மருத்துவத்திலும் இப்படி எத்தனையோ கூறப்பெறுகின்றன. துன்பம் வேண்டாம் என்பதுதான் எல்லோருடைய எண்ணமும். ஆகவே, நெறி பிறழ்ந்தால் துன்பம் என்று சொல்லி அச்சுறுத்தியே ஒழுக்கத்தை நிலைநாட்டப் பார்த்தனர். அன்றைய சூழ்நிலைக்கு இது பொருந்துவதே. 'அரசு அன்று கொல்லும், தெய்வம் நின்று கொல்லும்' என்பது அன்றைய நம்பிக்கை. இது நம்மிடம் மட்டுமல்ல; மேல்நாட்டிலும் உண்டு. 'தண்டிக்கும் தெய்வம் நொண்டி, ஆனால் பிடித்துத் தண்டிப்பது உறுதி' என்பது அவர்கள் பழமொழி. எனவே, புராணங்களின் இந்த இயல்பைப் பழிப்பது நம்மை நாமே பழிப்பதாகும். இத்தகைய புராணங்கள் மக்களின் நன்மைக்கு பாடுபடுகிற வரையில் இவற்றுக்காகப் பரிந்து பேசுவதில் தவறில்லை என்பதே வரலாற்று அறிஞர்தம் கருத்தாகும்.[2]

1. திரு. அடிகளாசிரியர், திரு அரிசிலிக் காதை, முன்னுரை.
2. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 16 ஆம் நூ. பக். xiv.

"தமிழ் இலக்கியத்தில் புராணம் என்பது மிகவும் சிறப்பான ஒரு பகுதி. வெறும் புனைந்துரை என்று அவ்வளவையும் தள்ளிவிடுதல் அறிவுடைமையாகாது. திருக்குறள் போன்ற நூல்கள் மக்களை நல்வழிப்படுத்தியது போலவே, புராணங்களும் ஆங்காங்குள்ள மக்களுக்குத் தெய்வபக்தியை ஊட்டித் தமிழ்ச்சுவை மூலமாகவும், தலக் கதைகள் மூலமாகவும் மக்களை நல்வழிப்படுத்தி வந்திருக்கின்றன. பெரிய புராணமும், கந்தபுராணமும், திருவிளையாடற் புராணமும் சிறந்த தமிழ் இலக்கியங்கள் என்பதை அனைவரும் ஒப்புக் கொள்வர். இவற்றால் தமிழ் மக்கள் வாழ்க்கையுப் பண்பாடும் வளம் பெற்றிருக்கின்றன" என்பர் அறிஞர் மு. அருணாசலம் அவர்கள்.[1]

## தமிழ் நூல்களைப் போற்றுதல்

தமிழ் மொழியில் இலக்கியங்களேயன்றி மெய்யறிவு நூல்களும், வான நூல்களும், மருத்துவ நூல்களும், இசை நூல்களும் மந்திர நூல்களும் இருந்தனவென்று அறியக் கிடக்கின்றது. இவையெல்லாம் தமிழரது கூரிய அறிவையும், ஊக்கத்தையும் காட்டுவன. இவ்வெல்லா வற்றிற்கும் காரணம் பண்டைத் தமிழர்கள் தம் தாய்மொழியையும், அதனை வளர்த்தற்குரிய புலவர் பெருமக்களையும் போற்றி வந்தமை யேயாம். இதனால், ஒரு நாடு முன்னேற்றம் அடைவதற்கு அம்மொழி யிலுள்ள நூல்களைப் போற்றுதல் இன்றியமையாததென்பது புலனாகும்.

நூல்கள், முன்முன் இருந்து சென்றோர்களது அறிவுத் திரள்களே யாதலின், அவை தம்மைப் பற்றினோரை அறிவுத்துறையில் முன்னிருந்தோர் அடைந்த ஓர் உயர்நிலையை எளிதில் அடையச் செய்து, அந்நிலையினின்றும் மேல் உயரச் செய்கின்றன. அதனால், அத்தகைய நூலைப் பற்றாதவர் தாம் உயர்தற்குரிய அடிப்படையை இழந்தவராவர். ஆகவே, யாவரொருவர் அல்லது யாதொரு நாட்டினர் தமது மொழியிலுள்ள நூல்களைப் போற்றாதொழிகின்றனரோ, அன்னார் முன்னேற்றமடைதலென்பது கூடாத தொன்றாம்.

பலதுறைப்பட்ட நூல்களிலும் இலக்கியமே சிறந்ததாகும். என்னையெனின், அவ்வெல்லாவகை நூல்களின் பொருள்களையும் ஆங்காங்கு மனத்திற்கு இன்பம் பயக்கக் கூறும் இயல்புடையது அதுவேயாகலின் அன்றியும், மக்களின் நாகரிக வாழ்க்கையைச் செப்பம் பெற உலக வழக்கில் வைத்துக் காட்டி, உள்ளத்தின்கண் இன்பமும் ஊக்கமும் பயந்து, மனச்செம்மை உண்டாக்கும் இயல்புடைமையானும் மாந்தர்க்கு இலக்கியமே பெரிதும் வேண்டற் பாலது. சுருங்கச்சொல்லின், மக்கள் விலங்குத் தன்மையினின்று நீங்கி மக்கட்குணம் வாய்ந்திருப்பது இலக்கியத்தின் பயனேயாம். அதனால், எந்நாட்டினரும் தமது இலக்கியங்களைக் கண்ணும் கருத்துமாக ஓம்புதல் வேண்டும் என்பர் அறிஞர்.[2]

1. தமிழ் இலக்கிய வரலாறு, 16ம் நூ. பக்.260.
2. சி. அருணை வடிவேல், காஞ்சிப்புராணம், முன்னுரை, பக். 10, 11.

### தமிழ்க்கல்வி

தமிழ்மொழி பக்தி மொழி. தமிழிலுள்ள இலக்கியங்களுள் பக்தி இலக்கியங்களே மிகுதி. பக்தி இலக்கியத்தின் இருகண்கள் சைவம், வைணவம் என்பன. இறையுணர்வையூட்டும் சமயப் பயிற்சியில் புராணம் என்னும் இலக்கியக் கல்வி இல்லையெனின் சமயப் பயிற்சியே இல்லை. பெரியபுராணமும் கந்த புராணமும் திருவிளையாடற்புராணமும் இன்றி சைவக்கல்வி இல்லை. பாகவதம், இராமாயணம், பாரதம் என்ற புராணக்கல்வி இன்றி வைணவக் கல்வி இல்லை. இப்புராண இலக்கியப் பயிற்சியைப் பெற்றோர் தலைசிறந்த தமிழ்க்கல்வி ஆசிரியர்களாகத் திகழ்ந்தனர். பத்தொன்பதாம் நூற்றாண்டு வரையில் தமிழ்க்கல்வி எனின் அது தலபுராணப் படிப்பு இன்றி அமையாது. ஒவ்வொரு ஆசிரியரும் தலபுராணம் சொல்லு வதையே தமிழ்க்கல்வியின் ஒரு பகுதியாகக் கொண்டிருந்தனர். எடுத்துக்காட்டாக, மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடம் பாடம் கேட்ட உ. வே. சாமிநாதையர் அவர்கள் வரலாற்றையே சுட்டலாம்.

டாக்டர் ஐயரவர்கள் 1871 இல் முதன்முதலாக மகாவித்து வானைச் சந்தித்தார். அதற்கு முன் அவர் அவருடைய நூல்களைப் பார்த்ததில்லை. ஐயரவர்களின் முதல் தமிழாசிரியராகிய சடகோப ஐயங்காரிடம் தாம் மகாவித்துவானிடம் பாடங்கேட்கப் போவதாகச் சொல்ல அவர் இல்லம் போனபோது அங்கே திருநாகைக்காரோணப் புராண நூலை முதன்முதலாகப் பார்க்கிறார். அதுவே அவர் கண்ட முதல் நூல். அதுவும் தலபுராண நூல். "இந்த நூலையும் இதுபோன்ற பல நூல்களையும் இயற்றிய மகாபுருஷரிடம் படிக்கப் போகிறோம் என்று எண்ணி எண்ணி நான் பெருமிதம் அடைந்தேன்"[1] என்று அவரே கூறுவர். பிறகு மகாவித்துவானிடம் பாடங்கேட்க நேரில் சென்றார்.

மகாவித்துவான் முதன்முதலில் ஐயரவர்களுக்குப் பாடஞ் சொல்லத் தொடங்கும்முன், திருநாகைக்காரோணப் புராணத்தை வருவித்து, அதிலுள்ள இரண்டு பாடல்களைப் படிக்கச் சொல்லி அதற்கு விளக்கமும் கூறினார். அவ்விரு செய்யுளும் பொருளும் வருமாறு:

"புன்மை சால்கிழங் ககழ்ந்திடும் போதெதிர் போதும்
அன்மை தீர்மணி சுரையிரும் பாலகற் றிடுவார்
வன்மை மேவிய தாயினு மாண்பறி யாரேல்
மென்மை மேவிழி பொருளினு மிழிந்ததாய் விடுமே".

(நாட்டுப்படலம், 38)

குறிஞ்சி நிலத்திலுள்ள வேடர்கள் காட்டில் தங்களுக்கு ஆகார மாக உதவுகின்ற கிழங்குகளைத் தோண்டி எடுக்கிறார்கள். அப்பொழுது பூமியில் புதைந்து கிடக்கும் மணிகள் வெளிவருகின்றன. அவற்றைக் கடப்பாறையினாலே ஒதுக்கிவிட்டு மேலும் தோண்டு

1. என் சரித்திரம், ப. 152.

கிறார்கள். அவர்களுக்குக் கிழங்கினிடம் உள்ள மதிப்பு மணியினிடம் இல்லை. உலகத்தில் எவ்வளவு சிறந்த பொருளாயினும் பிறும் அதன் பெருமையை அறியாதவரிடம் அகப்பட்டால் மிகவும் இழிந்த பொருளைப் போலாகிவிடும்.

குறிஞ்சிநில வருணனையோடு உலக இயல்பாகிய நீதி ஒன்றும் இச்செய்யுளில் அமைந்திருக்கக் காணலாம். அடுத்து ஒரு பாடலைப் படிக்கச் சொல்கிறார். அது:

"முறிவி ராயபைம பொழிலிற்செம் முழுமணி நோக்கிச்
செறிவ நீயெனக் குடாவடி வேறுகான் சென்று
பிறவி லாவிர வழலெனப் பிறங்கவுள் வெதும்பும்
அறவி லாரெங்குச் சாரினுஞ் சுகமடை யாரால்". (39)

தழைகள் விரவியுள்ள பசுமையான சோலையில் இருக்கும் சிவப் பாகிய மாணிக்கத்தைப் பார்த்த கரடியானது, அதனைத் தீயென்று எண்ணிப் பயந்து வேறு காட்டுக்குச்செல்ல, அங்கே இரவில் அக்காடு சோதிமரம் நிறைந்தமையால் நெருப்புப் போலப் பிரகாசிக்க அதைக் கண்டு, இந்த நெருப்பு தம்மை விடாது போல் இருக்கின்றதேயென்று எண்ணி மனத்துள்ளே துயரத்தையடையும்; அறிவில்லாதவர்கள் எங்கே போனாலும் சுகம் அடைய மாட்டார்கள் என்பது இப்பாடலின் பொருள் என ஆசிரியர் விளக்கினார்.

பிறகு சில இலக்கணம் தொடர்பான விளக்கங்களைக் கேட்டு விட்டு, அடுத்தநாளே முறைப்படி பாடம் சொல்ல ஒப்புக்கொண்டார் என்பர். "அவர்கள் வாயிலிருந்து இரண்டு செய்யுட்களுக்குப் பொருள் கேட்டு அப்படியே சொல்லிவிட்டோமென்ற ஒரு திருப்தியும், இன்றே பாடம் கேட்க ஆரம்பித்து விட்டோம் என்ற எண்ணமும் எனக்கு உண்டாயின"[1] என்று பெருமிதத்தோடு கூறுகிறார் டாக்டர் ஐயரவர்கள்.

இவ்வாறு, அக்காலத்தில் கல்வி கற்பிக்கத் தொடங்கும்முன் மாணாக்கரிடம் தலபுராணப் பாடலைக் கேட்டுப் படிக்கச் சொல்லி பொருள் கொள்ளச் செய்து தேர்வு செய்தது குறிப்பிடத்தக்கதாகும்.

பிறகு பட்டீச்சுரம் சென்றபோது ஆசிரியரிடம் இரண்டு முறை இப்புராணம் முழுவதையும் பாடங் கேட்டார் ஐயரவர்கள்.

"பிள்ளையவர்கள் இயற்றிய புராணங்களுள் சிறந்தது நாகைப் புராணமென்று அவருடைய மாணாக்கர்களும் பிறரும் சொல்லு வார்கள். அத்தகைய புராணத்தை நான் இரண்டு முறை பாடம் கேட்டதில் எனக்கு மிக்க திருப்தி உண்டாயிற்று. தமிழ்நூற் பரப்பை நன்கு உணராமல் இருந்த நான் அப்புராணத்திற் காணப்பட்ட விஷயங்களை அறியுந்தோறும் அளவற்ற இன்பத்தை அடைந்தேன். பிள்ளையவர்கள் புராணங்கள் எல்லாவற்றையும் ஒவ்வொன்றாகக் கேட்டுவிட வேண்டும் என்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று"[2] என்பார் டாக்டர் ஐயரவர்கள்.

1. என் சரித்திரம், ப. 169
2. என் சரித்திரம், ப. 247

## இதுவும் ஒரு சிறந்த படிப்பே

மகாவித்துவான் அவர்களிடம் பாடங்கேட்டபோது ஐயரவர்கள் அவருடன் பல இடங்களுக்கும் சென்று வந்தவர் 1873 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் திருச்சிராப்பள்ளிக்குச் சென்று வந்ததை அவர் கூறுவர். பட்டீச்சுரத்திலிருந்து நீடாமங்கலம் வரையில் ரயிலில் செல்லும் போது திருப்பெருந்துறைப் புராணத்தில் பெருந்துறைப் படலத்தில் முப்பது செய்யுட்களை ஆசிரியர் சொல்ல தாம் எழுதியதாக ஐயரவர்கள் குறிப்பர். மேலும்,

"திருச்சிராப்பள்ளிக்கு அருகிலுள்ள சிவத்தலங்களுக்கு நாங்கள் சென்று வந்தோம். பிரயாண காலத்தில் தல தரிசனம் செய்யும் போது அந்த அந்த தலத்து மூர்த்திகளின் பெருமைகளையும், தல வரலாறுகளையும் ஆசிரியர் மிகவும் விரிவாக எனக்குச் சொல்லுவார். அப்போது என் மனத்துக்கு மிக்க இன்பமாயிருக்கும். பல புத்தகங் களைப் படித்தும் பல பெரியோர்களைக் கேட்டும் தெரிந்துகொள்ள வேண்டிய அருமையான செய்திகளை ஆசிரியர் சொல்லுகையில் "இதுவும் ஒரு சிறந்த படிப்புத்தானே" என்று நான் எண்ணுவது உண்டு"[1] என்பர் ஐயரவர்கள்.

இவ்வாறு இவர் பாடங் கேட்டதன் பயனாகப் பிற்காலத்தில் சுவடிகளைப் பதிப்பிப்பதில் மிகச் சிறந்த இடம் பெற்றார் என்பதை அனைவரும் அறிவர். பல இலக்கியங்களையும் பதிப்பிப்பதற்கு இத்தகைய தமிழ்க் கல்வி இன்றியமையாதது என்பதையும் அவர் உணர்ந்திருந்தார். செய்யுள்களில் சிறந்த பாடம் தேர்ந்தெடுக்கவும் இத்தல வரலாற்று அறிவு மிகவும் தேவை என்பர்.

தலங்களைப் பற்றிய ஆராய்ச்சியில் ஐயர் அவர்களுக்கு மிகுந்த ஈடுபாடு இருந்தது. இதனால் யாராவது எந்தத் தலத்தைப் பற்றியாவது விவரம் அறிய விரும்பினால் அவரிடம் வந்து கேட்பார்கள் என்று கூறுவர் கி. வா. ஜா.

தேவாரப் பதிப்பில் மாயூரம் தேவாரத்தில், "அஞ்சொலான் உமை பங்கன்" என்று வருகிறது. அந்தத் தலத்து அம்பிகையின் திருநாமம் அபயாம்பிகை என்பது. அது தமிழில் அஞ்சலை என வழங்கும். அந்தப் பெயரைப் பல பெண்கள் வைத்துக் கொண்டிருப்பார்கள். இவற்றையெல்லாம் அறிந்திருந்த ஐயரவர்கள் தேவாரப்பதிகத்தின் சரியான பாடம் 'அஞ்சலாள் உமை பங்கன்' என்று தெரிந்து கொண்டார் என்பர்.[2] அஞ்சலை, அஞ்சலாள், அபயாம்பிகை மூன்றும் ஒரே பொருள் உடையன. இப்படிப் பல எடுத்துக்காட்டுக்களைக் கூறலாம்.

---

1. என் சரித்திரம், ப. 341.
2. என் ஆசிரியப்பிரான், ப. 29

"புராணங்களிலுள்ள செய்திகளின் உண்மையைக் குறித்து வேறுபட்ட அபிப்பிராயங்கள் சிலருக்கு இருப்பினும், செய்யுள் நடை முதலியவற்றின் அழகை அறிந்து மகிழ்வதற்கு அவை யாருக்கும் பயன்படும். அன்பர்களுக்கு பக்தியை மிகுவிக்கும்" என்பர் டாக்டர் ஐயாவர்கள்.[1]

## புராண இலக்கியப் பயிற்சி

தமிழ்நூல் கற்பவரிடையும் தமிழ் ஆராய்ச்சி அறிஞரிடையும் கடந்த ஒரு நூற்றாண்டாகப் புராண இலக்கிய பயிற்சியே இல்லை எனலாம். சங்க இலக்கியங்களே தமிழ் மொழியின் பொற்காலம் என்றும், சோழர்கால இலக்கியமே சிறப்புடையது என்றும், பக்தி இலக்கியமாகிய திருப்புகழின் காலமே பொற்காலம் என்றும் பலரும் கூறிவந்த நிலையில், இப்பொழுது நாட்டார் இலக்கியமே சிறந்தது முதன்மையானது என்றும், மொழியியலே முதலானது என்றும் பலர் அரிதின் ஆராய்ந்து வருகின்றனர்.

புராண காலம் என்ற ஒரு காலத்தில் தோன்றிய புராண இலக்கியங்களில் சமயம் கலந்த ஒரே காரணத்தினால் இவை யாவும் தேவையற்றவை என்று எண்ணிப் பலரும் காணாத இலக்கிய வகையாக மறைந்துள்ளன. புராண இலக்கியம் படிப்பது தாழ்வு என்ற எண்ணத்தால் புராண இலக்கியப் பயிற்சியும் குன்றிவிட்டது. இந்நிலையால் தமிழருக்கு ஏற்பட்ட இழப்பே மிகுதி.

புராண இலக்கியம் காலத்தால் பிற்பட்டதாயினும் இடைக்காலத் தமிழில் அளவால் ஒரு பெரும்பகுதியாகும். அளவாலும் பொருளாலும் மிக விரிந்தது. சிறந்த பலன் தருவது. இதைப் புறக்கணிக்கிற அல்லது தூற்றுகிற எந்த வரலாறும் முழுமையுடையதாகாது. இடைக்காலம் என்ற ஒரு பெருங்கால அளவின் (நானூறு ஆண்டுக்கால அளவின்) மக்கள் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் சிறப்புமிக்க இலக்கியத் துறையை நோக்காத வரலாற்றாராய்ச்சி ஆராய்ச்சியாகாது[2] என்னும் வரலாற்றறிஞர் கூற்றும் இவண் எண்ணத்தில் கொள்ளத்தக்கது.

இலக்கியம் என்பது ஓர் ஆசிரியன் மிக்க புலமை வாய்ந்தவனாய், தனக்கென்று ஓர் இடவரம்பு கோலிக்கொண்டு, அல்லது ஓர் அறைக்குள் புகுந்து கொண்டு, எழுதி வைக்கும் நூலன்று. ஏன் அவன் எழுத வேண்டும் என்பது முதல் கேள்வி. புலமையிருந்தால் எழுத வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. எழுதவும் முடியாது. புலவன் சமூகத்தின் இடையில் வாழ்கிறான். குடும்பத்தார் சூழ்ந்த இல்லற வாழ்க்கையில் இருக்கிறான். அல்லது மாணாக்கரும் மற்றையோரும் சூழ்ந்த துறவற வாழ்க்கையில் ஒழுகுகிறான். எப்படியிருந்தாலும் சமூகச் சூழ்நிலை அவனை ஓரளவு பாதிக்கின்றது. சமுதாயத்தின் போக்கு, அதன் உயர்ந்த நோக்கங்கள் அல்லது அதன் வீழ்ச்சி, அரசியல் நிலைமை, அதில் வரும் கொந்தளிப்புக்கள், கல்வியால் வரும் போட்டி, உயர்வு, தாழ்வு, செல்வம், அதனால் வரும் உயர்வு, தாழ்வு, வாழ்க்கையில் வரும் தோல்வி, வெற்றி, சொந்த இன்ப துன்பங்கள்,

1 ஆற்றூர்ப் புராணம் முகவுரை பக் v-vi.
2. மு அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 16 ஆம் நூ பக்.

அன்பருடைய போற்றுதல், வேண்டாதவருடைய தூற்றுதல் இத்தனையும் ஒருவருடைய உள்ளப்பண்பை,உருவாக்குகின்றன. இதில் விளைவதே கவிதை.

## சங்க காலம் முதல் தலபுராண காலம் வரை

சங்க காலத்தில் மக்கட் கூட்டம் குறைவு. சமுதாயம் என்ற கூட்டு உணர்வும் குறைவு. ஆதலால் பெரும் புலவர்களாய் இருந்தவர்களும் தாங்கள் பெற்ற உள்ளத்து உணர்வுகளைச் சிறுசிறு பாடல்களாக அந்தந்த நேரத்திற்குப் பாடினார்கள். சங்க இலக்கியம் என்று நாம் சொல்வதில் பெரும்பகுதி தனிப்பாடல்களே. கலித்தொகை, பரிபாடல் இரண்டும் மற்றவற்றை நோக்க, காலத்தால் சற்றுப் பிற்பட்டவை. சங்க காலத்தில் இருந்த நிலைமை சிறிது மாறுதல் அடைந்தபின் இவை பாடப்பெற்றமையால், இவை சிறிது மாறி, தொடர்ந்த பாடல்களாய் அமைந்திருக்கின்றன. இவற்றின் பின்வந்த நூல்கள், பதினெண் கீழ்க்கணக்கினுள் பெரும்பகுதி. நீதி நூல்களாய் அமைந்திருந்தன. சில தனி அகப்பொருள் நூல்களாயும் அமைந்தன. அக்காலத்தில் பெருகிவந்த சமுதாய நிலைக்கு ஏற்ப மக்களுக்குப் பொது நீதிகளை உணர்த்தி நல்வழிப்படுத்த வேண்டிய நிலை அப்போது இருந்தது. இதற்கு அடுத்த காலம் சைவத்திலும் வைணவத்திலும் அருட்பாசுரங்கள் தோன்றிய காலம். இடைக்காலத்தில் தமிழ் நாட்டில் இருந்த சைன ஆதிக்கத்தின் பிடிப்பு பாண்டிய அரசர்களது வெற்றியால் தளரவே ஒரு சமய எழுச்சி உண்டாயிற்று. அதன் விளைவே சைவசமய ஆசாரியர்களும் வைணவ ஆழ்வார்களும் பாடிய அருட்பாசுரங்கள். இவற்றால் நாடெங்கும் பெருங்கோயில்கள் தோன்றலாயின. வழிபாடுகள் பெருகலாயின. சமுதாய எழுச்சியினால் பெருங்காப்பியங்கள் தோன்றின. வழிபாட்டுணர்வினால் புராணங்கள் எழுந்தன. புராணங்கள் எழுந்த காலத்தைத் தொடர்ந்து தமிழ் நாட்டில் முகம்மதியர் படையெழுச்சியும் அதன்பின் ஆங்கிலேயர் ஆதிக்கமும் வந்தன. இக்காலங்களில் மக்கள் நிலை தடுமாறினார்கள். வாழ்க்கையின் அடிப்படையே ஆட்டங்கண்டது. ஒருபால் வாழ்வை நிலைநிறுத்த வேண்டுமென்ற நோக்கத்தோடு ஒவ்வொரு சிற்றூருக்கும், அதுவே இந்திரலோகம் சந்திரலோகம் என்று சொல்லிப் புராணங்கள் பாடப்பட்டன. ஊர்ப் பற்றினால் தோன்றிய இவை பொய் என்று சொல்லவியலாது. மற்றொருபால் கோவை, கலம்பகம், பிள்ளைத்தமிழ், அந்தாதி முதலான பிரபந்தங்கள் பெருகலாயின. எனவே, இக்காலக் கட்டங்களில் கல்வி கேள்வி உடையவர்களாய் வாழ்க்கையில் இன்பமோ துன்பமோ எழுச்சியோ வேதனையோ பெற்ற புலவர்கள் தங்களுக்கு ஏற்ற துறையில் நூல் புனையத் தலைப்பட்டனர் என்றும், இவ்விலக்கியங்களுள் நாம் ஏற்றத்தாழ்வுகளைப் பாராட்டலாகாது என்றும் கூறும் அறிஞர்[1] தம் கருத்துக்கள் சிந்திக்கத்தக்கன.

1. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 16 ம் நூ. பக். viii, ix

## ஆலயங்கள் தொழுவோம்-ஒருமைப்பாட்டை வளர்ப்போம்

இவ்வுலகில் வாழும் மக்களுடைய துன்ப நீக்கத்திற்கும் இன்பப் பேற்றுக்கும் இடமாயுள்ளவை ஆலயங்களே என்பது இந்திய நாட்டு மக்களின் முடிந்த முடிபாகும். முன்வினைத் தொடர்பால் தாங்கொணாத துயரமுற்றலைந்த மனிதன் பலரிடத்துஞ் சென்று அமைதி காணாது முடிவில் ஆலயத்தை யடைந்து இறைவனைச் சரணடைந்து தன் துயரச் சுமைகளை இறக்கி வைக்கின்றான். இதுபோன்றே நன்மைகளை யடைய விரும்பியவனும் ஆலயத்திற்குச் சென்று ஆண்டவனை வணங்கித் தான் விரும்பிய நலன்களைப் பெற்று மகிழ்கின்றான். இவ்விரண்டும் உலகில் கண்கூடாக நிகழ்ந்து வருவன.

இவ்வாறு தேவரும், முனிவரும், மக்களும், ஏனைய உயிரினமும் வழிபட எளிதில் வெளிப்பட்டுப் பேறு நல்கிய *மூர்த்திகள்* அமைந்த ஆலயமிருக்குமிடத்தைத் *தலம்* என்றும், அத்தலத்தின் உடல் மாசுடன் வினை மாசு கழுவும் மகிமை பெற்ற நீரினையுடைய குளம், ஆறு, சுனை, கூவல் முதலியவற்றைத் *தீர்த்தம்* என்றும் கூறுவர். தீர்த்தங்களில் மூழ்குவதால் தூய்மையும், தலவாசம் செய்வதால் புண்ணியமும், மூர்த்தியைக் கண்டு வணங்குவதால் அறிவு விளக்கமுமுண்டாகின்றன என்பர் ஆன்றோர்.

இமயம் முதல் குமரி வரையிலுமுள்ள நமது பழம்பெரும் பாரத நாடு இம்மூன்றையும் குறைவின்றிப் பெற்றுள்ளதால் புண்ணியநாடு எனப் பெயர் பெற்றது. மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பனவற்றின் பெருமை பொருந்திய பழமையாகிய வரலாற்றை அறிவிப்பனவே தலபுராணங்கள். இதன் காரணமாகவே தலபுராணங்கற்பது இன்றி யமையாததாயிற்று. தலபுராணம் படித்தவர்களே ஆலய வழிபாட்டில் மிகுந்த ஊக்கமுடையவராவார் ஆதலின் நம் முன்னோர் தலங்கள் தோறும் தலபுராணஞ் செய்து வைத்தனர்[1] என்பாரின் கூற்றும் இவண் ஒப்பு நோக்கத்தக்கது.

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கோர் வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே" எனத் தம் அனுபவத்தினைப் பாடுகின்றார் தாயுமானவர். நீர்வேட்கை கொண்டு அலைவோரின் நீர்வேட்கை தீரும். தட்டினால் கதவு திறக்கப் பெறும். அழுத குழந்தை பால் குடிக்கும். திருத்தல யாத்திரை என்பது நம் அறிவினை வளர்ப்பது. அன்பினை வளர்ப்பது. உலக அனுபவத்தினை உயர்த்துவது. உயர்ந்த கல்விமுறை இது. இமயம் முதல் குமரி வரை ஒன்றாய்க் கிடக்கும் இந்த ஒருமை மனப்பான்மை வளர்ந்தது இந்தப் புலம் பிரிந்துறையும் நலம்புரிச் செலவாலேயாம். உலக ஒருமை; உலகமேயான ஆண்டவன் ஒருமை அங்கெலாம் திரியும் நம் முன்னைத்தொருமை · இதன் பயனாக ஆன்மநேய ஒருமைப்பாடு-இவை வளரும். பூதவொடுக்கம் சீவ வொடுக்கம் தோன்ற உதிக்கும் சிவஞானம்.

ஒவ்வோர் ஊரும் திருவூரே. எங்கும் இருக்கும் ஆண்டவன் அங்கு இல்லாமற் போவானா? பசுவின் உடலம் முழுதும் நிறைந்த பால் மடியில் வெளிப்பட்டுத் தோன்றுவது போலக் குறித்த ஓர் கோயிலின் குறித்த

---

1. வே. ரா. தெய்வசிகாமணி, சென்னிமலைத் தலபுராணம், முன்னுரை, பக். 1

ஒருவனது உள்ளப்பாங்கிற்கேற்ப இறைவன் அருள் வெளிப்படுத் தோன்றும். ஆனால், நமக்கு ஒவ்வொரு கோயிலும் ஒவ்வோர் கலைஞரும் ஒவ்வோர் அடியாரும் வாழ்ந்துயர்ந்த திருநிலையமாகக் காட்சியளிக்கின்றது.

நம் கோயில் வழிபாடு, மக்கள் நலவாழ்வோடு பெரிதும் தொடர் புடையது. பொருள் பொதிந்தது. கோயில் கோபுரம் முதலாகக் கருவறை வரையில் மனித உடலும் உள்ளமும் தொடர்பு கொண்டே அமைக்கப் பெற்றவை. கோயில் கோபுரம் ஆன்மாக்களின் பரிணாம விளக்கமாகும். அதிற்காணும் உருக்களெல்லாம் உட்பொருளுடையன. கோயிற் கொடிமரம் யோக சக்தியின் விளக்கமாகும்; பசுவானது பாசமகன்று, பதிநிலையைப் பெறும் சாதன விளக்கமாகும். பலிபீடத்தில் ஆசையென்னும் மாசுகளைப் பலியாக்கி, அதன்முன் உள்ள பசு போல இறையையே நோக்கியிருக்கின்றோம். பசுவுக்கும் பதிக்கும் இடையே பாசத் திரையுள்ளதும், அது இறைவனை ஆராதிக்கும்போது விலகுவதும் புலப்படும். கருவறையே நம் நுண்ணிய உள்ளம். அதிற்சிவம் துலங்கும். சீவன் சிவமயமாவதே வழிபாட்டின் கருத்து. சரியையான ஒழுக்கத்தால் தூய்மையுற்று, கிரியையான வழிபாட்டால் அருள் கூடி, யோகமான தியானத்தால் ஒருமை கூடி, ஞானமான அறிவால் சிவமயமாகும். அன்பு பெருக அருள் பெருகும். உள்ளத்தில் திருவடி நடனம் காணும். கோபுரம் முதல் கருவறை வரை சென்று வழிபட்டுத் தெளிவுற்ற மனம், தலமரம் அருகே அமைதியுறும்போது பக்தி வைராக்கியத்தால் பழுத்து, பாசவினை நீங்கி எங்கும் சிவமயமாகிப் பேரின்ப வெள்ளம் பெருகக் காணும். இந்நிலையில் நம் உள்ளே கோயில் காணலாம். உள்ளத்தின் உள்ளேயுள்ள கருவறைக் கடவுளை உணரலாம். புறச்சாதனம் அகச் சாதனமாகி, வழிபாடே யோகமாகி, யோகமே ஞானமாகி, ஞானமே மோனமாகி எங்கும் அமைதி சேரும். இதைத் தெளிவுறுத்துவனவே தலபுராணங்கள். இவற்றைப் போற்றி உணரின் நாடு நலம் பெறும். நாமும் நலம் பெறுவோம்.



பின்னிணைப்பு 1

# தமிழில் தலபுராணங்கள் - செய்யுள் 'ல் வரிசை

| வ எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/ படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | அச்சிறுபாக்கத் தலபுராணம் | தொ. நா | – | – | – | – | – |
| 2 | அப்பிரமேயத் தலபுராணம் (கொற்றனூர்) | கொ. நா. | இளையான் கவிராயர் | 19 நூ. | 10 | 496 | 1891 |
| 3 | அம்பர்ப் புராணம் | சோ. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | 15 | 1007 | 1965 |
| 4 | அம்மைத் தலபுராணம் | பா. நா | அதிகரமையர் | 20 நூ. | 20 | 1221 | 1912 |
| 5 | அயன்புரத் தலபுராணம் | தொ. நா. | தணிகைவேள் பாரதியார் | 20 நூ. | 8 | 421 | அ. வி. |
| 6 | அரிமழுத் தலபுராணம் | பா. நா. | கந்தசாமிக்கவிராயர். மு. ரா. | 19. நூ | – | – | 1908 |
| 7 | அருணகிரிப் புராணம் | நடு நா. | புராணத் திருமலைநாதர் | 15 நூ. | – | – | ஓ. வி. |
| 8 | அருணகிரிப் புராணம் | நடு. நா. | மறைஞான சம்பந்தர் | 16 நூ. | 8 | 613 | விக்கிரம |
| 9 | அருணாசல புராணம் | நடு. நா. | சைவ எல்லப்ப நாவலர் | 16 நூ. | 12 | 586 | 1855 |
| 10 | அவிநாசிப் புராணம் | கொ. நா. | இளையான் கவிராயர் | 19 நூ. | 13 | 1020 | 1875 |
| 11 | அன்னியூர்த் தலபுராணம் | கொ. நா. | கந்தசாமி சுவாமிகள் | 19 நூ. | 10 | 339 | 1937 |
| 12 | ஆதி கைலாய மான்மியம் என்னும் திருப்பெருந்துறைப் புராணம் | பா. நா. | சுந்தரலிங்க முனிவர் | 17 நூ. | 59 | 2080 | 1976 |
| 13 | ஆதித்த புராணம் (பாடலிவனம்) | சோ. நா | – | – | – | – | – |
| 14 | ஆதிபுரத் தலபுராணம் (எயினனூர், சந்தானபுரி) | நடு. நா. | சுப்பராய செட்டியார். த. க. | 19 நூ. | 9 | 385 | 1896 |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 15 | ஆப்பனூர்ப் புராணம் | பா. நா. | கந்தசாமிப் புலவர் | 17 நூ. | 12 | 515 | 1877 |
| 16 | ஆவூர்ப் பசுபதிச்சரத் தலபுராணம் | சோ. நா. | — | — | — | — | — |
| 17 | ஆற்றூர்ப் புராணம் | சோ. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | 17 | 525 | 1935 |
| 18 | இடும்பாவனப் புராணம் | சோ. நா. | நாராயணசாமி ஐயர் | 19 நூ. | — | — | — |
| 19 | இந்திரகீலபுரப் பெயர்த் திருக்கழிப்பாலைப்புராணம் | சோ. நா. | சிவப்பிரகாச பண்டிதர் | 19 நூ. | 9 | 276 | 1912 |
| 20 | இமாலய புராணம் | வட நா. | சொக்கலிங்கம் பிள்ளை | 20 நூ. | — | — | 1917 |
| 21 | இரத்தினபுரிப் புராணம் | — | தீர்த்தகிரித் தேசிகர் | — | 11 | 377 | — |
| 22 | இராசமன்னார்கோயிற் புராணம் | சோ. நா. | கோவிந்த பிள்ளை | 19 நூ. | — | — | — |
| 23 | இரிசிவிந்த புராணம் | தொ. நா. | — | — | 12 | 632 | — |
| 24 | இலக்குமிபுரத் தலபுராணம் (திருப்பாச்சேற்றி) | சோ. நா. | சுப்பிரமணிய ஐயர் | 19 நூ. | 14 | — | 1887 |
| 25 | இலுப்பைக்குடிப் புராணம் | — | சுப்பிரமணிய ஐயர் | 19 நூ | — | — | — |
| 26 | இளசைப் புராணம் (இளையாற்றக்குடி) | பா. நா. | கணேச பண்டிதர் | 18 நூ. | 15 | — | 1895 |
| 27 | இறைசைப் புராணம் (எலவானாசூர்) | தொ. நா. | திருமலைநயினார் சந்திரசேகரர் | 16 நூ. | 8 | 376 | — |
| 28 | உடையார்பாளையத் தலபுராணம் | சோ. நா. | கனகசபைக் கவிராயர் | 19 நூ. | — | — | — |
| 29 | உத்தமசோழபுரம் கரபுரநாதர் புராணம் | கொ. நா. | — | — | 13 | 520 | 1910 |
| 30 | உப்பூர்ப் புராணம் | சோ. நா. | சுப்பிரமணிய ஐயர் | 19 நூ. | — | — | — |
| 31 | உறையூர்ப் புராணம் (மூக்கீச்சுரம்) | சோ. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | 15 | 1417 | 1881 |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/ படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 33 | உறையூர்ப் புராணம் (பழையது) | சோ. நா. | – | – | – | – | – |
| 33 | ஒழுகோயிற் புராணம் (திருப்புத்தூர்) | பா. நா. | மறைஞானசம்பந்தர் | 15 நூ. | – | – | இ. வி. |
| 34 | கங்கைகொண்ட சோழேசுவரப் புராணம் | சோ. நா. | கனகசபைக் கவிராயர் | 19 நூ. | – | – | – |
| 35 | கடம்பநாத புராணம் (திருக்கடம்பந்துறை) | சோ. நா. | துறைசை ஈசான தேசிகர் | – | 17 | 639 | – |
| 36 | கடம்பவனப் புராணம் (மதுரை) | பா. நா. | வீமநாத பண்டிதர் | – | 11 | 1090 | 1880 |
| 37 | கண்டதேவிப் புராணம் (சிறுமருதூர்) | பா. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | 19 | 884 | – |
| 38 | கணவாய்ப்பாளையம் தலபுராணம் | கொ. நா. | – | – | – | – | இ. வி. |
| 39 | கதிர்காமப் புராணம் | ஈழ நா. | நாகலிங்கம் பிள்ளை | 19 நூ. | 18 | 342 | 1932 |
| 40 | கபிலகிரி புராணம் | தொ. நா. | முத்துவீரக்கவிஞர் | 17 நூ. | – | – | அ. வி. |
| 41 | கமலாலயச் சிறப்பு என்னும் திருவாரூர்ப்புராணம் (ஆதி கமலாலய மகாத்மியம்) | சோ. நா. | மறைஞான சம்பந்தர் | 16 நூ. | 34 | 1066 | 1961 |
| 43 | கமலாலய புராணம் | சோ. நா. | – | – | 10 | – | – |
| 43 | கயா மகாத்மியம் | வட நா. | செல்லமையங்கார் | 19 நூ. | – | – | – |
| 44 | கரிவலம்வந்தநல்லூரர்ப் புராணம் | பா. நா. | திருமலைவேற் கவிராயர் | – | – | – | – |
| 45 | கருவூர்ப் புராணம் | கொ. நா. | – | 16 நூ. | 31 | 1131 | 1889 |
| 46 | கரையேறவிட்ட நகர்ப் புராணம் | நடு நா. | சிவசிதம்பர முதலியார் | 19 நூ. | – | – | – |
| 47 | கலித்துறை காஞ்சிப் புராணம் | தொ. நா | சிதம்பர தேசிகர் | – | – | – | – |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 48 | களத்தூர்ப் புராணம் | தொ. நா. | சரவணப்பெருமாள் ஐயர் | 19 நூ. | – | – | – |
| 49 | களப்பாள் என்னும் தேவதாருவனப் புராணம் | சோ. நா. | நாராயணசாமி ஐயர் | 19 நூ. | 10 | 450 | 1905 |
| 50 | கன்னியாகுமரித் தலபுராணம் | பா. நா. | சங்கர நாவலர் | – | 18 | 856 | – |
| 51 | கன்னிவன புராணம் | நடு நா. | வீரைப்பரசமய கோளரி மாமுனிவர் | 12 நூ. | – | – | கி. வி. |
| 52 | காங்கேயநல்லூர்ப் புராணம் | தொ. நா. | கிருபானந்த வாரியார் | 20 நூ. | – | – | அ. வி. |
| 53 | காசி காண்டம் | வட நா. | அதிவீரராம பாண்டியன் | 16 நூ. | 100 | 2526 | 1865 |
| 54 | காஞ்சிப் புராணம் (கம்பர் புராணம்) | தொ. நா. | ஆளவந்தார் ஆதீனக் கச்சாலைத் தேசிகர் | – | 12 | 1273 | 1983 |
| 55 | காஞ்சிப் புராணம் (முதற் காண்டம்) | தொ. நா. | சிவஞான முனிவர் | 18 நூ. | 65 | 2743 | 1891 |
| 56 | காஞ்சிப் புராணம் (இரண்டாம் காண்டம்) | தொ. நா. | கச்சியப்ப முனிவர் | 18 நூ. | 7 | 2113 | 1953 |
| 57 | காமக்கோட்ட புராணம் | தொ. நா. | நாகலிங்க முனிவர் | 18 நூ. | – | – | கி. வி. |
| 58 | காமக்கோட்ட புராணம் (காமக்கூர்) | தொ. நா. | சுந்தர முதலியார் | 19 நூ. | – | 1339 | 1939 |
| 59 | காமநகர்ப் புராணம் | தொ. நா. | சிவஞானம் | 19 நூ. | – | – | – |
| 60 | காரமடை தலபுராணம் | கொ. நா. | கந்தசாமி சுவாமிகள் | 19 நூ. | – | – | – |
| 61 | காரமடைப் புராணம் | கொ. நா. | இராமானுஜ நாவலர் | 20 நூ. | – | – | – |
| 62 | காவேரி புராணம் (பிரம கைவர்த்த புராணம்) | சோ. நா. | திருச்சிற்றம்பல முனிவர் | 19 நூ. | 36 | 1474 | – |
| 63 | காளத்திப் புராணம் | தொ. நா. | ஆனந்தக் கூத்தர் | 16 நூ. | 33 | 1736 | 1912 |
| 64 | காளையார் கோயிற் புராணம் | பா. நா | சுப்பிரமணிய ஐயர் | 19. நூ. | 33 | 1207 | 1899 |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/ படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 65 | கானப்பேரூர்ப் புராணம் | பா. நா. | அகோர தேவர் | 17 நூ. | 17 | 650 | 1960 |
| 66 | கானப்பேரூர்ப் புராணம் | பா. நா. | – | – | – | – | அ. வி. |
| 67 | கீழ்வேளூர்த் தலபுராணம் | சோ. நா. | – | – | 45 | – | – |
| 68 | குடவாயில் தலபுராணம் | சோ. நா. | – | – | – | – | – |
| 69 | குடியேற்றநல்லூர்ப் புராணம் | தொ. நா. | குமாரசாமி பண்டிதர் | 19 நூ. | – | 614 | 1915 |
| 70 | குணசீலப் புராணம் | சோ. நா. | நரசிம்ம பாரதி | 20 நூ. | 10 | 558 | 1907 |
| 71 | கும்பகோணத் தலபுராணம் | சோ. நா. | – | – | – | 1406 | அ. வி. |
| 72 | கும்பகோணப் புராணம் | சோ. நா. | அகோர தேவர் | 17 நூ. | 13 | 1118 | அ. வி. |
| 73 | கும்பகோணப் புராணம் | சோ. நா. | ஒப்பிலாமணிப் புலவர் | 18 நூ. | – | – | – |
| 74 | கும்பகோணப் புராணம் (திருக்குடந்தைப் புராணம்) | சோ. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | 70 | 2384 | இ. வி. |
| 75 | குரக்குத்தளிப் புராணம் (சர்க்கார் பெரிய பாளையம்) | கொ. நா. | – | – | – | – | அ. வி. |
| 76 | குரங்கணில்முட்டப் புராணம் | தொ. நா | – | – | – | – | அ. வி. |
| 77 | குழூர்ப் புராணம் | – | கனகசபைக் கவிராயர் | – | – | – | – |
| 78 | குளத்தூர்ப் புராணம் | தொ. நா | – | – | 16 | 1083 | – |
| 79 | குறுக்கைப் புராணம் | சோ. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | 21 | 736 | 1911 |
| 80 | கூடற் புராணம் (மதுரை) | பா. நா. | – | 16 நூ. | 4 காண்ட | 758 | 1929 |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/ படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 81 | கூவலப்புரம் அன்னதான மகத்துவ புராணம் | பா. நா. | பெரிய சுப்பா ரெட்டியார் | 19 நூ. | 30 | 1003 | 1900 |
| 82 | கொட்டையூர்ப் புராணம் | சோ. நா. | சிவக்கொழுந்து தேசிகர் | 18 நூ. | – | – | – |
| 83 | கொடுங்குன்றப் புராணம் (பிரான்மலை) | பா. நா. | மங்கைபாகக் கவிராயர் | 19 நூ. | 18 | – | – |
| 84 | கொரட்டைத்தல மான்மியம் (திருப்பத்தூர்) | தொ. நா. | குருசாமி முதலியார் | 19 நூ. | – | – | 1910 |
| 85 | கோட்டாற்றுப் புராணம் | சோ. நா. | அப்துல் காதிறு நாவலர் | 19 நூ. | – | – | – |
| 86 | கோயிலூர்ப் புராணம் | பா. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | 14 | 849 | – |
| 87 | கோயிற்பட்டிப் புராணம் | பா. நா. | சிவஞான யோகிகள் | 19 நூ. | 18 | – | – |
| 88 | கோயிற்பாளையம் என வழங்கும் கௌசைப் புராணம் | கொ. நா. | கந்தசாமி சுவாமிகள் | 19 நூ. | 5 | 193 | 1937 |
| 89 | கோயிற் புராணம் (சிதம்பரம்) | சோ. நா. | உமாபதி சிவாசாரியர் | 14 நூ. | 5 | 415 | 1867 |
| 90 | கோலாசல தலபுராணம் (செஞ்சி) | தொ. நா. | – | – | 33 | 675 | 1956 |
| 91 | சங்கரநாராயணசுவாமிகோவிற் புராணம் | பா. நா. | சீவலமாற பாண்டியன் | 16 நூ. | 14 | 509 | 1886 |
| 92 | சாட்சிலிங்கத் தலபுராணம் | – | – | – | – | – | – |
| 93 | சாயாவனத் தலபுராணம் | சோ. நா. | கவிராச நாயகம் பிள்ளை | 20 நூ. | 10 | 433 | 1909 |
| 94 | சிக்கல் மகாத்மியம் | சோ. நா. | – | – | – | – | – |
| 95 | சித்தாய்மூர்ப் புராணம் (திருச்சிற்றேமம்) | சோ. நா. | – | – | – | – | – |
| 96 | சிதம்பர சபாநாத புராணம் | சோ. நா. | சபாபதி நாவலர் | 19 நூ. | 14 | 898 | 1885 |
| 97 | சிதம்பர புராணம் | சோ. நா. | புராணத்திருமலை நாதர் | 16 நூ. | 10 | 813 | 1874 |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/ படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 98 | சிந்தாமணித் தலபுராணம் (திருவொற்றியூர் வடக்கு) | தொ. நா. | கல்யாணசுந்தர முதலியார் | 19 நூ. | 6 | – | 1910 |
| 99 | சிருங்கபுரம் என்னும் கோட்டூர்ப் புராணம் | சோ. நா. | சுப்பிரமணிய ஐயர் | 19 நூ. | 13 | – | 1898 |
| 100 | சிவக்கொழுந்தீசுவரர் தலபுராணம் | – | – | – | – | – | – |
| 101 | சிவகாசித் தலபுராணம் | பா. நா. | அருணாசலக் கவிராயர் | 19 நூ. | 14 | 1039 | – |
| 102 | சிவகிரி புராணம் (தலையநல்லூர்) | கொ. நா. | நஞ்சையப்புலவர் | – | – | – | – |
| 103 | சிவசயிலத் தலபுராணம் | சோ. நா. | வீரப்ப முதலியார் | 19 நூ. | 11 | 637 | 1910 |
| 104 | சிவபுரிப் புராணம் (நெல்வாயில்) | சோ. நா. | சுப்பையசாமி | 20 நூ. | – | – | – |
| 105 | சிவன்மலைப் புராணம் (காங்கேயம் அருகே) | கொ. நா. | அம்பலவாணக் கவிராயர் | 19 நூ. | 14 | 497 | – |
| 106 | சீகாழித் தலபுராணம் | சோ. நா. | அருணாசலக் கவிராயர்.மு. ரா. | 16 நூ. | 17 | – | – |
| 107 | சீகாளத்திப் புராணம் | தொ. நா. | சிவப்பிரகாசர், வேலையர், கருணைச்சிவப்பிரகாசர் | 17 நூ. | 9 | 1031 | 1861 |
| 108 | சுசீந்திரத் தலபுராணம் | பா. நா. | முத்தமிழ்க் கவிராயர் | 19 நூ. | 20 | 753 | 1893 |
| 109 | சுதர்சனகிரிப் புராணம் | – | இராமானுச நாவலர் | 19 நூ. | 33 | 1068 | 1892 |
| 110 | சுந்தரபாண்டியம் என்னும் மதுரை மான்மியம் | பா. நா. | அனதாரியப்பன் | 16 நூ. | 54 | 2015 | 1955 |
| 111 | சுவாமிமலைப் புராணம் | சோ. நா. | வீரசைவம் சுப்பையன் | 19 நூ. | 8 | 365 | – |
| 112 | துலை மாநகர்ப் புராணம் | பா. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | 10 | 539 | 1886 |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 113 | சீரங்கத் தலபுராணம் | சோ. நா. | — | — | — | — | — |
| 114 | சக்கரபள்ளித் தலபுராணம் (ஜயம்பேட்டை) | சோ. நா. | — | — | — | — | — |
| 115 | செப்பேசப் புராணம் (பஞ்சநதிப் புராணம்-திருவையாறு) | சோ. நா. | ஞானக்கூத்தர் | 16 நூ. | 12 | 437 | 1930 |
| 116 | செல்வக் கந்தநாதர் தலபுராணம் (சென்னை) | தொ. நா. | கிருட்டிணப்ப செட்டியார் | 19 நூ. | — | — | 1910 |
| 117 | செவ்வந்திப் புராணம் (திருச்சிராப்பள்ளி) | சோ. நா. | சைவ எல்லப்ப நாவலர் | 16 நூ. | 14 | 550 | 1851 |
| 118 | சென்னிமலைத் தலபுராணம் | கொ. நா | சரவண முனிவர் | 12 நூ. | 6 | 207 | 1967 |
| 119 | சென்னிமலைத் தலபுராணம் | கொ. நா | — | — | — | — | — |
| 120 | சேது புராணம் (இராமேசுவரம்) | பா. நா. | நிரம்பவழகிய தேசிகர் | 16 நூ. | 45 | 3438 | ஏவிளம்பி |
| 121 | சேலம் தலபுராணம் | கொ. நா. | சொக்கலிங்கப் புலவர் | 19 நூ. | 12 | 672 | 1892 |
| 122 | சேவூர்ப் புராணம் | கொ. நா. | சிவஞான தேசிகர் | 19 நூ. | — | — | — |
| 123 | சேற்றூர்ப் புராணம் என்னும் சேறைத் தலபுராணம் | பா. நா. | பொன்னாயிரங் கவிராய மூர்த்திகள் | 17 நூ. | 30 | 1103 | — |
| 124 | சொக்கநாதர்மலைப் புராணம் | கொ. நா. | அரங்கநாதனார் | 20 நூ. | — | — | — |
| 125 | சோழபுரப் புராணம் | நடு. நா. | சொக்கலிங்கஞ் செட்டியார் | 20 நூ. | — | 635 | — |
| 126 | தஞ்சைப் புராணம் | சோ. நா. | ஆதியப்பனார் | 18 நூ. | — | — | — |
| 127 | தட்சிண கைலாச புராணம் (திரிகோணமலை) | ஈழ நா. | செகராச்சேகரன் | 17 நூ. | 7 | 632 | 1887 |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 138 | தட்சிண கைலாச புராணம் (கோணாசல புராணம்) (திரிகோணமலை) | ஈழ நா. | பண்டிதராசர் | 18 நூ. | 33 | 935 | 1916 |
| 139 | தணிகாசல புராணம் | தொ. நா. | கந்தப்பையர் | 18 நூ. | 14 | 426 | 1939 |
| 130 | தணிகைப் புராணம் | தொ. நா. | கச்சியப்ப முனிவர் | 18 நூ. | 19 | 3161 | 1876 |
| 131 | தந்திவனப் புராணம் (திருவானைக்காவல்) | சோ. நா. | கமலை ஞானப்பிரகாசர் | 16 நூ. | 14 | 570 | 1981 |
| 132 | தருமபுரத் தலபுராணம் | சோ. நா. | சங்கரகுமார முனிவர் | – | – | – | – |
| 133 | தலைச்சங்காட்டுப் புராணம் (தலைகை) | சோ. நா. | சைவ எல்லப்ப நாவலர் | 16 நூ. | – | – | – |
| 134 | தனியூர்ப் புராணம் (மாயூரம் மேற்கு) | சோ. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 18 நூ. | 8 | 202 | 1868 |
| 135 | தாடாளன்கோயிற் புராணம் (சீகாழி ராமவிண்ணகரம்) | சோ. நா. | – | – | – | – | – |
| 136 | தாராபுரத்தலபுராணம் | கொ. நா | வேலாயுத பண்டிதர் | 20 நூ. | 10 | 743 | 1906 |
| 137 | தாருகாபுரத் தலபுராணம் | பா. நா. | பிச்சைய நாவலர் | 19 நூ. | 19 | 836 | – |
| 138 | தியாகராசலீலை (திருவாரூர்) | சோ. நா. | மீனாட்சி சுந்தரம் பிள்ளை | 19 நூ. | 17 | 699 | 1905 |
| 139 | திரிகோணசர புராணம் (திரிகோணமலை) | ஈழ நா. | மாசிலாமணி முத்துக்குமரன் | 19 நூ. | – | 1490 | 1909 |
| 140 | திரிசூலகிரிப் புராணம் | தொ. நா. | திரிகூடராசப்பக்கவிராயர் | – | 19 | – | 1890 |
| 141 | திரிபுவனப் புராணம் | சோ. நா | சுருமுத்துப் பிள்ளை | 19 நூ. | 16 | 800 | – |
| 142 | திரிமூர்த்திமலைப் புராணம் | கொ. நா | வேலாயுத பண்டிதர் | 30 நூ. | 18 | 963 | 1910 |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 143 | திருஅரசிலிக் காதை (ஒழுந்தியாப்பட்டு) | தொ. நா. | அடிகளாசிரியர் | 20 நூ. | 7 | 392 | 1948 |
| 144 | திருக்கச்சூர் ஆலக்கோயில் புராணம் | தொ. நா. | வேலுச்சாமிப் பிள்ளை | 19 நூ. | – | 608 | – |
| 145 | திருக்கடகப் புராணம் | சோ. நா. | கனகசபாபதி ஐயர் | 19 நூ | 13 | – | 1900 |
| 146 | திருக்கடந்தைப் புராணம் (பெண்ணாகடம்) | நடு நா. | சிவஞானபரன் பிள்ளை | – | – | – | 1900 |
| 147 | திருக்கடவூர்ப் புராணம் | சோ. நா. | சுப்பிரமணிய கவிராச மூர்த்திகள் | 19 நூ | – | – | – |
| 148 | திருக்கடவூர்ப் புராணம் | சோ. நா. | பாலகிருட்டிண தீட்சதர் | 19 நூ | 29 | – | 1905 |
| 149 | திருக்கடுவாய்க்கரைப்புத்தூர்ப் புராணம் (ஆண்டார் கோயில்) | சோ. நா | – | – | – | – | அ. வி. |
| 150 | திருக்கண்ணபுரப் புராணம் | சோ. நா. | நாராயணசாமி நாயக்கர் | 19 நூ. | 20 | 1030 | 1868 |
| 151 | திருக்காசைப் புராணம் | ஈழ நா. | – | – | – | – | 1890 |
| 152 | திருக்கருகாவூர்த் தலபுராணம் (திருக்களாவூர்) | சோ. நா. | – | – | – | – | – |
| 153 | திருக்கருப்பறியலூர்த் தலபுராணம் (ஆதித்தபுரிப் புராணம்) | சோ. நா. | அம்பலவாணர் | – | – | – | – |
| 154 | திருக்கருவைத் தலபுராணம் | பா. நா. | வீரப்ப முதலியார், திருமலைவேற் கவிராயர் | 19 நூ. | 40 | 1345 | 1919 |
| 155 | திருக்கலசைப்புராணம் (தொட்டிக்கலை) | தொ. நா. | – | – | 4 | 170 | 1896 |
| 156 | திருக்கழுக்குன்றப் புராணம் | தொ. நா. | வீரராகவ முதலியார் | 18 நூ. | 22 | 833 | – |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/ படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 157 | திருக்களந்தைப் புராணம் | பா. நா. | கைலாசநாத தேசிகர் | 19 நூ. | 12 | 549 | 1925 |
| 158 | திருக்களர்ப் புராணம் | சோ. நா. | ஆதியப்பனார் | 18 நூ. | 6 | – | 1902 |
| 159 | திருக்களப்பூர்ப் புராணம் | – | கனகசபைக் கவிராயர் | 19 நூ. | – | – | – |
| 160 | திருக்காறாயிற் புராணம் (திருக்காறைவாசல்) | சோ. நா. | – | – | – | – | – |
| 161 | திருக்குமுளமென்னும் தென்திருப்பதி புராணம் | சோ. நா. | விருப்பாட்சிலிங்கையர் | – | 14 | 738 | 1890 |
| 162 | திருக்குருகை மான்மியம் (ஆழ்வார் திருநகரி) | பா. நா. | திருக்குருகைப் பெருமாள் கவிராயர் | 16 நூ. | 30 | 3030 | 1938 |
| 163 | திருக்குற்றாலப் புராணம் | பா. நா. | காசிநாடன் | 16 நூ. | – | – | – |
| 164 | திருக்குற்றாலத் தலபுராணம் | பா. நா. | திரிகூடராசப்பக் கவிராயர் | 17 நூ. | 32 | 2072 | 1910 |
| 165 | திருக்கூடலையாற்றூர்ப் புராணம் | நடு நா. | சந்திரசேகர நாயகர் | 19 நூ. | 12 | 562 | 1934 |
| 166 | திருக்கூவப் புராணம் (திருவிற்கோலம்) | தொ. நா. | சிவப்பிரகாச சுவாமிகள் | 12 நூ. | 7 | 703 | 1884 |
| 167 | திருக்கேதீச்சுர புராணம் | ஈழ. நா. | வைத்தீசுவர குருக்கள் | 20 நூ. | – | 204 | 1970 |
| 168 | திருக்கொள்ளம்பூதூர்ப் புராணம் | சோ. நா. | ஆதியப்பனார் | 18 நூ. | – | – | – |
| 169 | திருக்கொள்ளிக்காட்டுத் தலபுராணம் | சோ. நா. | – | – | – | – | அ. வி. |
| 170 | திருக்கோட்டூர்ப் புராணம் | சோ. நா. | நாராயணசாமி ஐயர் | 19 நூ. | – | – | – |
| 171 | திருக்கோவலூர்ப் புராணம் (தெய்வீகப் புராணம்) | நடு நா. | சௌந்தரராச உடையார் | 19 நூ. | 26 | 1725 | 1901 |
| 172 | திருக்கோவலூர் வீரட்டேசுவரர் புராணம் | நடு நா. | – | – | 17 | 550 | – |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 173 | திருக்கோளக்குடித் தலபுராணம் | பா. நா. | வேலாயுத ஞானசம்பந்தமூர்த்தி | — | 24 | 666 | அ. வி. |
| 174 | திருச்சத்திமுற்றம் தலபுராணம் | சோ. நா. | — | — | — | — | — |
| 175 | திருச்சித்திரகூடப் புராணம் (சிதம்பரம்) | சோ. நா. | இராமானுச நாவலர் | 19 நூ. | 61 | 2030 | 1891 |
| 176 | திருச்சுழியற் புராணம் | பா. நா. | ஆராவமுதாசாரியர், அம்பலவாண நாவலர் | 19 நூ. | 15 | 744 | 1903 |
| 177 | திருச்செங்காட்டங்குடிப் புராணம் | சோ. நா. | சைவ எல்லப்ப நாவலர் | 16 நூ. | 11 | 393 | அ. வி. |
| 178 | திருச்செங்கோட்டுப் புராணம் | கொ. நா. | கவிராச பண்டிதர் | 19 நூ. | 45 | 1223 | 1877 |
| 179 | திருச்செந்தூர்ப் புராணம் | பா. நா. | வென்றிமாலைக் கவிராயர் | 17 நூ. | 28 | 899 | 1868 |
| 180 | திருச்சோற்றுத்துறைப் புராணம் | சோ. நா. | அம்பலவாணர் | — | 15 | 448 | 1960 |
| 181 | திருத்தலையூர்ப் புராணம் | சோ. நா. | சீநிவாசபாரதி | 19 நூ. | — | 409 | — |
| 182 | திருத்தவத்துறைப் புராணம் (லால்குடி) | சோ. நா. | குமாரசாமி முதலியார் | 20 நூ. | 18 | 768 | அ. வி. |
| 183 | திருத்திண்ணபுரச் சுந்தரேசர் புராணம் என்னும் ஈழத்துச் சிதம்பர புராணம் | ஈழ நா. | இளமுருகனார் | 20 நூ. | 11 | 806 | 1972 |
| 184 | திருத்திலதைப்பதிப் புராணம் | சோ. நா. | நாகலிங்கம் பிள்ளை | — | 10 | 486 | — |
| 185 | திருத்தினைநகர்ப் புராணம் | நடு நா. | குமாரமலை மருந்தன் | — | 16 | 853 | — |
| 186 | திருத்துடிசைப் புராணம் (துடியலூர்) | கொ. நா. | — | 13 நூ. | 15 | 516 | 1913 |
| 187 | திருத்துருத்திப் புராணம் (குத்தாலம்–தஞ்சை) | சோ. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | 40 | 1627 | 1933 |
| 188 | திருத்தென்கோயிற் புராணம் | — | சிவசுப்பிரமணிய சிவாசாரியர் | 20 நூ. | — | — | — |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/ படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 189 | திருத்தேங்கூர்ப் புராணம் | சோ. நா. | – | – | 6 | 201 | ஆனந்த |
| 190 | திருநல்லூர்ப் புராணம் | சோ. நா. | வைத்தியநாத தேசிகர் | 17 நூ. | 27 | 1014 | 1908 |
| 191 | திருநல்லூர்ப்பெருமணப் புராணம் (ஆச்சாள்புரம்) | சோ. நா. | சிவக்கொழுந்து தேசிகர் | 18 நூ. | 12 | 533 | – |
| 192 | திருநள்ளாற்றுப் புராணம் | சோ. நா. | சுப்பிரமணியக் கவிராச மூர்த்திகள் | 19 நூ. | 9 | 307 | 1925 |
| 193 | திருநாகேச்சுரப் புராணம் | சோ. நா. | சிங்காரவேற்பிள்ளை | 19 நூ. | 43 | – | 1929 |
| 194 | திருநாகைக்காரோணப் புராணம் | சோ. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | 61 | 2506 | 1869 |
| 195 | திருநாவலூர்ப் புராணம் | நடு நா. | இராசப்ப நாவலர் | 19 நூ. | 9 | 514 | 1889 |
| 196 | திருநின்றவூர்த் தலபுராணம் (ஸ்ரீநிவாசபுரம்) | தொ. நா. | – | – | 4 | 130 | – |
| 197 | திருநீடூர்த் தலபுராணம் (மகிழவனம்) | சோ. நா. | வடமலை நாரணக்குடை மன்னர் | – | 14 | 400 | 1908 |
| 198 | திருநெல்லிக்காத் தலபுராணம் | சோ. நா. | – | – | – | – | – |
| 199 | திருநெல்வேலித் தலபுராணம் | பா. நா. | நெல்லையப்பக் கவிராயர் | 19 நூ. | 120 | 6892 | 1869 |
| 200 | திருப்பத்தூர்ப் புராணம் | தொ. நா. | குமாரசாமி முதலியார் | 19 நூ. | – | – | – |
| 201 | திருப்பரங்கிரிப் புராணம் | பா. நா. | நிரம்பவழகிய தேசிகர் | 16 நூ. | 11 | 526 | 1882 |
| 202 | திருப்பருப்பதம் புராணம் (ஸ்ரீசைலம்) | வ. நா. | – | – | – | – | – |
| 203 | திருப்பழூர்த் தலபுராணம் (யோகவன மான்மியம்) | சோ. நா. | வேலையர் | 19 நூ. | – | – | – |
| 204 | திருப்பறியலூர்ப் புராணம் | சோ. நா. | பின்வேலப்ப தேசிகர் | 18 நூ. | 16 | 654 | – |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/ படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 205 | திருப்பனசைப் புராணம் (திருப்பனங்காடு) | தொ. நா. | நாராயணசாமி முதலியார், எல்லப்ப முதலியார் | 20 நூ. | 19 | 1137 | 1910 |
| 206 | திருப்பனந்தாள் தலபுராணம் | சோ. நா. | செஞ்சடை வேதிய தேசிகர் | – | 19 | 599 | 1944 |
| 207 | திருப்பனந்தாள் புராணம் | சோ. நா. | பூவை பிரதட்சிணாதன் | – | 15 | 609 | – |
| 208 | திருப்பாச்சிலாச்சிராமப் புராணம் | சோ. நா. | மெய்ஞான மாமுனிவர் | – | 8 | 505 | – |
| 209 | திருப்பாச்சூர்ப் புராணம் | தொ. நா. | கந்தசாமி முதலியார் | 20 நூ. | 17 | 595 | – |
| 210 | திருப்பாண்டிக் கொடுமுடிப் புராணம் | கொ. நா. | வேங்கடரமண தாசர், கந்தசாமி முதலியார் | 19 நூ. | 12 | 819 | 1895 |
| 211 | திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம் | நடு. நா. | சிதம்பரநாத முனிவர் | 18 நூ. | 18 | 987 | – |
| 212 | திருப்புடைமருதூர்ப் புராணம் (புடார்ச்சுனம்) | பா. நா. | – | – | – | – | – |
| 213 | திருப்புத்தூர்ப் புராணம் | பா. நா. | சங்கர நாராயணன் | – | – | – | – |
| 214 | திருப்பத்தூர்ப் புராணம் | பா. நா. | சொக்கலிங்கஞ்செட்டியார் | 19 நூ. | 12 | 1337 | 1399 |
| 215 | திருப்புள்ளமங்கைத் தலபுராணம் (பசுபதி கோயில்) | சோ. நா. | – | – | – | – | – |
| 216 | திருப்புறம்பயம் தலபுராணம் | சோ. நா. | – | – | – | – | – |
| 217 | திருப்புன்கூர்ப் புராணம் | சோ. நா. | கனகசபைக் கவிராயர் | 19 நூ. | 23 | – | 1907 |
| 218 | திருப்புனவாயிற் புராணம் | பா. நா. | தியாகராச கவிராச தேசிகர் | – | 22 | 926 | – |
| 219 | திருப்பூவணப் புராணம் | பா. நா. | கந்தசாமிப் புலவர் | 17 நூ. | – | 1437 | – |
| 220 | திருப்பெருந்துறைப் புராணம் | பா. நா. | சாத்திரம் சாமிநாத முனிவர் | 18 நூ. | 33 | 1270 | – |
| 221 | திருப்பெருந்துறைப் புராணம் | பா. நா. | – | – | 8 | 850 | – |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/ படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 322 | திருப்பெருந்துறைப் புராணம் | பா. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | 33 | 1656 | 1913 |
| 323 | திருப்பேரூர்ப் புராணம் | கொ. நா. | கச்சியப்ப முனிவர் | 18 நூ. | 36 | 2220 | 1885 |
| 324 | திருப்பைஞ்ஞீலிப் புராணம் | சோ. நா. | மெய்ப்பாத புராணிகர் | – | 25 | 850 | 1927 |
| 325 | திருப்போரூர்ப் புராணம் | தொ. நா. | சபாபதி முதலியார் | 19 நூ. | – | – | – |
| 326 | திருமயிலைத் தலபுராணம் (மயிலை மூதூர்ப் புராணம்) | தொ. நா. | அமிர்தலிங்கத் தம்பிரான் | 19 நூ. | 13 | 600 | 1892 |
| 327 | திருமயிலைத் தலபுராணம் | தொ. நா. | நாதமுனி முதலியார் | 19 நூ. | 20 | 805 | 1929 |
| 328 | திருமயிலைப் புராணம் | தொ. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | – | – | கி. வி. |
| 329 | திருமருகற் புராணம் | சோ. நா. | சுப்பிரமணிய ஐயர் | 19 நூ. | – | – | – |
| 330 | திருமலைத் தலபுராணம் | பா. நா. | சிவராமலிங்கம் பிள்ளை | 19 நூ. | 15 | 753 | – |
| 331 | திருமழுவாடிப் புராணம் (திருமழபாடி) (மழுவைப் புராணம்) | சோ. நா. | கமலைஞானப் பிரகாசர் | 16 நூ. | 8 | 571 | 1908 |
| 332 | திருமாணிக்குழித் தலபுராணம் | நடு நா. | – | – | – | – | – |
| 333 | திருமாற்பேறுப் புராணம் (திருமால்பூர்) | தொ. நா. | பானுகவி அடிகள் | 19 நூ. | – | – | – |
| 334 | திருமுருகன்பூண்டிப் புராணம் | கொ. நா. | வாசுதேவ முதலியார் | 18 நூ. | 11 | 618 | 1867 |
| 335 | திருமுல்லைவாயிற் புராணம் | தொ. நா. | வைத்தியநாத தேசிகர் | – | 8 | 461 | – |
| 336 | திருமூலநகரப் புராணம் | பா. நா. | அரிகரமையர் | 20 நூ. | 9 | 120 | 1812 |
| 337 | திருமேற்றளிப் புராணம் | சோ. நா. | இரேவணசித்தர் | 16 நூ. | – | – | கி. வி. |
| 338 | திருவக்கரைப் புராணம் | தொ. நா. | வணிசேர் நல்லையன் | – | 27 | 519 | – |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/ படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 239 | திருவதிகைப் புராணம் | நடு நா. | வாகீச பக்த நாவலர், க. அப்பாவையர் | 20 நூ. | 26 | 1037 | 1902 |
| 240 | திருவதிட்டகுடி சிவத்தல புராணம் | சோ. நா. | சீநிவாச அய்யர் | 20 நூ. | 19 | 503 | 1952 |
| 241 | திருவரத்துறைப் புராணம் | நடு நா. | அரங்கசாமி ஐயங்கார் | 20 நூ. | 30 | 399 | 1911 |
| 242 | திருவரன்குளத் தலபுராணம் | சோ. நா. | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | – | – | – |
| 243 | திருவருட்டுறைப் புராணம் | நடு. நா. | வடிவேல் முதலியார் | – | – | 709 | – |
| 244 | திருவலஞ்சுழிப் புராணம் | சோ. நா. | இரேவண சித்தர் | 16 நூ. | – | – | கை. வி. |
| 245 | திருவாஞ்சியப் புராணம் | சோ. நா. | களந்தைக்குமரன் | 17 நூ. | 14 | 830 | 1959 |
| 246 | திருவாட்போக்கிப் புராணம் | சோ நா. | வைத்தியநாத தேசிகர். | 17 நூ. | – | 845 | – |
| 247 | திருவாடானைப் புராணம் | பா. நா. | சாமிநாத தேசிகர் | – | – | 557 | 1969 |
| 248 | திருவாமாத்தூர்த் தலபுராணம் | நடு. நா. | தண்டபாணி சுவாமிகள் | 19 நூ. | 2 காண்டம் | 1010 | 1875 |
| 249 | திருவாய்ப்பாடிப் புராணம் | சோ. நா. | இராம கவிராயர் | 18 நூ. | – | – | – |
| 250 | திருவாரூர்ப் புராணம் | சோ. நா. | சம்பந்த முனிவர் | 16 நூ. | 111 | 2929 | 1895 |
| 251 | திருவாலங்காட்டுப் புராணம் | தொ. நா. | – | – | 18 | 726 | – |
| 252 | திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் | பா. நா. | பெரும்பற்றப்புலியூர் நம்பி | 13 நூ. | – | 1753 | 1906 |
| 253 | திருவாலி திருநகரிப் புராணம் | சோ. நா. | கோவிந்தசாமி நாயக்கர் | 19 நூ. | 13 | 501 | – |
| 254 | திருவாவடுதுறைப் புராணம் (துறைசைப் புராணம்) | சோ. நா. | சாத்திரம் சாமிநாத முனிவர் | 18 நூ. | 68 | 3560 | அ.வி. |
| 255 | திருவாளொளிபுற்றூர்ப் புராணம் | சோ. நா | மீனாட்சிசுந்தரம் பிள்ளை | 19 நூ. | 20 | 537 | – |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/ படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 256 | திருவான்மியூர்ப் புராணம் | தொ. நா. | கல்யாணசுந்தர முதலியார் | 19 நூ. | 19 | 1022 | — |
| 257 | திருவானைக்காப் புராணம் | சோ. நா. | கச்சியப்ப முனிவர் | 18 நூ. | 23 | 1555 | 1870 |
| 258 | திருவிடங்கன் புராணம் (இல்லைவிடங்கன்) | சோ. நா. | வேலுச்சாமிப் பிள்ளை | 19 நூ. | — | — | — |
| 259 | திருவிடைக்கழிப் புராணம் | சோ. நா. | குரவை லிங்கன் | — | 18 | 3300 | — |
| 260 | திருவிடைமருதூர்ப் புராணம் | சோ. நா. | ஞானக்கூத்த சிவப்பிரகாச தேசிகர் | 16 நூ. | — | 3000 | அ. வி. |
| 261 | திருவிடையூர்த் தலபுராணம் (மேலச்சேவூர்) | நடு. நா. | அச்லாம்பிகையம்மாள், குழந்தை வேலுப்பிள்ளை | 20 நூ. | — | — | 1899 |
| 262 | திருவியலூர்ப் புராணம் | சோ. நா. | வேலுச்சாமிக் கவிராயர் | 19 நூ. | — | — | 1933 |
| 263 | திருவிரிஞ்சைப் புராணம் | தொ. நா. | சைவ எல்லப்ப நாவலர் | 16 நூ. | 8 | 370 | 1863 |
| 264 | திருவிரிஞ்சைப் புராணம் | தொ. நா. | முத்துதாசர் | 17 நூ. | — | — | — |
| 265 | திருவிரிஞ்சைப் புராணம் | தொ. நா. | சுப்பிரமணிய ஐயர் | — | — | — | — |
| 266 | திருவிளநகர்த் தலபுராணம் | சோ. நா. | — | — | — | — | — |
| 267 | திருவிளையாடற் புராணம் (மதுரை) | பா. நா. | பரஞ்சோதி முனிவர் | 18 நூ. | 3 காண்டம் | 3363 | — |
| 268 | திருவீழிமிழலைப் புராணம் | சோ. நா. | மெய்ஞ்ஞான முனிவர் | — | — | — | — |
| 269 | திருவுசாத்தானப் புராணம் (கோயிலூர்) (சூதவனப் புராணம்) | சோ. நா. | சொக்கலிங்கஞ்செட்டியார் | 19 நூ. | 17 | 1530 | 1929 |
| 270 | திருவுசாத்தானப் புராணம் (கோயிலூர்) | சோ. நா. | அம்பலவாண முனிவர் | 16 நூ. | — | — | — |

| வ. எண் 1 | நூல் 2 | நாடு 3 | ஆசிரியர் 4 | காலம் 5 | சருக்கம்/படலம் 6 | பாடல் தொகை 7 | பதிப்பு 8 |
|---|---|---|---|---|---|---|---|
| 271 | திருவுசாத்தானப் புராணம் | சோ. நா. | பழநியப்பன் சேர்வைக்காரர் | 16 நூ. | – | – | – |
| 272 | திருவுத்தரகோசமங்கைத் தலபுராணம் | பா. நா. | வெள்ளியம்பலவாணத்தம்பிரான் | 16 நூ. | 10 | 445 | 1977 |
| 273 | திருவூறல் தலபுராணம் (தக்கோலம்) | தொ. நா. | கலியாணசுந்தர முதலியார் | – | – | – | – |
| 274 | திருவெண்காட்டுப் புராணம் | சோ. நா. | சைவ எல்லப்ப நாவலர் | 16 நூ. | 18 | 614 | 1905 |
| 275 | திருவெண்காட்டுப் புராண சாரம் | சோ. நா. | – | – | – | 106 | – |
| 276 | திருவெண்ணெய்நல்லூர்ப் புராணம் | நடு நா. | – | – | – | – | – |
| 277 | திருவெமனேச்சுரத் தலபுராணம் | – | ஜயாச்சாமி ஐயர் | 19 நூ. | – | – | – |
| 278 | திருவெள்ளூர்ப் புராணம் - (பேளூர்) | கொ. நா. | சொக்கலிங்கப் புலவர் | 19 நூ. | 13 | 653 | 1927. |
| 279 | திருவெறும்பியூர்ப் புராணம் | சோ. நா. | நாகலிங்க முனிவர் | 19 நூ. | 18 | – | 1890 |
| 280 | திருவேங்கடத் தலபுராணம் | வட நா. | வீரராகவ சுவாமி ஐயங்கார் | 19 நூ. | 59 | 1482 | 1887 |
| 281 | திருவேங்கடாயணம் | வட நா. | மூர்த்தி | 20 நூ. | 2 பாகம் | – | 1985 |
| 282 | திருவேட்டக்குடிப் புராணம் | சோ. நா. | வேலுச்சாமிப் பிள்ளை | 19 நூ. | – | – | – |
| 283 | திருவேட்டீசுரர் புராணம் | தொ. நா. | திருவேங்கடாசலம் பிள்ளை | 20 நூ. | – | 574 | – |
| 284 | திருவேடகப் புராணம் | பா. நா. | சுப்பிரமணிய ஐயர் | 20 நூ. | – | – | – |
| 285 | திருவேற்காட்டுப் புராணம் | தொ. நா. | – | – | – | – | – |
| 286 | திருவைகாவூர்ப் புராணம் | சோ. நா. | வேலைய தேசிகர் | 19 நூ. | 13 | 386 | 1894 |
| 287 | திருவையாற்றுப் புராணம் | சோ. நா. | திரம்பவழகிய தேசிகர் | 16 நூ. | 48 | 2207 | அ. வி. |
| 288 | திருவொற்றியூர்ப் புராணம் | தொ. நா. | ஞானப்பிரகாசர் | 16 நூ. | 16 | 599 | 1869 |

